AR.

துரைத்தனத்தார் அங்கீகரித்தது

# முத்தேவர் சரிதை

இது
சென்னை
பச்சையப்பன் உயர்தரப் பாடசாலைத் தலைமைத்
தமிழ்ப் பண்டிதர்
கா. ர. கோவிந்தராஜ முதலியார்
இயற்றியது



பிரசுரகர்த்தர்:
ரா. லோகநாதம் பிள்ளை,
305, வால் டாக்ஸ் ரோட்டு,
சென்னை.
1928

[விலை அணா 10

# முத்தேவர் சரிதை




இது

சென்னை

பச்சையப்பன் உயர்தரப் பாடசாலைத் தலைமைத்

தமிழ்ப் பண்டிதர்

கா. ர. கோவிந்தராஜ முதலியார்

இயற்றியது



(VIDE FORT ST., GEORGE GAZETTE, PAGE 227, PART I, B. DATED 8th MAY, 1928.)

பிரசுரகர்த்தர் :

ரா. லோகநாதம் பிள்ளை,

305, வால் டாக்ஸ் ரோட்டு,

சென்னை.

 1928 [விலை அணா 10

# FOREWORD



Mr. C. R. Govindaraja Mudaliar is already known to the Tamil world as a great scholar and author. His present work '*Muttevar Charitai*' is indeed a very valuable contribution to Tamil Literature. The book contains the lives of three Vaishnava devotees, told in a very pleasing and dignified style. The language is pure, chaste and simple and free to a large extent from the admixture of Sanskrit words. The book would serve as a suitable one for non-detailed study in the High School forms and I hope that it will meet with the encouragement it deserves.

The get-up of the book is very good and Mr. R. Lokanatham Pillai deserves the thanks of the public for his having published it.

COCANADA, G. DAMODARAM

24—1—28. *District Educational Officer,*

*East Godaveri.*

ஸ்ரீ:

# முத்தேவர் சரிதை

## முன்னுரை

கற்கொல்லன் தன் கைத்திறம் விளங்க உருவமைத்த கருங்கற்கள் பலவிருப்பினும், இயல்பின் ஒளி கொண்ட மணியையே யாவரும் விரும்புவர். மாந்தருள்ளும் நன்கமைந்த உருவிற் பெரியர் பலரிருப்பினும், அறிவிற் சிறந்தாரையே உலகம் விரும்பும். கதிர் ஒளி சென்று பாவாத இடத்தினும் அறிவாகிய ஒளி சென்று பாவிப் பொருள்களை விளக்கும். கதிர் ஒளி ஒரு மரத்தைக் காட்டும்; ஆனால், அம்மரத்தின் தன்மையை விளக்காது. அறிவாகிய ஒளியோ, மரத்தையுங் காட்டி, மரத்தின் தன்மைகளையும் நன்கு விளக்கும். அறிவாகிய ஒளி ஊடுருவிப் பாயுந்தோறும் உலகப் பொருள்களின் புதுமை புதுமையான இயல்புகள் வெளிப்பட்டு, உலகத்திற்குப் பல நன்மைகளையும் களிப்பையும் உண்டாக்குகின்றன. ஆதலின், அதனை உடையாரை உலகம் விழைதல் தக்கதே.

தண்கதிர்ச் செல்வன் தான் பூமியினால் மறைக்கப்படுதல் குறையுந் தோறும் கலை வளர்ந்து விளக்க முறுகின்றனன். அதுபோலவே, ஒருவர்பால் உலகப்பற்று நீங்குந் தோறும் அறிவாகிய ஒளி வளர்ந்து, அவர் விளக்க முறுகின்றனர். ஆனால், அறிவின் முழுமையாகிய ஒளியையும், அதன் முடிவாகிய பயனையும் அடையப்பெற்றோரே மற்றெல்லாரினும்

பெருஞ்சிறப் புறுவர். உண்மைப் பொரு ளுணர்ச்சியே அறிவின் முழுமையாகிய ஒளியாகும். அவ்வுணர்ச்சியைப் பெற்று, ஈடும் எடுப்புமில் இறைவன்பால் ஆராத காத லமைத்த அடியவர்களாய், வேண்டுதல் வேண்டாமை இலாதவனாகிய அவ்வாதி பகவன் தாளை யடைதலே அதனை லெய்துதற்குரிய முடிவாகிய பயனாகும்.

"நன்றாய் ஞானங் கடந்துபோய்
நல்லிந் திரிய மெலாமீர்த்
தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா
முலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்ப துன்பங்கள்
செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே யப்போ தேவீடு
அதுவே வீடு வீடாமே."

என்று பெரியார் பணித்தருளியபடி உலகப் பற்றினை வேரு டன் களைந்தோரே அதனை எய்துதற் குரியராவர். தண் கதிர்ச் செல்வன் பூமியினால் மறைக்கப்படுதல் முழுது நீங் கிய காலத்துக் கலை நிரம்பிப் பொலிந்து விளங்குதல்போல், அத்தகைமை யெய்தினர் பொலிந்து விளங்குவர். அத் தகைய பெரியவர்களுள் வைத் தெண்ணப்படுகின்றவர்க ளாகிய சய தேவர், நாம தேவர், ஞான தேவர் என்னும் முத்தேவர்களின் சரிதைகளே இந்நூலிற் சொல்லத் தொடங்கிய பொருள்களாகும்.

கா. ர. கோ.

## அட்டவணை



## II. நாமதேவர்



## III. ஞானதேவர்

# முத்தேவர் சரிதை

## I. சயதேவர்

### 1. சயதேவருடைய திருவவதாரம்

வடநாட்டில் கண்ணன் எழுந்தருளி யிருக்கும் பதிகளுட் சிறந்ததாகிய சகநாதம் என்னுந் திருப்பதிக்கு அருகில் திந்து பில்வம் என்னும் பெயரினையுடைய ஊர் ஒன்றுண்டு. அதில் வாழும் ஆடவர்கள் கலையறிவிற் சிறந்தவர்கள்; திருமகள் நாதன் திருவடித் தாமரைகள் என்றும் பொலியும் மனத் தடத்தினர்கள். அவ்வூரில் உள்ள மாதர்கள், கலையறிவினாலும் கற்பினாலும் யாவருங் கொண்டாடும் பெருமை வாய்ந்தவர்கள். அத்தகைய நலங்க ளமைந்த ஊரில், அருமறையோர் குலத்திலே, சயதேவர் அவதரித்தனர். இவரை வேத வியாசரது மறு அவதார மென்பர். மறுவற்று விளங்குந் தண் மதியெனத் தோன்றும் இவரது முகப் பொலிவு, 'இஃதோர் தெய்வக் குழவியே' என்று கண்டோர் அனைவருங் கூறும்படி செய்தது.

இவர்தம் பெற்றோர், தம் அன்பை வளர்ப்பதுபோல இவரை வளர்த்துத் தக்க வயதில் உபநயனஞ் செய்வித்தனர்; ஆனால், யாது காரணத்தாலோ கல்வி கற்பித்திலர். மீன் குஞ்சுகளுக்கு நீந்தப் பிறர் கற்பித்தல் வேண்டுமோ? அவை தாமாகவே நீந்துமன்றே? அவற்றைப் போலத் திருமகள் திருவருள் பெற்றுக் கருவிலே திருவுடையராய் அவதரித்தவராதலின், இவர் தாமாகவே பல கலைகளை நன்கு கற்று, உடுக் குலங்களுக்குள் தண் கதிர் சிறந்து விளங்குதல் போல், உலக மாந்தருக்குட் சிறந்து விளங்கினர்.

## 2. சயதேவர் கீத கோவிந்தம் என்னும் நூலை இயற்றல்

இங்ஙனஞ் சிறந்து விளங்கிய இவர், 'கண்ணன் கண்ணல்ல தில்லையோர் கண்ணே,' என்று பெரியார் பணித்தருளியபடி, கண்ணன்பா லன்றி மற்றொன்றன்பாலும் மனத்தைச் செலுத்தாதவராய், 'பத்துடை யடியருக்கு எளியன்' ஆகிய அப்பெருமானுடைய திருவடி மலர்களையே தம் திருமுடியிற் சூடி, அவ்வாதி பகவனுடைய கலியாண குணங்களையும், 'மாயச்சகடம் உதைத்து, மருதிறுத்து, ஆயர்களோடு போய் ஆநிரை காத்து, அணி வேயின் குழலூதி, வித்தகனாய் நின்ற' செயல்களையும் போற்றிக் களிப்பாராயினர்.

இவ்வாறு கண்ணனிடம் பேரன்பு கொண்ட சயதேவர் கீத கோவிந்தம் என்னும் நூலையியற்றியருளினர். அஃது அவருடைய அன்பின் பெருக்கு ஒரு வடிவுற்று வெளிப்பட்டாற்போல விளங்கியது. யாவரும் அதனைக் கண்டு அன்போடு ஓதிக் களிக்கலாயினர்.

## 3. சகநாதன் சாத்துவிகன் என்னும் மன்னனது செருக்கை ஒழித்து, அவனை ஆட்கொள்ளல்

அக்காலத்தில் சாத்துவிகன் என்னும் மன்னன் சகநாதத்தை ஆண்டு வந்தனன். அவன் கல்வி கேள்விகளிற் சிறந்தவன்; கவி பாடுதலினும் வல்லவன்; ஆயினும், 'கடலே அனையம்யாம் கல்வியால்,' என்று தன்னைத்தானே புகழ்ந்துகொள்ளுஞ் செருக்குடையவன். செருக்குடையவனாகிய ஒருவன் பல நற்குணங்களை யுடையவனாயினும், அந்நற்குணங்களால் அவனுக்குண்டாகும் புகழைச் செருக்கென்னும் அத் தீக்குணம் சூரியனையும் சந்திரனையும் மேகம் மறைப்பதுபோல் மறைத்துவிடு மல்லவா? அக்கோமான்

கற்கவேண்டுவனவற்றை நன்கு கற்றிருந்தும், அத் தீக் குணத்திற்கு அடிமைப்பட் டிருந்தான்.

அவ்விறைவனும் ஒரு நூலை யியற்றி வெளியிட்டனன். அது சயதேவர் இயற்றிய கீதகோவிந்தம்போன்ற நூலே. எனினும், அதை ஒருவரும் விரும்பி ஏற்றுக்கொள்ளவில்லை. அம்மன்னன் அதனை யுணர்ந்து, தன்னாட்சிக் குட்பட்டா ரனைவரும் தன்னூலை ஓதுதல் வேண்டும் எனக் கட்டளை யிட்டான். 'சிறந்த பொருளாயினும், அதனை யுடையார் தாமே வலியச் சென்று கொடுப்பின், உலகத்தவர் அதனை யேற்றுக்கொள்ளார். உலகத்தார்க்கு அதனிடத்தில் அவ மதிப்பே யுண்டாகும்,' என்பதனைக் கருதாமல் அம்மன் னன் பிறப்பித்த கட்டளை, அந்நாட்டிலுள்ளா ரனைவர்க்கும் அவன்பால் வெறுப்பினை யுண்டாக்கியது.

அப்பதியின்கண் உள்ள புலவர்கள் யாவரும் ஒருங்கு கூடி, அவ்விறைவனிடஞ் சென்று, அவனுக்கு முறைப்படி வந்தனத்தைச் செலுத்தி நின்றார்கள். அவ்விறைவன் அப் புலமுடையாரை யுபசரித்துத் தக்க இருக்கைகளில் வீற் றிருக்கச் செய்து, அவர்களை நோக்கி, "அறிஞர்களே, நீங்கள் என்பால் எய்தியதன் காரணம் யாது?" என்று கேட்டனன். அப்புலவர்களுள் ஒருவர் எழுந்து நின்று, காவலனை நோக்கி, "கலையறிவினையுடைய வேந்தரே, தங்கள் நூலைப்பற்றித் தாங்கள் இந்நாட்டினருக்குப் பிறப் பித்த கட்டளையைக் கண்டு நாங்கள் தங்களிடம் வந்தோம். நாங்கள் சொல்வனவற்றைத் தாங்கள் பொறுமையுடன் கேட்டருளல் வேண்டும். உலகில் யாவராயினும், அவரவர் இயற்றும் நூற்கள் அவரவருடைய இயற்கை யறிவு, கலை யறிவு, மனத்தின் இயல்பு இவற்றிற்கு ஏற்றபடியே அமை யும். ஆயினும், ஒவ்வொரு நூலினும் அமைந்துள்ள உயி ராகிய பொருளின் தன்மை அவரவர்தம் மனத்தியல்பின்

படிதான் அமைந்திருக்கும். மணிகளினியல்பினை யுணர்ந்தா னொருவன் மணிகளை நன்கு ஆய்ந்து, அந்த அந்த மணிக் கேற்ற மதிப்பை யளிப்பதுபோல், அறிஞர்களும் நூற்களை நன்கு ஆய்ந்து, அததற்குரிய இடங்களை அததற்கு வழங்கு வார்கள். இனிய பழங்களுள்ள மரங்களைப் பறவைகள் தாமே சென்றடைந்து, அப்பழங்களை யுண்கின்றன; அம் மரங்களை வைத்து வளர்த்தவர்கள் அப்பறவைகளை யழைப்ப தில்லை. அதுபோலவே, ஒருவர் இயற்றிய நூல் சிறந்ததா யிருப்பின், அவர் தம் காலத்துள்ளவர்கள் ஏதேனுந் தமக் குள் உண்டான மன வேறுபாட்டால் அதனை ஏற்றுக் கொள்ளாவிடினும், அவர்க்கும் பிற்காலத்தவர்கள் அதனை ஏற்றுக்கொள்வார்களென்பது திண்ணம். இறைவரே, இங் ஙனமாகிய உலக இயல்பினைத் தாங்கள் கருதாமல், தங்கள் நூலைக் குறித்து இந்நாட்டினருக்கு இட்ட கட்டளை யைக் கண்டு நாங்கள் பெரு வியப்பெய்தினோம். தங்கள் கட்டளை, தனக்கு விருப்ப மில்லாத ஒரு மாதை மணந்து வாழும்படி ஒருவனை வற்புறுத்துதலை ஒப்பதா யிருக்கின் றது. அற நெறியில் வழாத அரசரே, தங்கள் நூலைப்பற்றி இந்நாட்டினர் கொண்டுள்ள கருத்தை நாங்கள் முடிவாகத் தெரிவித்துவிடுகின்றோம். அது, 'சயதேவருடைய நூலைப் போல் தங்களுடைய நூல் ஏற்று ஓதுதற்கு ஒரு சிறிதும் உரியதன்று' என்பதே. நாங்கள் யாது உண்மையோ, அதனைக் கூறினோம். தாங்கள் உண்மையை உணர்ந்து அதற்கேற்றபடி நடத்தல் தங்கள் நீதிக்கேற்றதா யிருக்கின் றது. அன்னை முனியினும், குழவி அவ்வன்னையின் அரு ளையே நோக்குதல்போலத் தாங்கள் முனியினும், தங்க ளிடந்தான் குடிகள் தங்கள் கருத்தினைத் தெரிவித்துக் கொள்ளும் உரிமை யுடையவர்களாவார்கள்" என்று கூறி, உட்கார்ந்தனர்.

அரசன் அவர்கள் கருத்தை யுணர்ந்து, அவர்களை நோக்கி, "அறிஞர்களே, 'காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சாம்.' அதுபோல் எவர்க்கும் தாமியற்றிய நூற்களில் நன்கு மதிப்புள்ளதாதல் உலகில் இயல்பே. அது கொண்டே நான் இக்கட்டளையைப் பிறப்பித்தேன். அறிஞர்களாகிய நீங்கள் கூறிய மொழிகளால் என் மனத்திற் கலக்கம் எய்திற்று. அறிஞர்களாகிய உங்கள் மொழியைத் தள்ளிவிட்டு, 'முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா,' என்னும் பழமொழிப்படி என் கருத்தையே நான் நிறைவேற்ற எண்ணிலேன். சயதேவர் நூலையும் என்னூலையும் எடுத்துக்கொண்டு போய்ப் பகவானுடைய திருமுன் வைப்போம். உலகங்களுக்கெல்லாம் இறைவனாகிய பெருமான் எதை விரும்பி எற்றுக் கொள்கின்றனனோ, அதனையே நாம் சிறந்ததெனக் கொள்வோம்," என்றனன். அப்புலவர்கள், "அப்படியே செய்தும்! செய்தும்!!" என்றார்கள்.

அங்ஙனமே அவ்வேந்தனுடன் அப்புலமிக்கோர் அன்றிரவு அவ்விரு நூற்களையும் எடுத்துச் சென்று, சகநாதன் திருமுன்பு வைத்து, கோயில் கதவினைத் தாளிட்டு, முத்திரை வைத்துத் திறவுகோலை அவ்வரசனிடங் கொடுத்துச் சென்றனர். மறு நாட் காலையில் அப்புலவர்கள் மன்னனுடன் கோயிலுக்குச் சென்று, அத்தளியின் கதவைத் திறந்து பார்த்தார்கள். சயதேவருடைய நூல் முன்பு அவர்கள் வைத்தபடியே பகவானிடம் இருந்தது. அவ்வேந்தனது நூல் சந்நிதிக்கு வெளியிற் கிடந்தது.

அம்மன்னர் பிரான் அதனைக் கண்டு, மிகவும் மனம் வருந்தி, "உலகங்களுக்கெல்லாம் ஒரு தனி இறைவனாய், ஞானமுதற்றனிவித்தாய் விளங்கும் சகநாதனுக்கு முன்னே நின்று, உயர்வற உயர்நல முடையவனாகியும், அயர்வறும் அமரர்களின் தலைவனாகியும், உலகங்களுக்கெல்லாம் தனித்

தந்தையாகியும், வேண்டுதல் வேண்டாமை இல்லாதவனுகி யும் உள்ள இறைவனே, நீ ஒருவர்பால் விருப்பும், ஒருவர் பால் வெறுப்பும் கொள்ளுதல் உன்னுடைய நடுநிலேக்கு எற்றதாகுமோ? உன்னுணேயின் இயங்கும் ஞாயிறு ஒரு வருக்குத் தண்மையாகவும், மற்ருெருவருக்கு வெம்மையாக வும் இருப்பதின்றே? பெற்றோர்கள் ஒரு மகவின்பால் அன் பினேக் காட்டி, மற்ருெரு மகவினே வெறுப்பாராயின், அவர் களே உலகம் வெறுக்கு மன்றே? 'உடன் மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்' என்னும் பெரியார் வாய் மொழிக்குத் தாழ்ந்த பொருளில் நீ இல்லே யென்று எவரோ பொருள் கூறத் துணிவார்? அங்ஙனம் கூறின், அது நின் னிறைவுக்குக் குறை கூறியதா மன்றே? உன்னேயே பொருளாகக் கொண்ட நூற்கள் இரண்டில் ஒன்றை உயர் வாகவும் மற்ருென்றைத் தாழ்வாகவும் நீ கொள்ளுதியேல், அவ்வுயர்வு தாழ்வுகள் சொல்லேச் சார்வனவாமோ, பொருளேச் சார்வனவாமோ? சொற்களுக்கு உயர்வு தாழ்வு கள் பொருளான் உண்டாவன வன்றிப் பிறிதான் உண்டா வன அலவே! பாரதப் போரில் ஞாயிற்றின் ஒளியைப் பேரொளி யமைந்த கைத் திகிரியினுல் மறைத்து, மாலேப் போதை யுண்டாக்கிய மாயனே, இத் தீமையை என்பால் என் புரிந்தனே? உன்னுல் வெறுக்கப்பட்டபின் நான் இவ் வுலகில் வாழ்தலிற் பயனில்லே. என்னுயிரை உன் திருவடிக் கீழ் விடுகின்றேன்" என்று கூறி, வாளே உருவினன்.

உடனே சகநாதப் பெருமான் அவ்வேந்தர்பிரான் முன்னே திங்களும் ஞாயிறுமெனத் திகழும் வளேயுந் திகிரி யும் இருபாலுந் திகழ, மணிமலேயைச் சூழ்ந்த பொன்மலே யென நீலத்திருமேனியிற் பொன்னுடை பொலிய, மேகத்தி னிடையில் மின்னற்கொடி படர்ந்து விளங்குதல்போல அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கை திருமார்

பிலே விளங்க, மதிக்குக் குளிர்ச்சியை யளிக்குந் திருவருளின் உறைவிடமாகிய திருமுக மண்டலத்தின் ஒளி நாற்றிசையினும் படரப் பைங்கூழ்கள் உள்ளங் குளிரும்படி தோன்றும் கருமுகில்போல அவ்வரசன் உள்ளங் குளிரும்படி தோன்றினன்.

அம்மன்னர் மன்னன் ஈடும் எடுப்புமில் அவ்விறைவனைக் கண்டு, களிப்பென்னுங் கடலிலே மூழ்கி, மனங் கரைந்து, மெய்சிலிர்த்து, இருகை கூப்பிச் சிரத்தின் ஏற்றி வணங்கி, ஆடியாடி, அத்தனிமுதற் பெருமானுடைய பல் புகழ்களைப் பாடிப் பாடி, 'நமோ நாராயணாய' என்று போற்றி நின்றனன்.

உயிர்களுக்கெல்லாம் ஒருயிராகிய சகநாதன் அம் மன்னனை நோக்கி, "அன்பனே, அறநெறியின் வழாதவனாகவும், மன்னுயிர்களின்பால் அருள் நிரம்பிய மனத்தினனாகவும், என்பால் பேரன்பமைந்தவனாகவு மிருக்கும் உன்பால் ஒரு தீக்குண மிருக்கின்றது. அதனை நீக்கி உன்னைத் தூயவனாக்குதற் பொருட்டே உன்னுடைய நூலை யேற்றுக் கொள்ளாம லொதுக்கினேன். அத்தீய குணம் என்னெனின், 'என்னை யொப்பார் பிறர் இலர்' என்று நீ எண்ணும் செருக்கே யாகும். சீரிய புல்முடையோனே, இனி அஃதுன்னைவிட்டு நீங்குவதாக. தூய மனத்தினராகிய சயதேவர் இயற்றிய நூல் கலப்பில்லாத பொன்போன்றது. அந்நூலிலுள்ள கவிகள் ஒவ்வொன்றும் மறையினும் எனக்கு மகிழ்ச்சியை விளைக்கும். அந்நூலின் கவிகளைப்போற் சிறந்தனவாகிய கவிகள் நின்னூலினுஞ் சில வுள. அக்கவிகளைச் சயதேவர் நூலினிடையிற் சேர்த்து வைக்கின்றேன்" என்று கூறியருளி, அம்மன்னர் பிரானுடைய நூலிலிருந்து இருபத்துநான்கு கவிகளை யெடுத்துச் சயதேவருடைய நூலிலே தன் னணிமலர்த்திருக்கையால் எழுதிவைத் தருளினன்.

தேவதேவனாகிய அப்பெருமானுடைய அருட்டிருச் செயலைக் கண்டு, சொல்லற்கரிய களிப்பினை யெய்தி, "ஒரு விளையாட்டளவில் உலகம் யாவையும் உளவாக்கலும், நிலை பெறுத்தலும், நீக்கலுமாகிய செயல்களைப் புரிந்தருளும் முதற்றனிவித்தே, நின்னடிய ரடிப்பொடிக்கும் ஒவ்வாத எளியேன் முன் எழுந்தருளி, எளியேன் பொருட்டுச் செய்தருளிய இத் திருவிளையாடல் என்னே! அடியவர்களின் அகச் சிந்தாமணியே, போற்றற்கரிய பெருந்தகையாளராகிய சயதேவர் அருளிய நூலினை எளியேன் புன்சொற்களா லாகிய நூல் ஒத்துளதெனக் கொண்டிருந்த என் புல்லிய கருத்தினை மாற்றியருளினை. அன்றியும், அவர்தம் அன்பின் வளர்ந்திகழும் மணிமேகலையினிடை என் புன்கவிகளையும் உன் பொன்மலர்க்கையால் எழுதிச் சேர்த்தருளினை. இச்செயல், யான் பண்டைக் குலத்தைத் தவிர்ந்து, நின் தொண்டக் குலத்தில் ஒருவனாகும்படி செய்த செயலே யாகும். வானவர் பொருட்டுக் கடல் கடைந்து, அமுதங் கொண்டருளிய இறைவனே, எனக்கு எண்ணுதற்கரிய இன்னருள் புரிந்தனை. போற்றி! போற்றி!! நின் திருவருள் போற்றி!!!" என்று அத்திருமகள் கொழுநனைப் பல்படியாக ஏத்திப் பணிந்தனன் அம்மன்னன்.

'மூலமே!' என்ற களிற்றின்முன் நீல மேகம்போல வந்து நின்று, அதற்கருள் புரிந்த ஆழியங் கையன், அம் மன்னர் மன்னனை நோக்கி, "அன்பனே, நினக்கு நலமுறுக" என்று வாழ்த்தி, மறைந்தருளினன்.

பின்னர், அம்மன்னர் மன்னன், "எம்பெருமான் என்னை யாட்கொண்டருளினன்; யான் பேரின்ப நிலையைப் பெற்றவனானேன். இனி நான் எய்தற்கரியது யாதுளது?" என்று களிகூர்ந்து, அரண்மனையை யடைந்து, செருக்கினை யறவொழித்து, தன் பெயர்க்கேற்ப அமைதியான குண

மூடையவனய், ஆராத காத லடியவனய் இனிது விளங்கினன்.

## 4. சயதேவர் இல்லற மேற்றல்

அப்பதியில் மறை முதலிய நூல்களை ஐயந் திரிபற நன்கு கற்றவனும், அன்பு அருள் ஈகை முதலிய நற்குணங்களுக்கெல்லாம் இருப்பிடமானவனுமாகிய ஒரு மறையவனிருந்தனன். அவனுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அந்நான்மறைச் செல்வன் அக் குழந்தைக்குப் பதுமவதி என்று பெயரிட்டு, 'இக்குழவி பகவானுடைய திருவருளால் நாமடைந்த பெருஞ் செல்வம்,' என்று அன்புடன் வளர்த்து வந்தனன்.

அச்சீரிளஞ் செல்வி வளர்ந்து, கலைகள் பல கற்றுத் தக்க பருவமடைந்து, கருமுகிலன்ன குழலும், மதியன்ன முகமும், பிறையன்ன நுதலும், நாண்மலரன்ன கண்களும், முத்தன்ன முறுவலும், கமுகன்ன கழுத்தும், கழையன்ன தோள்களும், துடியன்ன இடையும், பிடியன்ன நடையுமுடையவளாய், முற்றுந் துறந்த யோகியர்களும், "இப் பெண்ணரசியுடன் இல்லறமேற்று இனிது வாழ்தலே எவற்றினுஞ் சிறந்த நல்லறமாகும்" என்றெண்ணும்படி செய்ய வல்ல எழிலுடன் விளங்கினள்.

அம்மறையவர் தலைவன், அச்செல்வப் பெண்ணரசியின் வனப்பினைக் கண்டு, 'அழகின் எல்லையென விளங்கும் இச் செல்வ நங்கையைத் திருமகள் நாதனகிய அணி முகில் வண்ணனுக்கே மணம்புரிவிப்பேன்' என்று உறுதி கொண்டிருந்தனன். அப்பொற் பாவையின் எழின்மிகு உருவினையும், நலமுறு குணங்களையும் அம்மறைமொழியாளன் சுற்றத்தார்களிற் சிலர் கண்டும் கேட்டும் அறிந்து, தனித் தனி வந்து, அந்நங்கையைத் தங்கள் மைந்தர்களுக்கு மணம்புரி

விக்கும்படி கேட்டனர். அவ்வருமா மறையோன், 'இவள் கண்ணனுக்கே உரியவளாயினள்,' என்று அவர்களுக்குச் சொல்லி வந்தனன்.

இங்ஙனம் உறுதிகொண் டிருக்கும் அம்மறையவன் கனவின் ஒரு நாள் இரவு சகநாதன் தோன்றி, "மறையோனே, உன்னுடைய செல்வியை எல்லா நலத்தினும் என்னை யொப்பவராகிய சயதேவருக்கு மணம் புரிவிப்பா யாக; நீ விரும்பும் நன்மைகளை யெல்லாம் இனிது எய்துவாய்," என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினன்.

அவ்வந்தணன் மறு நாள் வைகறைப்போது விழித்தெழுந்து, அத்தேவதேவன் தன் கனவில் தோன்றியதை யெண்ணி, மனங் கரைந்து, ஆதி பகவனாகிய அப்பெருமானைப் பொருளார் பல மொழிகளாற் போற்றுதல் புரிந்து, 'எம்பெருமான் பணித்தருளியபடியே புரிவல்,' என்றுட் கொண்டு, தன் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு சென்று, சயதேவரைக் கண்டு, உலகுயிர்க்கெலா மொரு தனி முதல்வனாகிய திருமகள் கொழுநன் தன் கனவிடைத் தோன்றித் திருவாய் மலர்ந்தருளியதை அவரிடம் கூறி, அவரை அன்புடன் தன் மனைக்கழைத்துச் சென்று, திருமகளன்ன உருவுறு தன் திருமகளை அவருக்கு மணம் புரிவித்தனன். சயதேவர், கற்பும் பொற்பும் ஓருருக் கொண்டுற்றாற்போன்ற அம்மனைக் கிழத்தியோடு மனைக்குரிய அறங்களை வழுவாதியற்றித் தாமரைக் கண்ணன்தன் மலரடிகளைத் தூயதாகிய தம் மனத்தின்கண் அமைத்துப் போற்றி வாலானர்.

## 5. வணிகன் ஒருவன் சயதேவரை யடைந்து உபதேசம் பெறுதல்

அந்நாட்டில் வணிகன் ஒருவன் இருந்தான். அவன் செல்வத்திற் சிறந்தவன்; அன்பு, அருள், ஈகை, வாய்மை

முதலிய நற்குணங்கள் நன்கமையப்பெற்றவன்; திருமகள் கேள்வனாகிய பெருமான் இறைப்போதும் நீங்காது இனிதுறையும் திருமனத்தினன். அவன் சயதேவரையணுகிச் சொல்லற்கரிய அன்புடன் அவரைப் போற்றி வணங்கினன். சயதேவர் அவனது அன்பின் மிகுதியைக் கண்டு, அவன்பால் தாமும் அன்பும் அருளும் மிக்கவராய், அவனை வாழ்த்தி, அவனுக்குப் பிறவிப் பெருங்கடலைக் கடத்தற்குரிய புணையாகும் பொருண்மொழிகளைப் புகன்றருளினர். அவ்வணிகன் கண்ணீர் பெருக, மெய் சிலிர்த்திருகை கூப்பி, அவரைப் பணிந்து போற்றிப் பிறகு அவரது பொருள் மொழியாகிய தோட்டியினால் ஐம்புலக்களிறுகளின் வலியினை யடக்கித் தன் வழிப்படுத்தி ஒரு வழியுற்ற தன் மனத்தில் ஈடும் எடுப்புமில் இறைவனை யமைத்துப் பல்காற் போற்றிக் களிகூர்ந்தனன்.

## 6. வணிகன் சயதேவரைத் தன் ஊருக்கு அழைத்துச்சென் றுபசரித் தனுப்புதல்

பிறகு அவ்வணிகன் சயதேவரை நோக்கி, "அடிகாள், அடியனேன் இல்லத்திற்கு எழுந்தருளுதல் வேண்டும்" என்று வேண்டினன். சயதேவர் அவ்வணிகர் பிரானுடைய அன்பிற் குகந்து, அவனது வேண்டுகோட் கிணங்கி, அவனுடன் அவனது ஊருக்குச் சென்று, அவன் மனையிலே தங்கினர். அந்நாய்கர் தலைவன் அந்த மெய்ஞ்ஞானச் செல்வரை அன்புடன் பலவகையாக உபசரித்து வந்தனன். சயதேவர் அவனுடைய உபசாரங்களை யேற்று, ஒரு மாத காலம் அங்கிருந்தனர்.

பின்பு ஒரு நாள் அவர் அவ்வணிகனை நோக்கி, "அன்பனே, உனக்கு நலம் பெருகுக. உன் அன்பு அளவு கடந்தது. நீ ஒரு நாள் போலவே இவ்வொரு மாத காலமும்

என்னை உபசரித்தாய். உன்னுபசரிப்பு என் மனத்தை முற்றும் உன்பா லாக்கிவிட்டது. நற்குணச் செல்வனே, நீ விரும்பும்போது நான் உன் மனைக்கு வருவேன். அன்புடையோனே, நின் அன்பு நீடு வாழ்க. எனக்குச் சக நாதம் போக விடை தருக" என்றனர்.

அவ்வணிகர் தலைவன் அவருடைய திருவடித் தாமரை மலர்களை முடியிற் சூடி நின்று, அவரை நோக்கி, "என்னைக் குடியுடன் ஆட்கொண்டு, ஏதமில் இன்பம் எய்த அருளிய எம்மடிகாள், ஒரு மதியாக இச்சிறு குடிலில் உகந்தருளியிருந்து, அடியோமுக்கு உய்தற்குரிய அருமதி பலவும் புகட்டி யருளினீர்கள். இவ்வண்ணமே என் ஆயுளளவும் தங்கள் திருவடிகளை ஆதரித்துத் தங்கள் இன்மொழி யமுதமுண்டு களித்திருக்க எண்ணினேன். தாங்கள் இன்று என்னைப் பிரிந்து செல்ல நினைப்பதே!" என்று கூறிக் கண்ணீர் பெருக்கினன்.

சயதேவர், "அன்பனே, மனம் வருந்தலை.

'புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்.'

என்பது மறைமொழி யன்றே? அன்புடையார் சேய்மையி லிருப்பினும், அவருடைய மனம் தம் அன்புக்குரியாரிடத்திலேதான் தங்கியிருக்கும். நல்லியலாள, உன்னை யான் பிரிந்து செல்கின்றேன் என்று நினையற்க. யான் எங்கிருப்பினும், என் மனம் நின்பாலதே யாம். விடை தருக" என்றனர்.

அவ்வணிகர் குல விளக்கன்னான், "எம்மடிகாள், அடியேன் பண்டைக் குலத்தைத் தவிர்ந்து, குடியுடன் தங்கள் திருவடிக் காட்செய்யும் தொண்டக் குலத்தினனாகி யுய்ந்தேன். இனி யடியேனுக்கு நிகராவார் பிறரில்லை" என்று

மொழிந்து சென்று, 'பொருளை இவரிடங் கொடுப்பின் இவர் கைக்கொள்ளார்' என்பதைத் தன் மனத்துட் கொண்டு, அப்பெருந் தகையாளர் அறியாதபடி பொன்னு லும், மணிகளாலுமாகிய பல அணிகளையும், அவர் மனை விக்கு வேண்டிய பல பட்டாடைகளையும், பொருளையும் ஒரு தேரில் அமைத்து, தன் பணியாளர் இருவரை யழைத்து, "நீங்கள் இவ்வருட் கடலாகிய ஞானச் செல் வரைத் தேரேற்றிக்கொண்டு சென்று, இவருக்கு யாதொரு தீமையும் நேராதபடி சகநாதத்திலே இவரது திருமனை யிலே சேர்ப்பித்து, இத்தேரில் உள்ள ஆடைகளையும் அணிகளையும் பொருளையும் இவருடைய மனைவியார்பாற் கொடுத்துவிட்டு வருவீர்களாக" என்று கட்டளையிட்டுச் சயதேவரைத் தேரில் ஏற்றி அவர்களுடன் அனுப்பினன்.

### 7. வணிகன் பணியாளர் சயதேவருடைய கை கால்களை வெட்டி, அவரைப் புதரில் எறிதல்

வணிகனுடைய பணியாளருள் ஒருவன் தேரைச் செலுத்தினன். தேரானது அந்நாய்கன் ஊரைக் கடந்து, பல மரங்களும் புதல்களும் அடர்ந்துள்ள ஒரு காட்டைக் கிட்டியது. உடனே பணியாளர் இருவருள் ஒருவன் சய தேவரை நோக்கி, "சுவாமி, என் மனைவி கருவுற்றிருக் கின்றாள். அவள் கருவுயிர்க்குங் காலம் அணுகிவிட்டது. ஆதலின், நான் என் இல்லத்திற்கு விரைந்து செல்லுதல் வேண்டும். விடைதந் தருள்வீர்" என்று கேட்டான். அங்ஙனமே மற்றொருவனும், "சுவாமி, யானும் இன்றி யமையாததொரு வேலையின் பொருட்டு விரைவின் என் மனைக்குச் செல்லுதல்வேண்டும். விடையளித் தருள்வீர்" என்றனன். அவ்வருண்மனப் பெரியார் அவர்களுடைய வேண்டுகோட் கிணங்கி, அவர்களுக்குப் போக விடை

கொடுத்தனுப்பி, தேரைத் தாமே செலுத்திக்கொண்டு சென்றனர்.

அத்தீமனக் கொடியோர்கள் சிறிது தூரம் சென்று, மீண்டு மறைவாக வந்து, தேருக்கு முன்னே நின்று, சய தேவரை அதட்டித் தேரை நிறுத்தச் சொன்னார்கள். மெய்ஞ்ஞானச் செல்வராகிய சயதேவர் உடனே தேரை நிறுத்தி, அதினின்றிறங்கி, அக்கொடியவர்களை நோக்கி, "அன்பர்களே, யான் என்னுடன் பொருள் ஒன்றுங் கொணர்ந்திலேன். இத் தேரை வேண்டின், கொண்டு செல்லுங்கள்," என்று கூறி நடந்தார். அக்கொடு மனக் கயவர்கள், "நாம் இவரை மேற் செல்லவிடின், இவர் சென்று நமது தலைவனாகிய வணிகனுக்கு இச் செய்தியைத் தெரிவிப்பர். பிறகு அதனால் நமக்குத் தீமையுண்டாம்" என்று தமக்குட் பேசிக்கொண்டு விரைந்து சென்று, அவ் வன்பரைப் பற்றி, அவருடைய கைகளையும் கால்களையும் வெட்டி, அவரை ஒரு தூற்றிலே போட்டுவிட்டு, அத்தேரி லுள்ள பொருள்களையெல்லாங் கைக்கொண்டு சென்றார் கள். சயதேவர் அதனால் சிறிதும் துன்புறாமல், கண்ணன் கழலிணைகளைத் தம்முடைய செய்ய மனமலரி லிருத்தி, யோகத் தமர்ந்திருந்தனர்.

## 8. விந்தியநாட் டிறைவன் சயதேவரைத் தன்னாட்டிற்குத் தேரி லேற்றிச் செல்லுதல்

அன்று அக்காட்டில் விந்தியநாட் டிறைவன் வந்து, பகற்போது முழுதும் வேட்டை யாடி, மாலைப்போதில் ஓரிடத்தில் தங்கினன். அங்ஙனந் தங்கிய வேந்தன், கண்ணையும் மனத்தையும் கவரும் ஒளியொன்று தோன்றக் கண்டு, மிகவும் வியப் பெய்தி, "இஃதென்னே! இது நாம் இதுவரையிற் கண்டறியாத பேரொளியாய் இருக்கின்றதே!

இது நெருப்பொளியாயின் புகை யிருக்குமே! இஃதோர் புதுமையாகிய ஒளியேயாகும். இஃது இன்ன ஒளி யென்பதனை நாம் நன்கறிதல்வேண்டும்'' என்று கருதி, அவ்வொளி தோன்றும் இடத்தை நோக்கிச் சென்றனன். அப்போது சயதேவர், "அச்சுதா, மாதவா, கோவிந்தா, கேசவா, நாராயணா, தாமோதரா'' என்று திருமகள் கொழுநன் திருநாமங்களைக் கூறிக்கொண் டிருந்தார்.

அவரது நிலையினைக் கண்டு அம்மன்னர்பிரான் வியப்பும், திகைப்பும், மனக் கலக்கமும் எய்தி, "ஞானச் சுடராய் விளங்கும் இப்பெரியார்க்கு இவ்விடுக்கண் எவ்வாறு உண்டாயிற்று? இவ்வருட் பெருங்குரவருக்கு இங்ஙனம் இன்னல் புரிந்தார் யாவர்? ஓ! தேவதேவா, இஃதென்னே நின் திருவிளையாட்டு! பத்துடை யடியவர்க் கெளியனாய் விளங்கும் நீ, மெய்ஞ்ஞானச் சுடராய், மெய்த்தவக் கொழுந்தாய், குணக்குன்றாய், நின் அன்பாய் விளங்கும் இப்பெருந்தகையார்க்குற்ற இத்தீமையைக் கண்டு எவ்வாறு பொறுத்திருக்கின்றனை? யானையின் துயரை நீக்கி, அதற்கின்னருள் ஈந்த ஆதிமூலனே, ஒருவருக்குந் தெரியாதிங்கு உன் மாயை! நீ தசரதன் மதலையாய்த் தோன்றிப் பலரை நின்னிற் பெரியாரெனக் கொண்டு தொழுதனை. 'அகலகில்லேன் இறையும்!' என்று உன்னுடைய திருமார்பிலே என்றும் விளங்கும் திருமகளாகிய சீதையை இராவணன் கவர்ந்தானென்று கூறி யழுதனை. நந்தகோபன் மைந்தனாய் அவதரித்து, யசோதையின் மனங்கரையவும், சிலர் நின்பாற் சினங்கொள்ளவும், சிலர் களி கூரவும் நீ புரிந்த மாயக் கூத்துகள் சிலவேயோ! 'நின்னொரு பேச்சு எனக்குத் தலைச் சுமையாச்சு' என்பதுபோல் நினக்கு இது திருவிளையாட்டாயிருக்கின்றது; எம்போன்றார்க்குப் பெருந் துயராகவன்றோ இருக்கின்றது!'' என்று கூறி, மயர்வறு மமார்கள் தலைவ

ளுகிய பெருமானைப் போற்றினன். அப்போது சயதேவர் கண்களைத் திறந்து, அம்மன்னர் பிரானை நோக்கினர். அவ் விறைவன் உடனே அவரை வணங்கி, "எம் அடிகாள், தங்கட்கு இத்தீமையைப் புரிந்தார் யாவர்? பணித்தரு ளுக. அவரை இப்பொழுதே தேடிப் பிடித்துத் தடிந்திடு கின்றேன்" என்றனன்.

சயதேவர் அவ்விறைவனை நோக்கி, "வேந்தனே, இத்தீமை புரிந்தது ஊழேயன்றிப் பிறரல்லர். அதனை நீ தேடிப் பிடித்தல் வேண்டா. அவரவருடைய ஊழ், அவ ரவரைத் தொடர்ந்தே நிற்கும். அதனைத் தடிதல் நின் ஞல் இயலாது. ஊழ் தன் பயனை விளைவித்தன்றி நீங் காது,

'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்'

என்று கூறியருளினர்.

அதனைக் கேட்ட அம்மன்னர் பிரான் கண்களிலிருந்து நீர் அருவியெனப் பெருகியது. அவ்வேந்தல் சயதேவர் கூறியதற்கு மறு மாற்றங் கூருது, அந்நற்குணச் செல்வரை வேண்டித் தேரில் ஏற்றிக்கொண்டு, தன்னரண்மனையை யடைந்து, தக்கதோ ரிடத்திலே அவரைத் தாமரை மணி யாதனத்திருத்தித் தன் பணியாளர்களை யழைத்து, "நீ விர் சிறிதும் பிழையுருது இவ்வருட்குணப் பெரியார்க்குப் பணிவிடை புரிதிர்" என்று அவர்களுக்குக் கட்டளை இட்டனன். அவர்களும், 'நாம் பெறுதற்கரிய பெருஞ் செல்வம் பெற்ரும்!' என்று மகிழ்ச்சி கூர்ந்து, சயதேவ ருக்கு இடையருத அன்புடையவர்களாய்த் தொண்டு புரிந்து வந்தார்கள். அவ்வேந்தர் பிரானும் ஒவ்வொரு நாளும் சயதேவரை அடைந்து வணங்கி, நன்குபசரித்து வந்தனன்.

## 9. சயதேவருக்கு இன்னல் புரிந்த தீயர் திருமாலடியார் வேடந் தாங்கி அரசன்பால் வருதலும், சயதேவ ரேவலால் அரசன் அவர்களைப் பூசித்தலும்

அக்கொற்றவன் சயதேவரை வணங்கி, "எம்மடிகாள்! அடியேற்குத் தாங்களுக்குத் தொண்டு புரிதலிலேயே அவா மிகுகின்றது. அடியேன் இன்னும் யாது புரிதல் வேண்டுமோ, அதனைக் கட்டளையிட் டருளுதல் வேண்டும்," எனக் கேட்டனன்.

சயதேவர் அவனை நோக்கி, "அறவாழி வேந்தனே, இவ்வுலக இன்பங்கள் மின்னின் நிலையில்லன வாகும். ஆதலின் அறிஞர்கள் பொன்றாத பேரின்ப நிலையை எய்துதற் குரிய வழியை நன்கு விளக்குஞ் செயலையே புரிவார்கள். அச்செயல் திருமாலின் அடியார்களைப் பூசித்தலே யாகும்; அதனை நீ நன்கு புரிதி" என்றருளினர்.

அதனைச் செவியுற்ற அம்மன்னர்பிரான், "எம்மருந்தவ மன்னீர், அடியனேன் திருமா லடியவர்களை அறியும் வகை யாது?" என்றனன்.

சயதேவர், "உலகத்தில் எவர்க்கும் பிறர் மன நிலை இத்தகையதென அறிதல் அருமை யாகும். ஆதலின், நீ அங்ஙனம் ஒருவரையும், 'இவர் திருமா லடியர்தாமோ?' என்றையமுற்று ஆராய்தலை விடுத்து, கழுத்திலே துளசி மணி மாலைகளையும் தாமரை மணி மாலைகளையும் அணிந்து, நெற்றியில் திருநாமத்தையேனும் கோபி சந்தனத்தை யேனும் தீட்டி, வாயாரத் திருமகள் கொழுநன் திருநாமங் களைக் கூறிக்கொண்டிருப்பவர்களைக் காணுதியேல், அவர்கள்,

'குலந்தாங்கு சாதிக ளாலிலுங் கீழிழிந் தெத்தனை
நலந்தா னிலாதசண் டாளர்சண் டாளர்க ளாயினும்'

அவர்களைக் 'கண்ணன் அடியார்கள் இவர்கள்!' என்று வணங்கி, ஆராதிக்கக் கடவாய். அவர்களை இன்ப துன்பங்கள் செற்று, அவாவற்று, வீடுபெற்றவர்கள் என்று கருதுக. அவர்களைப் பூசித்தலிற் சிறந்த பேறு பிறிதில்லை. அவர்களே தாங்கள் எற்ற யாக்கை உள்ள அளவும் இந்த வுலகில் திரிந்துகொண்டிருக்கும் பெருந்தேவர்கள். அவர்களை இவ்விருள்தருமா ஞாலத்திலே தோன்ருமல் தோன்றி விளங்குகின்ற ஒளியுருவங்கள் என்றறிக. அவர்கள் தாங்கள் கொண்ட வுடலை நீத்தபின் அடைதற்குரியது, இந்திரன் முதலிய தேவர்கள் காணற்கும் கிட்டாததும், சிந்தையும் மொழியும் செல்லா நிலைமையினதுமாகிய பேரின்ப வீடாகும். அவர்களைச் சிறந்த அன்புடன் பூசித்திடுவையாயின், நினக்கும் அஃதெய்தும்,'' என்று கூறி யருளினர்.

அவ்வாய்மொழியைக் கேட்ட அம்மன்னர்பிரான், அன்னமே நாடோறும் திருமா லடியார் பலரை அன்புடன் வணங்கி யழைத்து வந்து ஆராதித்துப் பொருள் இன்மையால் வருந்துன்பம் அவர்களை யணுகாதபடி அவர்களுக்குப் பொருள்களையும் வழங்கி வந்தனன்.

இங்ஙனம் அம்மன்னர் மன்னன் திருமா லடியார்களை ஆராதித்து வருஞ் செய்தி, தென்றற் காற்ருலெங்கும் பரவும் நறுமணமென, எங்கும் பரவியது. திருமா லடியார்கள் பலர் அவ்வரசர் பிரானது அன்பின் பெருக்கைக் காண விழைந்து, பள்ளத்திற் பாயு நீரென, அவ் வேந்தர்பிரான்பாலடைந்து, அவ்விறைவனுலே நன்கு பூசிக்கப் பெற்றுச் சென்ருர்கள்.

சயதேவருக்குத் தீமை புரிந்த தீயர் இருவரும் அதனைக் கேள்வி யுற்றுத் திருமகள் கொழுநன் அடியரைப் போல் வேடம் பூண்டு, அவ்வேந்தர்பிரானிடஞ் சென்றனர். ஒநாய்கள் செம்மையில் ஆடுகளைக் கண்டு, அவற்றைப் பற்

றித் தின்னச் சென்று, இடையில் அகாதமான ஒரு பெரும் பள்ள மிருக்கக் கண்டு மயங்கி நின்றாற்போல, அங்கிருக்கின்ற சயதேவரைப் பார்த்து அஞ்சி நின்றார்கள். அங்ஙனம் அவர்கள் மயங்கி நிற்றலைச் சயதேவர் நோக்கி, அவர்கள் கருத்தினை நன்குணர்ந்துகொண்டு, அவர்களை நோக்கி, "திருமாலின் அடியவர்களுள் மிகவுஞ் சிறந்த பெரியோர்களே, நீங்கள் இங்கு உகப்புடன் வீற்றிருந்து, என்னையும், திருமாலடியார்களை அன்புடன் ஏற்று ஆராதிக்கும் இம் மன்னர் பிரானையும் புனித ராக்குங்கள். உங்களை யுங்கள் திருவுள்ள முகக்கும்படி ஆராதித்தற்கு இம் மன்னர்பிரானும் பல நூறு பணியாட்களும் இருக்கின்றார்கள். நீங்கள் யாதொரு மனக் கவலையு மின்றி இங்கெழுந்தருளி யிருக்கலாம்" என்று பல இன்மொழிகள் கூறி, அங்கிருந்த பணியாளர்களை இனிது நோக்கி, "அன்பர்களே, இவர்கள் திருமாலின் ஆராத காத லடியவர்கள்; யாவராலும் பூசிக்கப் படுதற்குரிய பெரியோர்கள். இதுகாறும் இவ்வளவு சிறந்த பெரியோர்கள் இங்கு வந்ததில்லை. நீங்கள் விரைவில் இவர்களை நம் மன்னர் மன்னன்பால் அழைத்துச் சென்று, இவர்களைப்பற்றி நான் கூறியவற்றைக் கூறி, ஆராதிக்கச் சொன்மின்" என்று பணித்தருளினர்.

சயதேவர் கட்டளையைச் சிரமேற்கொண்ட அப்பணியாளர்கள் அவ்வாறே அவர்களை யழைத்துச் சென்று, மன்னன்முன் விடுத்து, சயதேவர் கூறி யருளியவற்றை யவனுக்குத் தெரிவித்தார்கள். அக்கோமகன் உடனே எழுந்து, அவர்களை வணங்கி, "திருமாலடிக் கன்புசெய் பெரியீர்காள், நீங்கள் என் குலஞ் செய் தவமாக இங்கெழுந்தருளினீர்கள். நீங்கள் உங்கள் மனமுள்ள நாளளவும் இங்கு இனிது வீற்றிருந்தருளுங்கள்" என்று கூறி, அவர்களைச் சிறந்த இடத்தினி லிருத்தி, நன்குபசரித்தனன்.

சயதேவர் மற்றவர்கள் எல்லாரினும் மிகவும் மேன்மையாக அவர்களை யுபசரிக்கும்படி பணியாளர்க்குப் பணித்தனர். அவர்களும் அவ்வண்ணமே மிகவுஞ் சிறப்புற அவர்களை யுபசரித்து வந்தார்கள். அரசனும் அடிக்கடி அவர்கள்பாற் சென்று, அவர்களை வணங்கி, இன்னுரைகள் கூறி, அவர்கள் வேண்டுவன நல்கிவந்தனன்.

இங்ஙனஞ் சயதேவர் முதலியவர்கள் புரியும் உபசாரங்களால் மிகவும் களிப்புற்றவர்களைப்போல அவர்கள் மேலுக்கு நடித்துவந்தார்கள். எனினும், அவர்கள் மனம் வலையிற் சிக்குண்ட புலிகளின் மனம்போல் துன்புற்றிருந்தது. "நாம் சயதேவருக்கியற்றிய தீமையை இம் மன்னன் உணரின், நம் தலையைத் தடிந்திடுவனே! என்" றெண்ணி, அவர்கள் பெரிதும் எங்கி, மனஞ் சோர்ந்திருந்தார்கள். அவர்கள் அங்குத் தங்கள் விருப்பம்போல நன்கு உபசரிக்கப்பட்டிருந்தார்களாயினும் அவர்கள் மனம் அச்ச மென்னும் பெருஞ் சிறையி லகப்பட்டு, மிகவுந் தத்தளித்தது. அதனால், அவர்கள் உடம்பு நாளுக்கு நாள் மிகவும் மெலிந்து வந்தன. பணியாளர்கள் அதனை யரசனுக்கு அறிவித்தார்கள். அவ் வேந்தர்பிரான் சயதேவரை யணுகி வணங்கி, அதனைக் கூறினன்.

சயதேவர் அதனைக் கேட்டு, அவர்கள் மன நிலையை யறிந்துகொண்டு, அக்கொற்றவனை நோக்கி, "வேந்தனே, அவர்கள் மிகவுஞ் சிறந்த போகியர்கள்; ஒரு நாளேனும் ஓரிடத்தில் தங்கி யிரார்கள். ஐம்புலன்களையும் கவரும் பொருள்கள் பல அமைந்துள்ள நகர வாசம் அவர்களுக்கு மிகவும் அருவருப்பாகவே தோன்றும். அவர்கள் அருண் மிக்கவர்களாதலால், நம் வேண்டுகோளைத் தடுத்துவிட்டுப் போக மனம் இசையாமல், நகரவாசத்தில் தங்களுக்குள்ள

வெறுப்பை நமக்கு வெளி யிட்டுக் கூறுத லின்றி, மனம் பொறுத்துக்கொண்டு இந்நகரிலே தங்கி யிருக்கின்றார்கள். இனி அவர்கள் மனத்தளர் வடையும்படி அவர்களை இங் கிருக்கச் செய்தல் தகுதி யன்று. அவர்களுக்கு வேண்டும் பொருள்களை யளித்து, அவர்கள் செல்ல விரும்பும் இடத் திற்குச் செல்ல விடுக" என்று கூறி யருளினர்.

அம்மன்னர் பிரான் அவர்களிடஞ் சென்று வணங்கி, "ஞானச் செல்வர்களாகிய பெரியீர்காள், உங்களுடைய திருமேனிகள் மிகவும் வாடியிருக்கின்றனவே? இங்கு நடக் கும் உபசாரத்தில் உங்களுக்கு விருப்பம் உண்டோ? அன்றி, வேறேதேனுங் கருத்துண்டோ? கூறி யருளுங் கள்" என்று வினவினன்.

அக்கயவர்கள், "வேந்தர் வேந்தரே, உம்முடைய உப சாரம் மிகவுஞ் சிறந்தது. உம்மைபோல அடியார்களை யுபசரிப்பவர்களை நாங்கள் எங்கும் கண்டிலோம். ஆயினும், எங்கள் மனம் கங்கை முதலிய புண்ணிய நதிகளிற் சென்று படிதலை விரும்புகின்றது. ஆதலின், எங்களுக்கு விடை தருதல் வேண்டும்" என்று கூறினர்கள்.

உடனே அரசன் இரண்டு தேர்களில் நிரம்பப்பொருள் களை வைத்து, இரண்டு தேர்ப்பாகர்களை யழைத்து, "இப் பெரியோர்களைத் தேரி லேற்றிச் சென்று, இவர்கள் செல்ல விரும்பும் இடத்தில் விட்டு வருவீர்களாக" என்று கட்டளை யிட்டனன். பின்னர், அக்கள்ளர்கள் அவ்வேந்தனிடமும் சயதேவரிடமும் விடை பெற்றுக்கொண்டு, தேரில் ஏறிப் புறப்பட்டார்கள். தேர் புறப்பட்டுச் சிறிது தூரம் சென்றது.

அங்குத்தேர்ப்பாகர்கள் அக்கயவர்களை நோக்கி, "அன் பிற் சிறந்த பெரியோர்களே, இதுகாறும் எங்கள் வேந்தர்

பால் பல்லாயிரம் பெரியோர்கள் வந்திருக்கின்றார்கள். சயதேவர் அவர்களுள் எவரையும் உங்களை யுபசரித்த அளவு சிறப்பாக உபசரித்திலர். அவர் உங்கள் இருவரையும் தம்முடைய இரண்டு கண்களைப்போலக் கருதி உபசரித்தனர். அதற்குரிய காரணத்தை நாங்கள் அறிய விரும்புகின்றோம்" என்று வினவினார்கள்.

அக்கயவர்கள் அத்தேர்ப்பாகர்களை நோக்கி, "அன்பர்களே, அவந்தி நாட்டின் இறைவனாகிய துஷ்ட கர்மா என்பவனிடம் சயதேவர் பிரதானியாக இருந்தார். நாங்கள் அவ்வேந்தனிடம் சேவகர்களாக இருந்தோம். சயதேவர் ஒரு நாள் பெருங்குற்ற மொன்றைச் செய்துவிட்டனர். அதனால், அவ்வேந்தன் சினமிகுந்து, அவரைக் கொன்று விடும்படி எங்களுக்குக் கட்டளை யிட்டனன். நாங்கள் அவரை யழைத்துச் சென்று, கொல்ல மனந் துணியாமல், அவருடைய கைகால்களை வெட்டி, அவரை ஒரு புதரிலே வைத்துவிட்டு, அவ்வரசனிடஞ் சென்று, "சயதேவரைக் கொன்று விட்டோம்" என்று கூறினோம். பிறகு, 'உண்மையை வேந்தன் அறியின் தீங்கு நேரும்' என்று கருதி, அவ் வேந்தனை விட்டு நீங்கி, இவ்விடந் தாங்கிப் பல விடங்களைச் சுற்றிப் பார்த்துவிட்டு இங்கு வந்தோம். சயதேவர் அந்நன்றியை மனத்தி லிருத்தி, எங்களை அங்ஙனம் உபசரித்தனர்" என்றார்கள்.

அப் பொய்ம் மொழியைக் கேட்டதனால் நில மகளின் மனம் மிகவும் வெதும்பி வெடித்துவிட்டது என்னும்படி அவ்விடத்தில் பூமி இருபிள வாக வெடித்தது. தேர்ப்பாகர்கள் தேரினின்று அயலிலே குதித்துத் தப்பினார்கள். அக்கயவர்கள் தேருடன் அப்பிளவிலே விழுந்து அழிந்தார்கள்.

உடனே அத் தேர்ப்பாகர்கள் மிகவும் அச்சமும் வியப்பும் அடைந்து, விரைந்தோடி வந்து, அவ்வேந்தர் பிரானுக்கும் சயதேவருக்கும் அச்செய்தியை அறிவித்தார்கள். சயதேவர் அதைக் கேட்டுக் கண்களில் நீர் பெருகி அருவியெனத் தம் மார்பின்மீது விழுந்தோட, "தேவ தேவனே, திருமகள் நாதனே, அருட்கடலே, அச்சுதனே, உனக்குத் தீமை புரிந்தவர்களாகிய கஞ்சன், பூதனை முதலியவர்களுக்கும் அருள் புரிந்த நீ, என் பகைவர்களுக்கு மாத்திரம் இங்ஙனங் கெடுதி யுண்டாகும்படி செய்தல் நீதியாகுமோ? நீ 'மூலமே' என்ற கரிக்கு முன்றோன்றி, அதனையுங் காத்து, அதன் பகையாகிய முதலைக்கும் நின் பதம் அளித்தனையே! அங்ஙனமே என் பகைவர்களையுங் காத்தருளல் நின் கடனன்றோ?" என்று மனங் கரையக் கூறிப் பல் வகையாக மாயனைப் போற்றினர்.

அருட்கடலாகிய அப்பெருமான் தன்னிடை மின்னற் கொடி படர்ந்து பொலியத் தோன்றுங் கருமா முகிலெனச் சயதேவருக்குக் காட்சி தந்தருளினன். உடனே சயதேவருக்குக் கைகளும் கால்களும் உண்டாகி, முன்போற் பொலிவுற்றன. அவருக்குத் தீமை புரிந்த தீயர் இருவரும் இரண்டு விமானங்களி லிவர்ந்து, வானின்கணின்று சயதேவரை நோக்கிக் கைகள் கூப்பி, "அருள் மிக்க திருமனப் பெரியீர், தமக்குப் பெருந்தீமை புரிந்த புல்லியராகிய எங்களையும்,

'தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன்.'

என்னும் மறை மொழிப்படி காத்து, நாங்கள் நன்னிலையை யெய்துப்படி யருளினீர். தமது திருவருள் அளவினுட்

பட்டது அன்று. தமது திருவருள் நீடு வாழ்க. நாங்கள் பரந்தாமத்திற்குச் செல்கின்றோம்,'' என்று கூறிப் பொன்ருத வானகமாகிய வைகுந்தத்தை யடைந்தனர்.

பிறகு திருமகள் கொழுநன் சயதேவரைத் தழுவி, “அன்பனே, நின் அன்புக்கு அளவில்லை. நீ இவ்வுலகில் சில காலம் இனிது வாழ்ந்து, பலர்க்கு நன்னெறியை விளக்கி யருளிப் பிறகு என் பதம் அடைக'' எனத் திருவாய் மலர்ந் தருளி மறைந்தனன்.

இவற்றை யெல்லாங் கண்ட அவ்வேந்தர் பிரான் சய தேவரை வணங்கி, “எம்மடிகாள், தங்கள் வரலாறு முழுவ தையுங் கூறி யருளுதல் வேண்டும்'' என்று வேண்டினன். அவ்வாறே சயதேவர் தம் வரலாற்றைக் கூறியருளினர். அதனல், அம்மன்னர் பிரான் சயதேவருடைய இல்லக் கிழத்தியார் சகநாதத்தில் விருத்தலை யுணர்ந்து, அவ்வம்மை யாரை யழைத்து வரும்படி சிவிகையோடு சில பணிப் பெண்களை யனுப்பிச் சயதேவரோடு தன் அரண்மனையை யடைந்தனன்.

## 10. அரசன் மனைவி செய்த பிழையினுல் பதுமவதியார் இறத்தலும், அவரைச் சயதேவர் பிழைப்பித்தலும்

பிறகு சயதேவர்தம் இல்லக் கிழத்தியாராகிய பதும வதியார் வந்து, சயதேவரைக் கண்டு வணங்கி, மேகத்தைக் கண்ட மயிலெனக் களிகூர்ந்து நின்றனர். வேந்தர் பிரான் தன் மனைவியை யழைத்து, “அன்புடையாய், இவ்வம்மை யார் நம்மருமைக் குரவருடைய திருமனைக் கிழத்தியார். ஆதலின், நீ நாளும் ஒரு குறையும் நேராதபடி இவரைப் பூசித்து வருக'' என்று அப்பொற் கொடிக்குக் கட்டளை யிட்டனன். அன்பிற் சிறந்தவளாகிய அவ்வரசியும், “பெருஞ் செல்வம் எய்தினேன்!'' என்று அவ்வம்மையாரை வணங்

கைத் தன்னிடம் அழைத்துச் சென்று, அவ்வாறே நன்கு பூசித்து வந்தனள்.

இது நிற்க. ஒரு நாள் ஒரு தூதன் வாயிற் காவலரிடம் விடை பெற்றுக்கொண்டு, அரசியினிடம் வந்து, "செல்வியீர், உம்முடைய அன்புக்குரிய தம்பியார் சுசணர் விண்ணவர்களின் விருந்தின ராயினர். அவர் தம் தேவியாரும் உடன் கட்டை யேறத் துணிந்தனர்" என்றனன். அச் செய்தியைக் கேட்டார் எல்லாரும், 'இது பெரு வியப்பாகும்!' என உடன் கட்டை யேறத் துணிந்த அவ்வம்மையாரை வியந்து கொண்டாடினர். பதுமவதியார் மாத்திரம் வியப்பெய்தாமல் மௌனமுற் றிருந்தனர்.

அரசி அதனைக் கண்டு வியப்படைந்து, அவ்வம்மையாரை வணங்கி, "எம் மன்னையீர், என்னுடைய இளவலின் மனைவி உடன் கட்டை யேற உறுதி கொண்டமையைக் கேட்டு, யாவரும் அந்நல்லியல் நங்கையை வியந்துகொண்டாடிக்கொண் டிருக்க, நீவிர் மாத்திரம் அதிற் சிறிதும் அசைவு கொள்ளாமல் இருக்கின்றீரே! இதற்குக் காரணம் யாது? கூறி யருளுவீர்" என்று வேண்டினள்.

பதுமவதியார் அரசியை நோக்கி, "அன்புடைச் செல்வியே, 'கொழுநர் இறந்தனர்' எனக் கேட்டவுடன் ஞாயிறுடன் மறையுங் கதிரென உயிர்விடும் நங்கையரே கொழுநர்பால் நிறைந்த அன்புடைய கற்பரசிய ராவர். கொழுநர் இறந்தபின் தீக்குதித்தல் முதலிய கொடுஞ் செயல்களால் உயிர் விடுவோர் அத்துணைச் சிறந்த நங்கைமார் அல்லர் என்பதே என் கருத்து. இதுவே ஆன்றோர்கள் கொள்கையுமாகும். ஆதலின், உன் இளவலுடைய மனைக் கிழத்தியின் செயலில் எனக்கு வியப்புத் தோன்றவில்லை" என்றனர்.

அரசன் மனையாள் அம் மொழியைக் கேட்டுத் தனக்குள், "என் தம்பியின் மனையாள் உடன் கட்டை யேறிய பின் இதனை இவ்வன்னையர்பால் ஆய்ந்து அறிவல்," என்று எண்ணிக்கொண்டனள். பிறகு அவ்வரசி தன் தம்பியின் இல்லக் கிழத்தி உடன் கட்டை யேறினள். அவ்வரசி தன் தம்பிக்கும், அவனது மனைக் கிழத்திக்கும் செய்ய வேண்டுவன செய்து முடித்தனள். பின்பு அமைச்சனை யழைத்துத் தன் கருத்தை யவனுக்குத் தெரிவித்தாள். அமைச்சனும் அதற்கிசைந்து சென்று, அரசனைச் சயதேவரோடு வனத்திற்கு வேட்டையாடுதற்குச் செல்லும்படி செய்து, அவர்கள் வனத்திற்குச் சென்று சில நாழிகைகள் கழிந்த பின் அரசியின்பாற் சென்று, "எம்மரசி! அந்தோ! சயதேவர் புலியினாற் கொல்லப்பட் டிறந்தனர்!" எனக் கூறினன். அரசி அதைக் கேட்டு, உண்மையில் வருந்துபவள்போல் நடித்தனள். 'சயதேவர் உயிர் நீத்தனர்' என்னுஞ் செய்தி தம் காதிற் பட்டவுடன் பதுமவதியார் உயிர் நீத்தனர்.

அதைக் கண்ட அவ்வரசி, "அந்தோ! என்னே என் மதியிருந்தவாறு! சிறிதும் அறிவில்லாத செயலைச் செய்து விட்டேனே! 'எண்ணித் துணிக கருமம்' என்பதனை மறந்தேனே! அந்தோ! ஏழை மதியேன் இதற்கு என் செய்வேன்!" என்று மிகவும் வருந்தலாயினள்.

அப்போது வேந்தன் சயதேவரோடு அரண்மனையை அடைந்தனன். அமைச்சன் அம்மன்னர் பிரானுக்கு மறைவில் நிகழ்ந்த செய்திகள் எல்லாவற்றையுங் கூறினன். அவ்வேந்தர் வேந்தன் அதனைக் கேட்டு மிகவும் மன நடுக்க மெய்தி, "அ! ஆ!! என்னே என் தீவினை இருந்தவாறு! இக்கொடுஞ் செயலைப் புரிந்தாளைக் கொல்வே னெனின், யான் பெண் கொலை புரிந்தவனாவேன். ஆதலின், அவ்வாறு

செய்தல் அடாது. இஃதென் தீவினைப் பயனாய் விளைந்த தாகும். ஆதலின், யான் உயிர் விடுதலே இதற்கேற்ற கழுவா யாகும்'' என்றெண்ணி, அமைச்சனிடந் தன் கருத்தினைச் சொல்லி, அப்பதியின் ஒரு புறம் தீ வளர்க்கச் சொல்லினன். அதனைக் கேட்டு அம்மந்திரன் மிகவும் மனங் குழம்பி வருந்தி, அரசன் கட்டளையை மறுத்தற் கஞ்சிச் சென்றனன்.

பின்பு அம்மன்னர் மன்னன், "இதனை நங்குரவராகிய சயதேவருக்குக் கூறி, அவர்பால் விடை பெறுதல் வேண்டும்'' என்றெண்ணி, அவரிடஞ் சென்று, அவரை வணங்கி நின்றனன். மெய்ஞ்ஞானச் செல்வராகிய சயதேவர் அம் மன்னர் பிரானை வாழ்த்தி, அவனுக்கு இன்மொழிகள் கூறினர்.

அவ்வேந்தர் வேந்தன் சயதேவரை நோக்கி, "எம்மடிகாள், தங்களுடைய தேவியார் என்னால் உயிர் நீத்தனர். ஆகவே, யான் தீயிற் பாய்ந்து உயிர் விடத் துணிந்தனன். யான் அதனா லாகுந் தீவினையினின் றுய்யும்படி தாங்கள் அருள் புரிந்து, விடை தந்தருளல் வேண்டும்'' என்று கேட்டனன்.

அருட் கடலாகிய சயதேவர் அம்மன்னர் மன்னனைக் கட்டித் தழுவி, "நற்குண வேந்தே, நீ சிறிதும் வருந்தலை; என்னுடன் வருதி'' என்று கூறி, அவ்விறைவனை அழைத்துக்கொண்டு சென்று, அருந்ததியனையா ராகிய பதுமவதியார் இறந்து கிடக்கும் இடத்தை யடைந்து, யாழைக் கையி லேந்தி, இருபத்து நான்கு அஷ்டபதிகளாற் கண்ணனைப் பாடித் துதித்தனர்.

உடனே திருமாமகள் கேள்வன் அவர் முன் தோன்றி, அவரைப் புல்லி, "அன்பனே, நீ முன் பாடிய கீத கோவிந்தம் என்னும் நூலையும், இப்பொழுது பாடிய அஷ்டபதியை

யும் பாடுகின்றவர்களிடத்திலும் கேட்கின்றவர்களிடத்திலும் நான் சென்று தங்கியிருப்பேன்" என்று திருவாய் மலர்ந்து, பதுமவதியார் உயிர்த்து எழும்படி யருள்புரிந்து மறைந்தருளினன்.

அரசன் முதலானோர் களிகூர்ந்து, சயதேவரையும் பதுமவதியாரையும் வணங்கிக் கொண்டாடினர்கள். சயதேவர் தம்மை யடைந்தோர்கட் கெல்லாம் நன்மதியுண்டாதற்குரிய நன்மொழிகளைக் கூறி யருளிப் பல்லாண்டுகள் அரசனுடனும் தம் இல்லக் கிழத்தியாருடனும் இனிது வாழ்ந்திருந்தனர்.



# II. நாம தேவர்



## 1. நாமதேவர் அவதாரம்

அன்பும் அருளு மிக்க பெரியோர்கள் இனிது உறை தற் குரிய இடமாய், ஆராத காதல் அடியவர் கூடி, என்றும் கண்ணனைப் பாடியாடிப் பணிந்து பேரின்ப மடைதற்குரிய நன்னிலையாய் விளங்கும் பண்டரி புரத்தில் தாமாஜி என்னும் ஒரு பாகவதோத்தமர் இருந்தார். அவர் கண்ணனிடத்து நீங்காத அன்புடையவர்; அன்பு, அருள் முதலிய நற்குணங்கள் குறைவற அமையப் பெற்றவர்.

தாமாஜி பாகவதருடைய மனையாளின் பெயர் குணு பாய் என்பது. அவ்வம்மை மலரின் மணம்போல் இயல்பின் அமைந்த கற்பினை யுடையாள். அவ்வன்னை தன் கொழுநர் விரும்பாதவற்றைத் தானும் விரும்பாள்; தன் கணவரது நலமே தன்னுடைய நலமெனக் கொண்டவள். அக்கற் புரசி தன் நாயகரைப் பல வகையாலும் நன்று யுபசரித்துப் பேணுவாள்; விருந்தினரைப் பேணாத நாளை வறுமையுற்ற நாளாகக் கருதுவாள்.

இவ்வித நற்குணங்கள் அமையப்பெற்ற அவர்களுக்குப் பொருட் செல்வம் மாத்திரம் அமையவில்லை. ஆயினும், அவர்கள் பெருஞ்செல்வம் படைத்தவர்களினும் மேலான இன்பமுடையவர்க ளாகவே வாழ்ந்து வந்தார்கள். அதற் குக் காரணம் அவ்விருவரும் மனமொத் திருந்ததே யாகும்.

கணவனும் மனைவியும் ஒத்த மனமுடையவர்களா யிருப்பின், அவர்கள் வறுமை யுடையவர்களா யிருப்பினும், அவர்களுடைய இல்வாழ்க்கையாகிய வான் சகடம் சிறிதும் இடையூறின்றி இனிது செல்லும் என்பதும், அங்ஙனம்

தமக்குள் மனமொத் திருக்கப் பெறுதவர்கள் எத்துணைச் செல்வ மிகுதியை யுடையவர்க ளாயினும் அவர்களுடைய இல்வாழ்க்கையாகிய சகடம் இனிது செல்லாது என்பதும் உலக இயலில் நாம் கண்கூடாகக் கண்டறிவனவே யல்லவோ? குணுபாய் தன் நாயகருடைய சிறு வருவாய்க்கு ஏற்றபடி செலவு செய்து, தன்னுடைய கொழுநராகிய தாமாஜிக்கு வறுமையின் துன்பம் சிறிதும் தோற்றுதபடி அவரை உபசரித்து வந்தாள். ஒருவனுக்கு இல்லாள் நற் செயல்கள் உடையவளாயின், இல்லாதது என்?

தாமாஜி சிறந்த அறிஞ ராகையினுல், தம்முடைய மனைக் கிழத்தியைத் தமக்கு உழைப்பதற்காகவே வந்த எருத்து மாடு அல்லது எருமை மாடு என்று எண்ணித் தாழ் வாக நடத்தாமல், 'இல்லக் கிழத்தி கணவனுடைய எல்லா நன்மை தீமைகளிலும் பங்குடையவள்.' 'மனைக்கு விளக்கம் மடவாள்.' 'மடக்கொடி யில்லா மனை பாழே யாகும்.' 'இல் லறம் இனிது நடத்தற்கு உற்ற துணை புரிபவள் இல் லாளே' என்று ஆன்ருேர்கள் கூறிய நன்மொழிகளைக் கருத்துட் கொண்டு, இன்மொழிகள் கூறி மகிழ்வித்து, யாவரும் மதிக் கும்படி மேன்மையாகவே நடத்தி வந்தார். ஆதலின், அவர்களை இடுக்கணுக் குள்ளாக்க அவர்கள்பால் வந்த வறுமை, தானே இடுக்க ணுறுவதாயிற்று.

இங்ஙனம் அவர்கள் இல்வாழ்க்கையை இன்புற நடத்தி வந்தார்கள். அவர்களுக்கு அது வரையினும் பிள்ளைப் பேறு உண்டாக வில்லை. அதனுல், குணுபாயின் மனத்தில் மிக்க வருத்தம் உண்டாயிற்று. அவ்வம்மை தனக்குள், "நங்குல தெய்வமாகிய பாண்டு ரங்கன் நமக்கொரு மைந்தனை யளித்திலனே! உலகம் யாவற்றையும் உளவாக் கலும், நிலை பெறுத்தலும், நீக்கலும், தன்பா லொடுக்கி

யீட்டு மளித்தலுமாகிய செயல்களை விளையாட்டி னளவாகக் கொண்டுள்ள எம்பெருமானுக்கு நமக்கொரு மைந்தனை யளித்தல் ஓர் அருஞ்செயலோ!'' என்றெண்ணி, வருந்துவா ளாயினள்.

ஒரு நாள் அவ்வன்னை தன் கொழுநனாகிய தாமாஜியை நோக்கி, "என் அன்புக் குரியவரே, நமக்கு இதுகாறும் மைந்தர்கள் உண்டாகாமையை யெண்ணி, என் மனம் பெரிதும் கவலை யுறுகின்றது.

'தம்பொருள் என்பதம் மக்கள்'

எனவும்,

'சொன்ன கலையின் றுறையனைத்துந் தோய்ந்தாலும்
என்ன பயனுடைத்தா மின்முகத்து—முன்னங்
குறுகுதலைக் கிண்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி.'

எனவும்,

'மக்களிலார் மனைவாழ்வி னினிமை யென்னும்?'

எனவும், பெரியோர்கள் கூறியவற்றைத் தாம் அறியீரோ? நமக்கு மைந்தனில்லாத குறை தீரும்படி நம்முடைய குல தெய்வமாகிய பாண்டுரங்கனை வேண்டி, ஓர் அருமருந்தன்ன மைந்தனைப் பெறுதல் வேண்டும் என்பது என்னுடைய கருத்து'' என்று விண்ணப்பித்தனள்.

பாண்டுரங்கன் திருவடிகளை நாளும் அன்புடன் போற்றுதலையே பெரும்பேறாகக் கொண்டுள்ள தாமாஜி தம்முடைய அன்புக் குரிய மனைக்கிழத்தியாகிய குணு பாயை நோக்கி, "நல்லாய், பாண்டுரங்கனாகிய பெருமான் ஒவ்வொருவருக்கும் முன்னை நல்வினை தீவினைகளுக் கேற் பவே இம்மையில் இன்ப துன்பங்களை யளிக்கின்றனன் மைந்தனைப் பெறுதற்குரிய நல்வினையை நாம் முற்பிறப்பிற்

செய்திருப்பின், அவ்விறைவன் தானே நமக்கு மைந்தர்களை யளித்திருப்பன். முற்பிறப்பிலே அதற்குரிய நல்வினை யைச் செய்யாத நமக்குப் பகவான் எவ்வாறு மைந்தர்களை யளிப்பன் ?'' என்று கூறினர்.

குஞபாய் தாமாஜியை நோக்கி, “ அறிஞரே, தாங்கள் என் இப்படிக் கருதுகின்றீர்கள் ? எல்லாம் வல்ல இறைவ ஞகிய பாண்டு ரங்கனுக்கு அருமையான காரியம் யாது ளது ? அப்பெருமான் இராமனு யவதரித்த போது வானர வீரர்களைக் கொண்டு, கடலில் கற்களால் அணை கட்ட வில்லையா ? கிருஷ்ணனுய் அவதரித்த காலத்தில் குழவிப் பருவத்திலேயே பூதனை, சகடாசுரன் முதலியவர்களை அழிக்க வில்லையா ? கானில் எரிந்த நெருப்பை அணைத்து, கோக்களையும் கோபாலர்களையும் காக்க வில்லையா ? பிரமன் கன்றுகளையும், ஆனினங்களையும், அவற்றை மேய்த்துக் கொண்டிருந்த கோபாலர்களையும் மறைத்து வைத்தபோது தான் அந்த அந்த வீட்டின் ஆயர்களாகவும், பசுக்களாக வும், கன்றுகளாவும் இருக்கவில்லையா ? இறந்துபோன குரு மைந்தனை யெழுப்பிக் குரு தட்சணையாகக் கொடுக்க வில்லையா ? ஒரு மறையவன் பிள்ளைகள் மரித்தனராக, அவர்களை மீட்டுக் கொணர்ந் தளிக்கவில்லையா ? இத்தகைய மாயப் பிரானுகிய பாண்டு ரங்கனுக்கு நமக்கொரு மைந்தனை யளிப்பது ஓர் அருஞ் செய்கையோ ?'' என்றுள்.

அம்மொழிகளைக் கேட்ட தாமாஜி அவ்வம்மையின் விருப்பத்திற் கிணங்கிச் சென்று, பாண்டு ரங்கன் திருத் தளியை யடைந்து, அப்பேரருளாளனை, “எம்பெருமானே, என் மனையாள் உன்னுடைய திருவருளால் ஒரு மைந்தனை யடைய விரும்பி யிருக்கின்றுள். நீ திருவருள் புரிதல் வேண்டும்'' என்று வேண்டித் துதித்து, அக்கோயிலின் முதன் மண்டபத்திலே படுத்துறங்கினர்.

பாண்டு ரங்க நாதன் அவர் கனவில் தோன்றி, "அன்பனே, நீ வருந்த வேண்டா. நீ நீராடுதற்குப் பீமா நதிக்குச் செல்க. அவ்வாற்றிலே ஒரு முத்துச் சிப்பி உனக்கெதிராக மிதந்து வரும். உனக்கு அதிலிருந்து ஓர் அருமையான ஆண் குழந்தை அகப்படும். அக்குழவி பெரிதான போது என்பால் மிக்க அன்புடையதாயிருக்கும். அக்குழவியின் புகழ் உலக முழுதினும் பரவும். அதனால், உலகத்தவர்கள் உய்யு நெறியை நன்குணர்வார்கள்," என்று கூறி யருளினன்.

தாமாஜி விழித்தெழுந்து, பாண்டு ரங்கனைப் பணிந்து, துதித்து, தமது வீட்டிற்குச் சென்று, தம்முடைய மனைக்கிழத்தியாகிய குணுபாயினிடம் தமது கனவில் பாண்டு ரங்க நாதன் தோன்றி, வரமளித்த செய்தியைக் கூறினர். அவ்வம்மையும் அதனைக் கேட்டு, மிகவும் மகிழ்ந்தனள்.

தாமாஜி மறு நாள் பீமா நதிக்குச் சென்று நீராடிப் பாண்டு ரங்கனைத் துதித்துக்கொண் டிருந்தார். பாண்டு ரங்கன் தாமாஜிக்குக் கனவில் அருளிய வண்ணமே ஓர் அழகிய முத்துச் சிப்பி பீமா நதியில் மிதந்து, அவருக்கு எதிராக வந்தது. தாமாஜி அதனைக் கண்டு, களி கூர்ந்து, பாண்டு ரங்கனைப் பலவிதத் திருநாமங்களைச் சொல்லித் துதித்து, அம் முத்துச் சிப்பியை எடுத்துப் பார்த்தார். அதில் இளங்கதிர் ஞாயிற்றின் எழிலுடன் விளங்கிய அருமந்தக் குழவியின் வனப்பு, அவருடைய கண்ணையும் மனத்தையும் ஒருங்கே கவர்ந்துகொண்டது.

அவர் அம்மகவை எடுத்துக்கொண்டு சென்று, தம் மனையை யடைந்து, குணுபாயின் கையிற் கொடுத்தனர். குணுபாய் அன்பின் வடிவமான அக்குழவியைப் பெற்று, அதற்குப் பல முத்தங்கள் கொடுத்து, மார்புடன் அணைத்

துக்கொண்டனள். உடனே அவ்வம்மைக்குப் பால் சுரந்தது.

அதனைக் கண்ட தாமாஜி, "இதுவும் பாண்டு ரங்கன் திருவருளே. பாண்டு ரங்கன் இங்ஙனம் அருள் புரிந்திரா விடின், பொருள் இல்லாத நாம் இம்மகவினுக்குப் பாலைத் தேடி வாங்கி யளிப்பதில் மிக்க துன்பப்பட வேண்டியவர்க ளாவோம். எம்பெருமான் நாம் அங்ஙனத் துன்புறாதபடி அருள் புரிந்தனன். 'கரந்தசி லிடந்தொறு மிடந்திகழ் பொருடொறுங், கரந்தெங்கும் பரந்துள' எம்பெருமா னுடைய திருவருளுக்கு ஓர் எல்லையும் உண்டோ?" என்று கூறிப் பாண்டு ரங்கனைப் பல்படியாலும் போற்றினர்.

குணபாய், "மாவினை வாய் பிளந்துகந்த மாலே, வன்குன்ற மேந்தி ஆவினை யன்றுயக்கொண்ட ஆயரேறே, இணையில்லா இன்னிசையாழ் கெழுமியின்பத் தும்புருவும் நாரதனும் இறைஞ்சியேத்த, துணையில்லாத் தொன்மறை நூல் தோத்திரத்தால் தொன்மலர்க்கண் அயன் வணங்கி ஓவாதேத்தப் பண்டரியில் நின்றருளும் பரமமூர்த்தி, யான் விழைந்தபடி எனக் கொரு மைந்தனையு மளித்து, அம்மைந் தனைப் போற்றற்குரிய பாலையும் என்னிடம் சுரந்து பெரு கச் செய்தனை! அன்றிடைச்சி கயிற்றால் உரலிற் கட்டிப் பருமத்தா லடிக்க, அவளுக் கஞ்சி யழுதிருந் தேங்கி நின்றனை! நீ நின் அடியவர்க்கு எளியனாய் நிற்குந் தன்மையை யாவரே இத்தகையது என எடுத்துரைக்க வல்லவர்?" என்று துதித்தனள்.

பிறகு அவ்விருவரும் அக்குழவிக்கு நாமதேவன் எனப் பெயரிட்டுத் தங்கள் கண்ணின் கருமணி யெனக் கொண்டு வளர்த்து வந்தனர். நாம தேவர் திருமகள் கொழுநன் அன்போர் வடிவுற்று வளர்வதுபோல் வளர்ந்து வந்தனர்.

## 2. நாம தேவர் பாண்டு ரங்கனுக்கு அமுதருத்தல்

ஒரு நாள் தாமாஜிக்குப் பக்கத் தூருக்குப் போக வேண்டிய காரியம் நேரிட்டது. அதனால், அவர் குணு பாயை நோக்கி, "அன்புடையாய், இன்று ஆராதனைப் பொருள்களை நம்முடைய குழந்தை நாம தேவனிடங் கொடுத்துப் பாண்டு ரங்கனை ஆராதித்து வரும்படி அவனை அனுப்பு," என்று கூறிச் சென்றனர்.

குணுபாய் தன்னுடைய கணவர் கூறியபடியே ஆரா தனைக் குரிய பொருள்களை நாம தேவரிடங் கொடுத்துப் பாண்டு ரங்கனை ஆராதித்து வரும்படி சொல்லி, அவரை யனுப்பினள்.

நாம தேவர் அப்பொருள்களைப் பெற்றுக்கொண்டு போய்ப் பாண்டு ரங்கன் திருத்தளியை யடைந்து, பாண்டு ரங்கனை ஆராதிக்க வேண்டிய முறைப்படி ஆராதித்துத் தாம் கொண்டு போன திருவமுதைப் பாண்டு ரங்கன் திரு முன் வைத்து, "பாண்டு ரங்கா, திருவமுது செய்தருள்க" என்று வேண்டினர்.

பாண்டு ரங்கன் திருவமுது செய்திலன். அதைக் கண்ட நாம தேவர் மிக்க வருத்த முற்றவராய், "ஓ! இறைவனே, நான் கொண்டு வந்த அமுதை நீ என் உண்ணமல் சும்மா இருக்கின்றாய்? உன்னுடைய உண்மை யன்பின ராகிய தாமாஜி, தாம் வேற்றூருக்குப் போகும்படி நேர்ந்த தால், உன்னை யாராதிப்பதற்கு என்னை யனுப்பினர். நான் கொண்டு வந்த அமுதை நீ யுண்ணவிடின், 'பாண்டு ரங்க னுக்கு நீ ஏதோ பிழை செய்தாய்; அதனாலேதான் பாண்டு ரங்கன் நீ கொண்டு போன அமுதை உண்ண வில்லை' என்று என் தாயார் என்னை அடிப்பார்; என் தந்தையாரும் என்னை வைதிடுவார். உன்னை ஆராதிக்கும்

வகையை நான் அறியேன். ஆதலின், நான் ஆராதித்ததில் நேர்ந்த பிழைகளை நீ பொறுத்தருளாவிடின், நான் என்ன செய்வேன்? பசியுந் தாகமும் என்னை வருத்துகின்றன. நீ விரைவின் உண்ணுவிடின் நான் களைத்துப் போவேன்" என்று தேம்பித் தேம்பி யழுதார்.

அருட் கடலாகிய பாண்டுரங்கன் உடனே அவர் முன் வந்து, அவருக்குத் தன்னுடைய தரிசனத்தைத் தந்து, அவரைத் தழுவிக்கொண்டு, "என் அன்புக்குரிய குழந்தாய், அழேல்! அழேல்!!" என்று திருவாய் மலர்ந்து, உச்சி மோந்து, உடம்பைத் தடவி, முத்த மிட்டு, அவ் வமுதைச் சிறிதும் மிச்சமாக விடாமல் உண்டு, நாமதேவரை நோக்கி, "என் அன்புக் குரிய செல்வனே, இச் செய்தியை நீ யொருவரிடமுஞ் சொல்லற்க; வீட்டுக்குப் போ," என்று திருவாய் மலர்ந்தருளினன்.

நாமதேவர் மிகவும் மகிழ்ந்து, பாண்டுரங்கனை வணங்கி யெழுந்து, அப் பெருமானிடம் விடை பெற்றுக்கொண்டு, தமது இல்லத்திற்குச் சென்றனர்.

குணுபாய், பாண்டுரங்கனுக்கு ஆராதித்த அமுது நாம தேவரிடம் சிறிதும் இல்லாமையைக் கண்டு, அவரை நோக்கி, "நாம தேவ, பாண்டு ரங்கனுக்கு ஆராதித்து வரும்படி நான் உன்னிடங் கொடுத்தனுப்பிய அமுதை நீ என்ன செய்தாய்?" என்று கேட்டாள்.

நாம தேவர், "அன்னையீர், நான் அதனை வேறெவருக்குங் கொடுத்துவிட வில்லை; பாண்டு ரங்கனுக்கே படைத்தேன்; அவனே அதை நன்றாய்ப் புசித்தான்" என்று கூறினர்.

குணுபாய் அதனைக் கேட்டு, வியப்புற்று, தன்னுடைய கொழுநராகிய தாமாஜி வந்தவுடன் அச் செய்தியை அவ

ரிடங் கூறினள். தாமாஜி அதனைக் கேட்டு, வியப்பெய்தி, நாம தேவரைத் தம்மருகி லழைத்து, "நாம தேவா, நீ ஆராதித்த அமுதைப் பண்டரி நாதன் உண்டானனோ?" என்று கேட்டனர்.

அதனைக் கேட்ட நாம தேவர் தமது தந்தையாரை நோக்கி, "தந்தையிர், நான் சொல்லுவது பொய் யென்று நீர் எண்ண வேண்டா. நான் கொண்டு போன அமுதை பண்டரி நாதனே உண்டனன்" என்று கூறினர்.

தாமாஜி பின்னும் பெரு வியப்பெய்தி, "செல்வனே, நீ சொல்லுவது உண்மையானல், இன்றும் நீயே ஆராதனைக் குரிய பொருள்களைக் கொண்டு சென்று, பண்டரி நாதனுக்கு ஆராதனை செய். நீ பண்டரி நாதனை ஆராதிக்கும் விதத்தை நான் பார்க்க வேண்டும். ஆகையினுல், நானும் உன்னுடன் வருகிறேன்" என்று கூறி, ஆராதனைக் குரிய பொருள்களை யெடுத்துக்கொண்டு, நாமதேவருடன் கோயிலுக்குச் சென்ருர்.

நாம தேவர் முன்னுள்போலப் பாண்டு ரங்கனை ஆராதித்து, திருவமுதை அப்பெருமான் முன் வைத்து, "பாண்டு ரங்கா, திருவமுது செய்தருள்க" என்ருர். பாண்டு ரங்க நாதன் நாம தேவர் கண்ணுக்கு மாத்திரம் தன்னுருவம் தோன்ற நின்றருளி, அவரை நோக்கி, "குழந்தாய், உன்னுடைய தந்தை உன்னைத் தொடர்ந்து வந்திருத்தலால், நான் நேற்று உண்டதுபோல் இன்றுண்ண மாட்டேன். நான் உனக்கு நேரில் வந்து என் தரிசனந் தந்ததுபோல் உன் தந்தைக்குத் தருதல் முடியாது. ஆதலின், நீ இன்று திருவமுதை யெடுத்துக்கொண்டு வீடு செல்" என்றருளினன்.

நாமதேவர் பாண்டு ரங்கனை நோக்கி, "எம்பெருமானே, நீ யாவருக்கும் பொதுவானவ னல்லனோ? உனக்கு

வேண்டியவர்களாகச் சிலரும், வேண்டாதவர்களாகச் சில ரும் எங்கேனும் உளரோ? உளரேனின், உன்னை, 'வேண்டு டுதல் வேண்டாமை யிலாதான்' என்றழைக்கும் மறை மொழி பொய்ப்படுமன்றோ? நன்மை தீமைகள் அற்றவ னாகிய உனக்கு நல்லவர்கள் யார், கெட்டவர்கள் யார்? என் னுடைய தந்தையாரும் என்னைப்போலவே உன்பால் பேரன்புடையவ ரல்லரோ? அங்ஙன மிருக்க, நீ எனக்கு மாத்திரம் உன் தரிசனந் தந்து, என் தந்தையாருக்குத் தராவிடின், உன்னை யுலகம் 'நடுவு நிலையற்றவன்' என்று பழிக்குமே! அப்பழியை ஏற்றுக் கொள்ளுதல் உனக் குத் தகுதி யாமோ? நீ அச்ச மென்பதை யறியாதவ னாதலின், அவ்வித உலகப் பழிக்கு அஞ்சாமற் போவை யேனும், என் தந்தையார் உன்னை விடுவா ரல்லர். நீ இல் லாத இடம் ஒன்றும் இல்லையாதலின், அவர் பாண்டவர்கள் இளவலாகிய சகாதேவனைப்போல் உன்னை இயங்க வொட் டாமல் தம் மனத்தே கட்டி விடுதற்குரிய அன்பின் வன்மை யுடையவர் என்பதைக் கருதுக'' என்றனர்.

பாண்டு ரங்கன் அம் மொழிகளைக் கேட்டு, உவகை மிகுந்து, அவ்விருவருக்குந் தனது தரிசனந் வந்து, முன் னாள் போலவே அத்திருவமுதை யுண்டருளி, மறைந்தருளி னன். அப்போது தாமாஜி நாமதேவரைத் தழுவிக்கொண்டு, "என் அன்புக்குரிய செல்வனே, பழி பிறங்காப் பண்புடை மைந்தனே, உன்னை மைந்தனாகப் பெற்றதனால் நானும் உன் தாயும் எழுமை எழு பிறப்பும் தீயவை தீண்டப் பெரு தவ ரானோம்; பாண்டு ரங்கனுக்கு வழி வழி யாட்செய்யும் அன்பர்க ளானோம்; நாங்கள் இம்மையில் லீலா விபூதி, நித்திய விபூதி என்னும் இரு விபூதிகளின் இன்பத்தையும் பெற்றோம்'' என்று கூறி, மீண்டும் அவரைத் தழுவி யுச்சி மோந்து, முத்த மிட்டு, அவரை யுடனழைத்துக்கொண்டு

தம் மனைக்குச் சென்று, கோயிலில் நிகழ்ந்ததைக் குணு பாய்க்குக் கூறினர். அவ் வம்மை யச்செய்தியைக் கேட்டு, நாம தேவரைப் பெற்ற நாளினும் பெருமகிழ் வெய்தி, அவ ரைத் தன் இரு கரங்களாலும் மார்புறத் தழுவிக்கொண்டு, களிப்பென்னுங் கடலில் மூழ்கினள்.

3. நாமதேவர் மனைவிக்குப் பாண்டு ரங்கன் பொன் வராகன் மூட்டை யளித்தது

பிறகு தாமாஜியும் குணுபாயும் தம்முடைய உறவின ரில் ஒருவருடைய பெண்ணாகிய இராதா பாய் என்னும் பெண் மணியை நாமதேவருக்கு மணம் புரிவிக்க விரும்பி, அதனை நாம தேவருக்குத் தெரிவித்தனர். நாம தேவரும் தம் பெற்றோரின் சொற்படி அந் நங்கையர் திலகத்தை மணந்துகொண்டார்.

பின்னர், நாமதேவரும் இராதாபாய் அம்மையும் மல ரும் அதன் மணமும் போலவும், மணியும் அதன் ஒளியும் போலவும், நகமும் அதன் தசையும் போலவும் ஒரு மனப் பட்டு, இல்லறத்தை நல்லற மாக்கி நடந்து வருகையில், அவர்களுக் கிடையில் உண்டான அன்பே ஓர் உருக்கொண்டு வந்தாற்போல, இராதா பாய் ஓர் ஆண் மகவை ஈன்றனள்.

தமக்குப் பெயரன் பிறந்ததைக் கண்ட தாமாஜியும் குணுபாயும் சந்தோஷ மென்னுஞ் சலதியிற் படிந்து, அம் மகவுக்குப் பன்னிரண்டாம் பிராயத்தில் நாமகரணஞ் செய் தற் குரிய ஏற்பாடுகளைச் செய்து, பண்டரி நாதனை விருந் துக் கழைத்தனர். பண்டரி நாதன் அம் மகவின்பால் அன்பு மிக்கவனாய், அதற்குச் சிறந்த வரிசைகள் கொண்டு வந்தனன். குணுபாய் பண்டரி நாதனை நோக்கி, "எம் மிறைவனே, இம் மைந்தனுக்கு யாது பெயரிடலாம்?" என்று கேட்டனள். பண்டரி நாதன், "நாராயணன் என்

னும் பெயரிடுங்கள் " என்று திருவாய் மலர்ந்தனன். தாமா ஜியும் குணபாயும் அங்ஙனமே அம் மைந்தனுக்கு நாராய ணன் என்று பெயரிட்டு மகிழ்ந்தனர். பாண்டு ரங்கன் அப் பிள்ளைக்குப் பல அணிகளையும், இராதா பாய்க்குப் பல ஆடை யணிகளையும் அளித்தருளிக் கோயிலுக்குச் சென்ற னன்.

தாமாஜி மிகவும் முதியவ ரானதனாலும், நாமதேவர் பொரு ளீட்டுதற் குரிய தொழி லொன்றும் செய்யாமல் பண்டரி நாதன்பாலே தம்முடைய மனத்தைச் செலுத்தி வந்தமையாலும், அவர்கள் குடும்ப வாழ்க்கை வறுமை மிக்க தாயிற்று.

குணபாய் அதனை யெண்ணி, நாமதேவரை யழைத்து, " நாமதேவா, நீ பொருளீட்டற் குரிய தொழி லொன்றை யுஞ் செய்யாமல், இரவும் பகலும் பண்டரி நாத னிடத்தி லேயே மனத்தைச் செலுத்திக்கொண் டிருந்தால், குடும்பக் காரியங்கள் எவ்வாறு நடைபெறும்? உன்னைப் போன்ற அன்பர்களுட் பலர்,

" எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தை பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே......"

என்றபடி குடும்பத்தைப் போற்றுதற் பொருட்டு, ஏதே னும் ஒரு தொழிலைச் செய்துகொண்டே பரந்தாமனை இடைவிடாமல் தியானித்துக்கொண்டு வரவில்லையா? இல் லறத்தி லிருப்பார்க்குத் தங்கள் குடும்பத்தைக் காக்க வேண்டுவது சிறந்த கடமை யல்லவா? குடும்பத்தைக் காத் தலும், தென் புலத்தார்க்குச் செய்வன செய்தலும், தெய் வத்தை வழிபடலும், விருந்தினரையும் சுற்றத்தினரையும் உண்டி முதலியவற்று லுபசரித்தலும் மனை வாழ்க்கையி லிருப்பார்க் குரிய அற மல்லவா?

'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றிங்
ஐம்புலத்தார் ஓம்பல் தலை.'

என்னும் மறைமொழியை நீ கேட்டதுமில்லையா? ஆக லின், ஏதேனும் ஒரு தொழில் புரிந்து குடும்பத்தைப் பேணாதவனை உலகத்தவர்கள் 'சோம்பேறி' என்று பழிப் பார்கள் என்பது உனக்குத் தெரியாத தல்லவே! தன் குடும்பத்தைப் பேணும் முயற்சி யின்றி யிருப்பவன் எவ்வ ளவு சிறந்த ஒழுக்க முடையவ னானாலும், அவனைப் பெரி யோர்கள் நல்லொழுக்க முடையவனாகக் கொள்ளார்கள். உன் மனைவியும், மைந்தனும், உன் தந்தையாரும், நானும் வறுமையினாற் படுந் துன்பங்களை நாளும் நீ நேரிற் பார்த் தறிந்தும், எவ்வாறு பொறுத்துக்கொண் டிருக்கின்றாய்?" என்று பற்பல கூறினாள்.

நாமதேவர் தம்முடைய தாயின் சொற்களைக் கேட்டு, மனங் கலங்கி, பாண்டுரங்கன் கோயிலுக்குச் சென்று, பண் டரிநாதனை வலம் செய்து வணங்கி, "எம் பெருமானே, நீ என்னை இக்குடும்ப மென்னும் ஆழியில் ஏன் அழுத்தி விட்டனை? இதனால் உண்டாகும் துன்பத்தை நான் எவ் வாறு பொறுத்துக்கொண் டிருப்பேன்?" என்று முறை யிட்டனர்.

பண்டரிநாதன் நாமதேவரின் முறையீட்டைக் கேட் டருளி, அவரை நோக்கி, "அன்பனே, என்னையே அடைந்த உன்னைச் சமுசாரத் துன்பங்கள் வருத்தா. என்னுடைய உண்மை யன்பனாகிய உனக்கும் எனக்கும் எப்போதும் துக் கம் என்பது கிடையாது. எவராலும், எவற்றாலும் உனக் குத் துன்ப முண்டாக்க இயலாது. நீ துன்ப மற்ற நிலையை அடைந்திருக்கின்றாய்" என்று இயம்பி யருளினன்.

எம்பெருமானது பொருள் நிறைந்த வார்த்தைகளைக் கேட்ட நாமதேவர், "எம்மிறைவனே, பிறவிப் பெருங்கட

லக் கடத்தற்குரிய புணையாகிய உன்னுடைய திருவடியை அடைந்த எனக்கு என்றும் எங்கும் துன்பஞ் சிறிதும் உண்டாகாது என்பதுண்மையே. ஆயினும்,

" இருளினும் வெளியினு மருளினுந் தெருளினும்
இன்பமே யடையினுந் துன்பமே மிடையினும்
ஒருவர்முன் புகழினும் இருவர்பின் பிகழினும்
ஊனிறந் தழியினும் யான்மறந் தொழிவனோ?
சுருதிநின் றேரவிடும் கரதலம் நாலொடும்
துவளுநூன் மார்பமும் பவளவாய் மூரலும்
திருவரங் கேசர்தஞ் சுருள்கருங் கேசமும்
செய்யநீள் முடியுமத் துய்யசே வடியுமே."

என்றபடி உன்னுடைய திருவடிப்போதுகளை இடைவிடாமற் சிந்திக்கும் விழைவுடையவனாகிய என்னை நோக்கி, என்னுடைய தாயார், "குடும்பத்தைக் காத்தற்கு நீ பொருளை யீட்டுதல் வேண்டும்" என்று பல அறவுரைகளைக் கூறினர். அவர் மொழிகளை மறுத்துரைத்தல் கூடாமையாலும், என் மனம் உன் திருவடித் தாமரைகளைத் தியானித்தலி லன்றி வேறு வகையிற் செல்லாமையாலும் யான் துன்புறுகின்றேன். என் துன்பத்தைப் போக்கி யருளுதல் நின் கடமை யன்றோ?" என்றனர்.

பண்டரி நாதன், "அன்பனே, நீ யஞ்சற்க" என்றருளி உருக்குமணிப் பிராட்டியாரை நோக்கி, "அன்புடையாய், இச்சீரியனது அன்பின் தன்மையைக் கண்டனையோ?" என்றனன். அப்பிராட்டியார், எம் பெருமானை நோக்கி, "தேவ தேவரே, நீர் இவ்வன்பனுடைய மனத்தை முற்றுங் கவர்ந்துகொண்டீர். அதனால், இவ்வருங்குணச் செல்வன் பொருளீட்டுதலில் மனஞ்செல்லாதவனா யிருக்கின்றான். ஆதலின், இச்சீரியனுடைய குடும்பத்தினர் வறுமையினால் வருந்துகின்றனர். அதனைக் கண்டும் நீர் வாளா விருக்

கின்றீர். இஃதென்ன திருவிளையாட் டுமக்கு?" என்று இடித்துரைத்தனர்.

பண்டரி நாதன் அப்பிராட்டியாரின் அருள் நிரம்பிய மொழிகளைக் கேட்டருளி, "அடைந்தார்க்குக் கடைக்கண் நோக்கினாலேயே எல்லாச் செல்வங்களும் எய்தும்படி செய்ய வல்ல அருளரசி, நின்னுடைய அருள் நோக்கம் இச்சீரியன் மீது படும்படி செய்யவே நான் இதுகாறும் வாளா விருந்தேன். இனி, விரைவின் இவ்வன்பனது துன்பத்தை ஒழித்துவிடுகின்றேன்" என்றருளினன்.

இது நிற்க: நாம தேவருடைய மனைவியாகிய இராதா பாய்அம்மை தன்னுடைய மாமியாகிய குணாபாய் அம்மையை நோக்கி, "அம்மையிர், தங்கள் மைந்தர் இவ்வுலகில் ஏன் பிறந்தனரோ, அறியேன்! நானும் என் குழந்தையும் சோற்றுக்குங் கூறைக்கும் சோர்வுற்றிருத்தலை அவர் சிறிதுங் கருதிப் பார்ப்பதில்லை. அவருடைய அன்பினோடு கூடிய வழிபாட்டை ஏற்றுக்கொண்ட பண்டரி நாதனே நமக்கு இக்கொடுந் துன்பத்தை யுண்டாக்கிவிட்டனன் போலும்! நாமோ, வறுமைப் பிணிக்கு மருந்தறியாமல் வருந்துகின்றோம். பண்டரி நாதனுக்கோ, நம்மிடம் அருள் உண்டாக வில்லை. எளியவர்க ளாகிய நாம் யாது செய்வோம்?" என்று கூறிப் புலம்பினள்.

குணாபாய் தன் மருகியின் துன்பத்தைக் கண்டு, மன மாற்றாமல் வருந்தி, "எங்கேனுஞ் சென்று சிறிது பொருள் கடன் வாங்கிக்கொண்டு வந்து, இவர்களுடைய பசி நோயைக் களைவோம்" என்றெண்ணி, வெளியிற் சென்றனள்.

அருட்கடலான பண்டரி நாதன் அப்போது நாமதேவருக்குத் தெரியாதபடி ஒரு வணிகனைப்போல் வேடங்

கொண்டு, கருடனை எருதாக்கி, அவ்வெருதின்மீது பொன் வராகன் நிறைந்த மூட்டை யொன்றை ஏற்றிக்கொண்டு வந்து, நாமதேவருடைய வீடுள்ள தெருவிற்குச் சென்று அங்கெதிர்ப்பட்டவர்களைப் பார்த்து, "நாமதேவருடைய மனை எது?" என்று விசாரித்தனன். அதனைக்கேட்டு, அவர்களிற் சிலர், 'இவ்வணிகர் நாமதேவர் வீட்டில் விருந்துண்ணக் கருதி வந்தனர்போலும்!' என்றெண்ணி, அப்பெருமானை நோக்கி, "வணிகரே, நாமதேவர் வீட்டில் அன்னம் சுன்னந்தான்! நீர் அவர் வீட்டிற்கு ஏன் செல்லுகின்றீர்?" என்றனர். வேறு சிலர், அங்ஙனங் கூறியவர்களை நோக்கி, "இவ்வணிகர் நாமதேவர் மனையை எதற்காகத் தேடுகின்றனரோ, நாம் அறியோம். அங்ஙன மிருக்க, நாமதேவரிடம் இவருக்கு அவமதிப்புத் தோன்றும்படி நீங்கள் இவ்வாறு கூறியது தகாத செயலேயாகும்" என்று கடிந்து கூறி, எம்பெருமானாகிய வணிகனுக்கு நாமதேவருடைய வீட்டைக் காட்டினர்.

எம்பெருமான் நாமதேவருடைய வீட்டை யடைந்தனன். நாமதேவருடைய மனைவியாகிய இராதாபாய் அப்போது நாமதேவருடைய வருகையை நோக்கி, வீட்டின் முற்றத்திலே நின்றுகொண்டிருந்தனள். அயல்வீட்டு மாது ஒருத்தி அவளிடம் வந்து, "ஐயோ! அம்மா, உன் உடம்பு மிகவும் வாடி யிருக்கின்றதே! உன் பெற்றோர்கள் உன்னை எவ்வளவு அருமையாக வளர்த்தார்கள்! அப்படி உன்னை அருமையாக வளர்த்த அவர்கள் கடைசியில் துப்பற்ற மனிதனுக்கு உன்னை மணஞ் செய்து கொடுத்துவிட்டார்களே! இப்படிச் செய்ய அவர்களுக்கு எப்படித்தான் மனம் வந்ததோ, தெரியவில்லையே! நீ என் பெண்ணாயிருந்தால், நான் உன்னை இந்தத் துப்பற்ற மனிதனுக்குக் கொடுப்பதை விட, ஒரு பாழ்ங் கிணற்றிலே தள்ளி, மேலே

ஒரு கல்லைப் போட்டிருப்பேன். அம்மம்ம! இது மிகவும் அநியாயம்! அநியாயம்!!" என்று கூறிக்கொண்டிருந்தனள்.

அவ்வாய்ப்பறை யாட்டியின் மொழியாகிய காற்றின் சேர்க்கையால், இராதா பாயின் மனத்துயரமாகிய நெருப்பு மிகுதியாக ஓங்கி வளர்வதாயிற்று. அதனால், இராதாபாய் மிகவும் வருந்தி, முகவாட்ட முற்றிருந்தாள்.

அப்போது எம்பெருமா னாகிய வணிகன் இராதாபாயி னிடஞ் சென்று, "அம்மா, நாம தேவர் வீட்டில் இருக் கின்றனரா?" என்று கேட்டனன். இராதாபாய் எம்பெரு மானை நோக்கி, "ஐயன்மீர், நீர் யார்? அவரை ஏன் தேடு கின்றீர்?" என்று கேட்டனள். வணிக வேடந் தாங்கிய வள்ளல், "அம்மா, நாம தேவர் எனக்கு உயிர்க் குயிரான நண்பர். ஆதலின், நான் உங்கள் வீட்டுக்கு விருந்தினனாக வந்தேன்" என்றனன். அதனைக் கேட்ட இராதாபாய், "அறிஞரே, உமது நண்பர் வெளியிற் சென்றிருக்கின்றனர்" என்று கூறிவிட்டு, அயல் வீட்டு மாதை நோக்கி, "அம்மா, என்னுடைய கணவர் ஒரு காசும் சம்பாதிப்பதில்லை. அவ ரைத் தேடிக்கொண்டு எங்கள் வீட்டிற்கு வரும் பாகவதர் களுக்கோ, கணக்கே இல்லை. எங்கள் வீட்டின் இருப்பைக் கவனியாமலே என்னுடைய கணவர் அவர்களுக்குச் சோறிடும்படி கட்டளை யிடுகின்றார். இதற்கு நான் என்ன செய்வேன்?" என்று மிக்க வருத்தத்துடன் கூறினள்.

அன்பர்கள் வேண்டுவன யாவும் வேண்டியவாறு வெறுதுதவும் எம்பெருமானாகிய அவ்வணிகன், அம்மொழி களைக் கேட்டு, இராதாபாயை நோக்கி, "அம்மா, உன் கணவர் வரும் வரையில் உங்கள் வீட்டு நடையில் உட்கார்ந் திருக்க மட்டும் எனக்கு இடங்கொடு" என்றனன்.

இராதா பாய் வேத முதல்வனாகிய அவ்வணிக வேட தாரியை உற்று நோக்கி, "ஐயன்மீர், நீர் எத்தொழில்

செய்பவர்? உம்முடைய பெய ரென்ன? நீர் எந்த வூரி லிருந்து வந்தீர்?" என்று கேட்டனள்.

எம்பெருமான் அவளை நோக்கி, "அம்மா, நான் ஒரு வணிகன்; என் பெயர் கேசவ செட்டி என்பது; எனது இருப்பிடம் துவாரகை. என்னுருயிர் நண்பராகிய நாம தேவர் வறுமை மிக்கவரா யிருக்கின்றனர் எனக் கேள்வி யுற்றேன். ஆதலின்,

'உடுக்கை இழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.'

என்னும் மறைமொழியை மனத்திற் சிந்தித்து, அவருக்குச் சிறிது பொருளுதவி செய்யக் கருதி வந்தேன்" என்றனன்.

இராதா பாய், 'இழுக்கல் உடையுழி யூற்றுக்கோல் போன்ற' அம் மொழிகளைக் கேட்டு, நெடுங்காலமாக நீங் காமல் வருத்திக்கொண் டிருந்த பிணி நீங்கப் பெற்றாரைப் போல மனமிக மகிழ்ந்து, கேசவ செட்டியை உபசரித்து, வீட்டிற்குள் அழைத்துச் சென்று, ஓர் ஆசனங் கொடுத்து, உட்காருவித்தனள்.

கேசவ செட்டி இராதா பாயை நோக்கி, "அம்மணி, என்னருமை நண்பராகிய நாமதேவருக்குக் கவலை கொடுக் காதே. இதோ நான் கொண்டு வந்துள்ள இப்பொருளை வைத்துக்கொண்டு, குடும்பச் சுமையை நீ தாங்கிக்கொள். நான் வந்த செய்தியை அவருக்குச் சொல்" என்று கூறிக் கருடனாகிய எருதின்மீ தேற்றிக் கொணர்ந்த பொன் வராகன் நிறைந்த மூட்டையை இராதா பாயினிடம் ஒப்பு வித்து விடை பெற்றுக்கொண்டு சென்றனன்.

இராதா பாய், "நம்முடைய நாயகரது அன்புக் கிரங் கிப் பண்டரி நாதரே இப்பொருளை நமக்களித்தனர் போலும்!" என்றெண்ணி, அம்மூட்டையை எடுத்து ஓரி

டத்தில் பத்திரமாக வைத்து, அதிலிருந்து ஒரு வராகனை யெடுத்துக்கொண்டு போய், ஒரு வணிகனிடம் கொடுத்து, தன்னுடைய வீட்டிற்கு வேண்டிய பொருள் வாங்கி வந்து, நல்ல கறி வகைகளுடன் சோறு சமைத்துக்கொண் டிருந்தனள்.

வெளியிற் சென்ற குணுபாய், எங்கேயோ சென்று, சிறிது அரிசி கடனுக வாங்கிக்கொண்டு வருகையில் பண்டரி நாதன் திருத்தளிக்குச் சென்று, அச்சந்நிதியில் எழுந்தருளி யிருக்கும் பாண்டு ரங்கனுக்கு முன்னே நின்று, "இடையர்களுடைய வீட்டிலே வெண்ணெய் திருடி யுண்ட செவ் வாயனே, யாவரையும் மயக்கும் மாயனே, அன்பர்களாகிய யாங்கள் இங்ஙனம் இன்னல் எய்தும்படி செய்த நீ இரக்கம் என்பது அணுவளவும் இல்லாத தீயனே? எங்களுடைய அருமை மைந்தனை நீ எங்கள்பால் அன்பற்றவ னுகும்படி செய்துவிட்டனை. இத்தகைய உன்னைச் சாதுக்களாகிய பெரியோர்கள் 'பேரருளாளன்' என்று கூறுகின்ருர்களே? அஃதெனக்கு மிக்க வியப்பைத் தருகின்றது. பிரகலாதனை அவனது தந்தையாகிய இரணியனிடம் அன்பற்றவனுகும் படி செய்து, அவ்விரணியனைக் கொன்றொழித்தனை; இராவணுசுரனுடைய தம்பியாகிய விபீஷணனை நின்வசமாக்கிக் கொண்டு, அவ்விராவணனை அழித்தனை; பாண்டவர்களைக் கொண்டு, அவர்களுடைய தமையனுகிய கர்ணனை வதைத் தனை; உன்பால் அன்பு கொண்ட ஆயர் மகளிரைப் பெருந் துன்பத்திற் குட்படுத்தினை: நீ செய்த கொடுமைகள் இவ் வளவேயோ! பாரதப் போரில் நீ புரிந்த வஞ்சனைச் செயல் களை அளவிட்டுரைத்தல் இயலுமோ? உன்னிடம் பெண் கொலை, வஞ்சனை, பொய் முதலிய தீக்குணங்கள் எல்லாம் ஒருங்கமைந் திருக்கின்றன. உன்னுடைய தீச்செயல்களை விரித்தெழுதப் புகின், அவை ஏட்டில் அடங்கா. இப்படிப்

பட்டவனுகிய உனக்குத் தீன தயாளன் என்றும், பக்த வச்சலன் என்றும் இட்ட பெயர்கள் பொருளுக் கியையாத போலிப் பெயர்களே யாகும் என்பதில் சிறிதும் குறையில்லை. எங்கள் அருமை மைந்தனைப்போல் நின் மாய்கையிற் சிக்குண்டு அறிவு மயங்கியவர்களே உனக்கு இப்பெயர்களை இட்டிருக்கவேண்டும்'' என்று பலவாறு பழித் துரைத்தனள்.

பாண்டு ரங்கன் அவ்வம்மையின் துயர் நிரம்பிய அம் மொழிகளைக் கேட்டு, புன்முறுவலுடன் அவ் வம்மையை நோக்கி, "ஓ! அம்மே, நீ என் வீணுக என்பாற் சினங் கொண்டு என்னை இவ்வாறு பழிக்கின்றனை? உன் பிள்ளைக்கு உன்பால் அன்புண்டானுல், நீ யாதொரு தடையுமின்றி யவனை யழைத்துக்கொண்டு போகலாம். அன்னுய், நான் உண்மையை உரைத்து விடுகின்றேன்; கேள்: நாமதேவன் என்னுடைய பிள்ளையே யன்றி உன்னுடைய புத்திரன் அல்லன். அவன் என்பால் வைத்துள்ள அன்பு ஒப்புயர் வற்றது. அவனுக்கும் எனக்கும் உள்ள சம்பந்தம் அநாதியானது; அவனுக்கும் உங்களுக்கும் உண்டான தொடர்பு இடையில் உண்டானது. பழுத்த பழமானது தான் தோன்றிய மரத்தின் தொடர்பை விட்டு நீங்கித் தரையில் விழுந்துவிடுவதுபோல், அன்பு கனிந்த மனமுடையவனுகிய அச்சிறியன் உங்கள் தொடர்பை விட்டு நீங்கி, என்னை அடைந்தனன். அன்றியும், அவனுக்கும் உங்களுக்கும் உள்ள சம்பந்தம் நிலையற்றதாகவே யிருக்கின்றது. அங்ஙன மிருக்க, அவனுக்காக நீ என் இவ்வாறு வருந்தவேண்டும்?'' என்று திருவாய் மலர்ந்தருளினன்.

அம்மொழிகளைக் கேட்ட குணுபாய், பகவானை நோக்கி, "அப்பா, நீ மிகவும் கெட்டிக்காரன். குடிகளின் பொருள்களைப் பறித்துக்கொண்டு, 'உலகத்திற்கு மன்னனுகிய

எனக்கே உலகில் உள்ள பொருள்கள் யாவும் உரியன வாகும்,' என்று கூறுங் கொடுங்கோன் மன்னனுடைய மொழியினும் நின்மொழி மிக்க நேர்மை யுடையதாகவே இருக்கின்றது. நாங்கள் வருந்திப் பெற்று, எங்கள் கண்ணின் மணியென மிக்க அன்புடன் காத்து வளர்த்த பிள்ளையை நீ உனக்கு அடிமை யாக்கிக்கொண்டது மன்றி, உன்னுடைய குற்றங்களை யெல்லாம் நற்றங்களாக மாற்றிக் கூறி வம்பளக்கின்றனையே! நீ மிக்க சமர்த்தன்தான்! எங்கள் அருமை மைந்தனுக்கு நீ உரிமை யுடையவன் என்பதை உன்னைப்போல் அடா வழக்குரைப்போரன்றி, உலகில் மற்றி யாரே ஒப்புவர்?'' என்று பின்னும் இழித்துக் கூறினள்.

அம்மொழிகளைக் கேட்ட பாண்டு ரங்கன், "இன்மொழிகளைக் கூறி இவ்வம்மையின் சினத்தைத் தணித்தல் வேண்டும்'' என்றெண்ணிக் குணுபாயை நோக்கி, "அன்னய், நீ முப்பிறப்பிற் சிறந்தனவாகிய பல நல்வினைகளைப் புரிந்தனை. ஆதலின், என்பால் பேரன்புடையவனுகிய நாம தேவனை உனக்கு மைந்தனுகப் பிறக்கும்படி செய்தேன். அறிய வேண்டுவனவற்றை யறிந்தவனும், பிறரால் பழிக்கப்படாத நற்குணங்களை யுடையவனுமாகிய மைந்தனைப் பெற்றனை. நாமதேவன் உலகினர் உய்ய நான்முகனுக்கு மைந்தனுகத் தோன்றிய நாரத முனிவனுக்கு ஒப்பானவன். நாமதேவனுக்குப் பால் கொடுத்து, அவனை யன்புடன் பாராட்டிச் சீராட்டி வளர்த்து, அவனுடைய குழவிப் பருவத்தின் இன்ப விளையாட்டுகளைக் கண்டும் அவனுடைய மழலைச் சொற்களைக் கேட்டும் மகிழ்ந்த உன்னுடைய நல்வினையின் பெருமையை உலகிலே யாரால் அளவிட்டுரைக்க முடியும்?'' என்று திருவாய் மலர்ந்தருளினன்.

குணுபாய் அம்மொழிகளைக் கேட்டுப் பாண்டு ரங்கனை நோக்கி, "நீ சமயத்துக்கேற்றபடி பேசுகின்றவன். ஆதலின்,

நின் சொல்லை நம்புதல் முடியாது" என்றுரைத்து, உருக்கு மணிப் பிராட்டியாரின் சந்நிதிக்குச் சென்று, "மூவுலகினுக்கும் அன்னையே, பொற்றாமரைப்போ தன்ன திருவடியாய், அருளே யுருவா யமைந்த மெய்ச் செல்வியே, நாங்கள் வறுமை யென்னுந் துயரக் கடலில் ஆழ்ந்து வருந்துகின்றோம். நாங்கள் அத்துயரக் கடலினின்று கரையேறுதற்கு நின் திருவடியே தெப்ப மாகும். நின் அருளின்றேல், உலகில் உய்யும் நெறி எவர்க்கு உளதாகும்? பிரமன் முதலிய தேவர்களும் உயர் நிலையை யடைந்திருப்பதற்குக் காரணம் நின் திருவருளே யன்றோ?" என்று போற்றிப் பணிந்து நின்றனள்.

அருளின் வடிவமாகிய அன்னையராம் உருக்குமணிப் பிராட்டியார், குணுபாயை நோக்கி, "அம்மையே, உங்களைப் பற்றி வருத்திய துன்பங்கள் முன்னமே ஒழிந்து விட்டன. உங்களைச் சார்ந்தவர்களுக்குந் துன்பஞ் சிறிது மணுகாது எனின், உங்களுக்குத் துன்பம் எங்ஙனம் உண்டாகும்? ஆதலின், நீ வருந்தலை. நம் பெருமானார் நாம தேவனை அனுப்புவர். அவனை யழைத்துக்கொண்டு செல்க" என்று திருவாய் மலர்ந்தருளினர்.

உடனே குணுபாய் உருக்குமணிப் பிராட்டியாரை வணங்கி, பண்டரி நாதன் திருமுன் சென்று நின்றனள். பண்டரி நாதன் குணுபாய் அம்மையை நோக்கி, "அன்னாய், நீ என்னை வெறுக்காதே; நாமதேவனை அழைத்துக் கொண்டு போ" என்று திருவாய் மலர்ந்து, நாம தேவருடைய கையைப் பற்றி, அவ்வம்மையின் கையிற் கொடுத்தருளினன்.

நாம தேவர், "இஃது எம்பெருமானுடைய திருவருள்" என்று எண்ணிக்கொண்டு, தம்முடைய தாய்க்கு

மாறாக ஒன்றுங் கூறாமல், அவ்வம்மையுடன் சென்றனர். அவ்விருவரும் தமது வீட்டை யடைந்ததும், வீட்டில் அடிசிலுக்கு வேண்டிய பொருள்களெல்லாம் நிரம்பியிருத்தலையும், இராதாபாய் சமைத்துக்கொண் டிருத்தலையுங் கண்டு, குணாபாய் அம்மை பெரிதும் வியப்புற்று நின்றனள். நாம தேவர் அப்பொருள்களைக் கண்டு ஐயங் கொண்டு, குணாபாயை நோக்கி, "அன்னையீர், இப்பொருள்களை உமக்குக் கொடுத்தவர் யார்?" என்று கேட்டனர். குணாபாய், "எனக்கு இப்பொருள்களைப் பற்றிய செய்தியொன்றுந் தெரியாது" என்று கூறினர்.

சமையல் செய்து கொண்டிருந்த இராதா பாய் அவர்களைக் கண்டு, அவர்களுக்குக் கை கால்களை அலம்ப நீர் கொடுத்து, முகமலர்ச்சியுடன் உபசரித்து, "உண்ண வாருங்கள்" என்று அன்புடன் அழைத்தனள்.

நாம தேவர் அவள் அவ்வாறு செய்ததைக் கண்டு, பேராச்சரியங்கொண்டு, "வறுமையினால் கடுகடுத்த முகத்தைக் காட்டும் இவள், இன்று இன்மொழிகளைக் கூறி யுபசரித்தற்குக் காரணம் யாது? இப்பொருள்கள் இங்கு எப்படி வந்தன? இவற்றிற்கு ஏதோ சிறந்த காரணம் இருத்தல்வேண்டும்" என்று எண்ணி, இராதா பாயை நோக்கி, "அன்புடையாய், உனக்கு இப்பொருள்கள் எவ்வாறு கிடைத்தன?" என்று கேட்டனர். இராதாபாய், கேசவ செட்டி என்பவர் பொருள் கொண்டு வந்து கொடுத்ததையும், மற்றும் அவர் கூறிச் சென்ற விஷயங்களையும் தன்னுடைய கணவரிடங் கூறினள்.

நாமதேவர் அவற்றைக் கேட்டுப் பாண்டு ரங்கன்தான் அப்பொருளைக் கொண்டு வந்து கொடுத்த கேசவ செட்டி என்பதை யுணர்ந்துகொண்டு, மனமுருகிக் கண்களில் நீர் பெருக, "அருட் கடலே, அன்பின் இருப்பே, இன்பக்

கனியே, எளியேன் பொருட்டுப் பொன்னந் தாமரை யடிகள் தரையிற் பொருந்தப் பொருள் கொண்டு வந்து அளித்த எளிமையை யான் என்னென்று வியந்துரைப்பேன்! நின்னையே தான்வேண்டி நீள் செல்வம் வேண்டாதானாகிய என்னையே இச்செல்வம் தானே வந்தடையச் செய்தனை போலும். இவ்விருள்தருமா ஞாலத்துப் பொருள் அன்றோ புந்தியைக் கெடுப்பது? பொன்னுக்கும் பொன்னான சீரிய ஞானச் செழும் பரஞ்சோதி, நின்னையன்றி யான் பிற பொருள்களை வேண்டேன்,'' என்று கூறி, அப்பொருள் முழுவதையும் வாரி அவ்வூரி லிருந்த ஏழைகளுக்குக் கொடுத்துவிட்டனர். பின்பு அவர்,

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.''

என்னும் உறுதிப் பொருளை நன்குணர்ந்து, அவ்வழியின் உறுதியுற நின்று, அனைவர்க்கும் அறிவு விளங்கச் செய்தருளினர்.

4. நாமதேவர் ஞானதேவருடன் தீர்த்த யாத்திரை செய்தல்

செல்வத்திற் சிறந்த அளகா புரியில் விட்டோபா என்பவர் ஒருவரிருந்தார். அவருடைய மனைவியின் பெயர் உருக்குமா பாய் என்பது. அவர்களுக்கு நிவர்த்தி தேவர், ஞான தேவர், சோபான தேவர் என்னும் மூவர் புத்திரரும், முக்தா பாய் என்னும் ஒரு புத்திரியும் பிறந்தனர். அந் நால்வரும் அறிவொழுக்கங்களிலும் விஷ்ணு பக்தியிலும் சிறந்து விளங்கினர். அவர்களுள் இரண்டாம் மைந்தராகிய ஞான தேவர், ஞானத்திற் குறையுளாய் விளங்கி, யாவரும் வியக்கும்படி பல அற்புதச் செயல்களை இயற்றி வந்தனர். அவர் ஒரு கால் நாம தேவரைச் சேவிக்க

விரைந்து, பண்டரி புரத்தை யடைந்து, நாம தேவ ரில்லத்தை நோக்கிச் சென்றனர்.

நாம தேவர் ஞான தேவருடைய வருகையை யுணர்ந்து, எதிர்கொண்டு சென்று, அவரை வணங்கி, அழைத்துச் சென்று, ஒரு பீடத்தில் உட்காருவித்து, அவரை நோக்கி, "மெய்ஞ்ஞானச் செல்வரே, தேவரீர் அடியேன் மீது அருள் கூர்ந்து, இக்குடிசைக்கு எழுந்தருளினீர்கள். இதனால் யான் தூய னானேன். தங்களை நல்விருந்தினராகக் கொள்ள என்ன மாதவம் செய்தது இச்சிறு குடில்!" என்று கூறினார்.

ஞான தேவர் நாம தேவரை நோக்கி, "நாம தேவரே, உம்முடைய மேன்மைக்கு ஓர் அளவு முண்டோ? அன்பின் இன்பத்தை யாராய்ந்தறிந்தவர் நீரே. நீர் உம்முடைய அன்பினால் பண்டரி நாதனை உம்முடைய சொத்தாக்கிக்கொண்டீர். நீர் காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்னும் ஆறு பகைகளையும் அடியோடு களைந்தெறிந்தீர். உம்முடன் கூடி யிருக்கும் உம்முடைய சுற்றத்தவர்களின் நல்வினைப் பயனானது கணக்கி லடங்குவ தன்று. உம்மிடம் யான் ஒரு செய்தி கூறுதல்வேண்டும். என்னுடன் வாரும்" என்று கூறி, அவரை யொரு தனியிடத்திற் கழைத்துச் சென்று, "அன்பர்களிற் சிறந்தவரே, உம்முடன் கூடித் தீர்த்த யாத்திரையும் தல யாத்திரையும் செய்ய விழைவுற்றேன். நீர் என் விருப்பத்தினைப் பயனுடையதாக்குதல் வேண்டும்" என்று சொல்லினர்.

நாம தேவர் அம்மொழியைக் கேட்டுத் துயர் கூர்ந்த மனத்தினராய், ஞான தேவரை நோக்கி, "ஞானகரே, பண்டரி நாதனை நாளுஞ் சேவித்தலைவிட்டுத் தீர்த்த யாத்திரை முதலியவற்றை விரும்புவது, கையிலுள்ள பொருளைக்

கடலிற் சொரிந்துவிட்டு, அரிப்பரித்துப் பொருளீட்ட விரும்புவதாமன்றோ? நான் பிறந்தது முதல் என்னுடைய உடலும் உயிரும் பண்டரிநாதன் வசத்திலேயே இருக்கின்றன. யான் மனம் வாக்குக் காயங்களால் பண்டரிநாதனுக்குத் தொண்டு செய்வதன் பொருட்டே உயிருடனிருக்கின்றேன். அடியேனுக்குப் பண்டரி நாதனுடைய சேவை இடையறாமல் இருக்கும்படி தேவரீர் திருவருள் புரிதல் வேண்டும்" என்றனர்.

ஞான தேவர் நாம தேவரை நோக்கி, "நாம தேவரே, உம்முடைய கருத்தை யானறிவேன். ஆயினும், சில நாட்கள் வரையில் உம்முடன் கூடி யாத்திரை செய்ய என் மனம் மிகவும் விழைவு கொண்டுளது. ஆதலின், நாமிருவரும் பண்டரி நாதனிடஞ் செல்வோம்; வருக" என்று கூறி, அவரைத் தம்முடன் அழைத்துச் சென்று, பாண்டு ரங்கன் திருத்தளியை யடைந்து, உலகத் துயிர்களுக்கெல்லாம் ஒரு தனி யன்னையாராகிய உருக்குமணிப் பிராட்டியாரோடு செங்கல்லின்மீது நின்ற திருக்கோலமாக எழுந்தருளியிருக்கும் பண்டரி நாதனைப் பணிந்து, பலவாறு போற்றித் தம்முடைய விருப்பத்தினைப் பத்துடை யடியவர்க் கெளியவனாகிய அப்பெருமானிடம் விண்ணப்பித்துக் கொண்டனர்.

உலகங்களுக்கெல்லாம் ஒருதனி முதல்வனாகிய பாண்டு ரங்கன் அம்மொழிகளைக் கேட்டு, "ஞான தேவா, நீ படிகம்போன்ற தூய மனமுடையவன். அத்தகையனாகிய நீ தீர்த்த யாத்திரையை விரும்புவது, நெருப்பு வெப்பத்தினையும், நீர் தட்பத்தினையும் பெற விரும்பி, அவற்றைப் பெற முயல்வதை யொக்கும்" என்று திருவாய் மலர்ந்தருளினன்.

ஞான தேவர் தேவதேவனாகிய பாண்டுரங்கனை நோக்கி, "எம்பெருமானே, நாம தேவர் அன்பிற்கு உறையுளாய்

விளங்குகின்றன ராதலின், இவருடன் சில நாட்கள் உறைதலை விரும்பியே அடியேன் இங்ஙனம் விண்ணப்பம் செய்தேன். அடியார்க்கெளிய பெருமானே, என் விருப்பத்தினை முடிப்பித்தல் நினது கடமையாகும்,'' என்று கூறினர்.

பாண்டு ரங்கன் அதனைக் கேட்டு, நாம தேவரை நோக்கி, "என்னன்பிற்குரிய செல்வனே, ஞான தேவன் மெய்ஞ்ஞானச் செல்வன்; அவன் உன்னோடு கூடி வசித்தலை விரும்புகின்றான். நீ சில நாட்கள் அவனுடன் சென்று வருக,'' என்று கூறினன். நாமதேவர் மிக்க வருத்தத்துடன் பாண்டு ரங்க நாதனிடம் விடைபெற்றுக் கொண்டு ஞானதேவருடன் சென்றனர்.

நாம தேவர் சென்றபின் பாண்டு ரங்கன் மிக்க வாட்டமுற் றிருந்தனன். உருக்குமணிப் பிராட்டியார் பாண்டு ரங்க நாதனை நோக்கி, "என்னன்பிற் குறைவிடமான இறைவரே, தாங்கள் இங்ஙனம் வாட்டமுற் றிருத்தற்குக் காரணம் யாது?'' என்று வினவினர்.

பாண்டு ரங்கன் அப்பிராட்டியாரை நோக்கி, "அன்புடையாய், நாம தேவனை நான் இதுகாறும் பிரிந்திருந்ததில்லை. இப்பொழுது அவன் பிரிவு எனக்குப் பெருந் துன்பத்தை யுண்டாக்கியது. அவன் மீண்டு வந்தால்தான் என் துன்பம் நீங்கும்,'' என்று திருவாய் மலர்ந்தனன்.

உருக்குமணிப் பிராட்டியார் எம்பெருமானை நோக்கி, "பத்துடை யடியவர்க்கெளிய இறைவரே, நீர் இல்லாத இடம் ஒன்றிருப்பினன்றோ நாம தேவனை நீர் பிரிந்திருத்தல் முடியும்?'' என்றனர்.

பாண்டு ரங்க நாதன் உருக்குமணிப் பிராட்டியாரை நோக்கி, "அன்புடைச் செல்வியே, நான் இக்கோயிலில் கொண்டுள்ள இவ்வுருவத்தைச் சேவித்தலிலேயே அவன் பேரவாக்கொண்டவன். ஆதலின், எனக்கு இவ்வுருவத்

துடனே அவனுடைய அன்பின் பெருக்கைக் கண்டு களிப் பதிலேயே விருப்பம் மிகுந்துவிட்டது. ஆதலினுலேதான் அவன் இவ்விடத்தினின்று பிரிந்து சென்றது எனக்குப் பெருந்துயரை விளைத்துவிட்டது" என்றனன்.

அதைச் செவி மடுத்த உருக்குமணிப் பிராட்டியார் இறைவனை நோக்கி, "அன்பர்கட் கன்பரே, நீர் வாட்டமுற வேண்டா. உம்முடைய அன்பன் இங்கு விரைவில் வந்து விடுவன்" என்று கூறித் தேற்றினர்.

ஞான தேவருடன் சென்ற நாமதேவர் பாண்டு ரங்க நாதனைப் பிரிந்தமைக்குப் பெரிதும் வருந்தி, "எம்பெரு மானே, அடியேன் உன்னைப் பிரிந்ததனுல் நீரைப் பிரிந்த மீனென வாடுகின்றேன். உன்னைக் காண என் கண்கள் அவாவுகின்றன. எம்மிறைவனே, உன்னுடைய 'பாசமா மடியர்பால் நேசமா மடிகளும், பைம்பொனு ராடையும், செம்பொன்மா மேனியும், ஆசையா மலருளாள் வாசமா ரகலமும், அஞ்சலென் றருள்செயுங் கஞ்சமாமலர்களும், கருணையின் தேசுலாம் வதனமும், மாசிலா முறுவலும், சிரிதாய் எழுதுகத் தூரி நாமமும்' மீண்டும் என்று காண் பேனே?

"நீரகத்தாய் நெடுவரையி னுச்சி மேலாய்
நிலாத்திங்கட் டுண்டத்தாய் நிறைந்த கச்சி
யூரகத்தாய் ஒண்டுறைநீர் வெஃகா வுள்ளாய்
உள்ளுவா ருள்ளத்தாய் உலக மேத்தும்
காரகத்தாய் கார்வானத் துள்ளாய் கள்வா
காமருபூங் காவிரியின் தென்பால் மன்னும்
பேரகத்தாய் பேராதென் னெஞ்சி னுள்ளாய்
பெருமானுன் றிருவடியே பேணி னேனே."

இவ்வாறிருந்தும் நானுன்னைப் பிரியும்படி செய்தனையே! இது யாது காரணத்தாற் செய்தனை? பூதனை தந்த நஞ்சமு

ஆண்ட பித்தனே, இதுவும் நினக்கொரு திருவிளை யாட்டோ ?'' என்று வருந்தினர்.

ஞானதேவர் அதனைக் கண்டு, புன்முறுவல் பூத்து, நாம தேவரை நோக்கி, "மெய்ம்மை யகலாத அன்பரே, பாண்டு ரங்க நாதனுடைய அன்பினுக் குறைவிடமாகிய நீர் அவனருளைப் பெறுதாரைப்போல இங்ஙனம் என் வருந்துகின்றீர் ?

" தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவந் தானே
தமருகந்த தெப்பேர்மற் றப்பேர்—தமருகந்த
தெவ்வண்ணஞ் சிந்தித் திமையா திருப்பரோ
அவ்வண்ண மாழியா னும்."

என்னும் மறை மொழியை நீர் அறியீரோ ? உம்மைப் போன்ற அடியவர்கள் எங்கிருப்பினும் அப்பரந்தாமனைக் காண்பார்கள். அது கொண்டன்றே,

" இளப்பினை யியக்கம் நீக்கி யிருந்துமுன் னிமையைக் கூட்டி
அளப்பிலம் புலன டக்கி அன்பவர் கண்ணே வைத்துத்
துளக்கமில் சிந்தை செய்து தோன்றலுஞ் சுடர்விட் டாங்கே
விளக்கினை விதியில் காண்பார் மெய்ம்மையைக் காண்கிற்
[பாரே."

என்று பெரியார் பணித்தருளினர் ? கையில் வெண்ணெயை வைத்திருப்பவன் நெய்க்காக வருந்துத லாகுமா ? பாண்டு ரங்கன் என்றும் மனத்துள் உறையப்பெற் றிருக்கின்ற நீர் அப்பெருமானைப் பிரிந்திருப்பவராக உம்மை எண்ணி வருந்துத லாகுமா ? இனி வருந்தாதீர்,'' என்று கூறி, அவரைத் தேற்றினர்.

பிறகொரு நாள் ஞான தேவர் நாம தேவரை நோக்கி, "சீரிய அன்பரே, நீர் எவ்வாறு பாண்டு ரங்கனைத் தியானித்தீர் ? எவ்வாறு ஆராதித்தீர் ? அப்பெருமானை யெவ் வாறு உம்முடைய பொருளாக்கிக் கொண்டீர் ? அவற்றை

யான் கேட்டறியப் பேரவாக் கொண்டுளேன். நீர் அவற்றை எனக்குக் கூறி, என் மனங் களிப்படையுமாறு செய்வீராக" என்று வேண்டினர்.

நாம தேவர் ஞான தேவரை நோக்கி, "மெய்ஞ்ஞானச் செல்வரே, பேரறிஞருக்குட் சிறந்தவராகிய நீர் சிற்றறி வுடையனாகிய என்னை இங்ஙனங் கேட்பது எனக்குப் பெரி தும் வியப்பை விளைக்கின்றது. பலருக்கு உண்மைப் பொருளி னியலை உள்ளங்கை நெல்லிக் கனியென உணர்த்த வல்ல நீர் சிறுமதியாளனாகிய என்னை இங்ஙனம் கேட்ட லாமோ?" என்றனர்.

ஞான தேவர் நாம தேவரைப் பார்த்து, "சிறிய அன் பரே, அப்பெருமான் 'துயக்கறு மதியினன் ஞானத்துள மலரைத் துய்க்கும், மயக்குடை மாயைகள் வானினும் பெரியன வல்லன்' ஆதலின், அப்பெருமானை எத்தகைய ஞானிகளாலும் ஆய்ந்தடைத லியலாது. பத்துடை யடியார் களுக்கே அப்பேருளாளன் எளியனா யிருக்கின்றான். ஆத லால், உம்பால் அப்பெருமானை யடையும் வகையை யுணர்ந் தின்புற விரும்பினேன். நீர் சிறிதும் தடை சொல்லாமல் நான் வினவியவற்றைக் கூறி யருளுவீர்" என்றனர்.

அதனைக் கேட்ட நாமதேவர் ஞான தேவரை நோக்கி, "மெய்ஞ்ஞானச் செல்வரே, தந்தை மைந்தனுடைய மழலை மொழிகளைக் கேட்க விரும்புவதுபோல நீர் என் மொழி களைக் கேட்க விரும்புகின்றீர். உம்முடைய விருப்பத் திற்குத் தடை கூற அஞ்சி, அடியேன் அநுபவத்தினால் அறிந்தவற்றை உமக்கு விண்ணப்பிக்கின்றேன்: பேரரு ளாளனாகிய அப்பெருமானை யன்றிப் பிறிதொன்றின்று என்னும் உறுதி முதலில் உண்டாதல் வேண்டும். அதனால், பற்றற்றவனாகிய அப் பெருமானிடம் பற்றுண்டாகும்;

உலகப் பற்றொழியும். பிறகு 'அப்பெருமான் எங்கும் நிறைந்துள்ளவன்; அவன் இல்லாத இடமும் பொருளும் இல்லை' என்னும் நிச்சயம் உண்டாதல் வேண்டும். அதனால், எல்லா உயிர்களி னிடத்திலும் அன்பும் அருளும் உண்டாம். அப் பொருமானுடைய நன்னிலை சிற்குணத் தரும் தெரிவரிதாதலின் உலகுய்ய அப்பெருமான் கொண்ட திருவுருவங்களில் ஒன்றை அப்பெருமானை எளிதிற் போற்றுதற் பொருட்டு மனம் பற்றுதல் வேண்டும். அங்ஙனம் பற்றிய உருவில் யாருக்கு அன்பு பெருகுகின்றதோ, அவர்கள் ஒப்பில்லாத இன்பத்தை இம்மையிலேயே இனிது அநுபவிப்பார்கள். அவ் வுருவை அர்ச்சை வடிவிலே கொண்டு தியானித்தல் வேண்டும். நான் பண்டரியில் அர்ச்சை வடிவினில் உருக்குமணிப் பிராட்டியாரோடு எழுந்தருளியுள்ள கண்ணனையே என் மனத்திற் கொண்டேன். பொருளாசை கொண்டவன் எத்தொழிலைச் செய்யினும் அவன் மனம் பொருளிலேயே செல்லுதல் போல, என் மனம் பண்டரி நாதனைச் சேவித்தலிலேயே செல்கின்றது. அசுணப் பறவைக்கு மற்றெதனாலும் இன்பமுண்டாகாமல், இசையின் ஒலியினாலேயே இன்ப முண்டாதல்போல, அப்பெருமானைத் தியானித்தலினாலேயே எனக்கு இன்ப முண்டாகின்றது. சாதகப் பறவை தன் உயிர் வாழ்வுக்கு முகிலினது நீரையே ஆதரவாகக் கொண்டிருப்பதுபோல, யான் என் உயிர் வாழ்வுக்கு அப்பெருமானுடைய திருவருளையே ஆதரவாகக் கொண்டிருக்கின்றேன். அப்பெருமானுடைய திருவருளைப் பெறுதற்குரிய உறுதிகளாக என் அநுபவத்தினால் யான் அறிந்து கொண்டவைகள் இவைகளே யாகும்" என்று கூறினர்.

ஞான தேவர் அவற்றைக் கேட்டு, ஆனந்தத்தினால் கண்களில் நீர் பெருக, நாம தேவரைத் தழுவிக்கொண்டு,

அவரை நோக்கி, "நாம தேவரே, நீரே மெய்ஞ்ஞானச் செல்வர். நீரே சிறிய அன்பர். உம்முடைய மன நிலை பிறருக்கு எய்துதல் அரிது. உம்முடன் கூடி உறையப் பெற்றதனால் நான் பேரின்பக் கடலிலே மூழ்கினவனானேன். உம்முடைய மொழிகளைக் கேட்குந்தோறும் என் மனத்திலே இன்ப வெள்ளம் கரை கடந்து பெருகுகின்றது.

"பொய்சி லைக்குர லேற்றெ ருத்தமி
றுத்துப் போரா வீர்த்தகோன்
செய்சி லைச்சுடர் சூழொ ளித்திண்ண
மாம திள்தென்ன ரங்கனும்
மெய்சி லைக்கரு மேக மொன்றுதம்
நெஞ்சில் நின்றுதி கழப்போய்
மெய்சி லிர்ப்பவர் தம்மை யேநினைந்
தென்மனம் மெய்சி லிர்க்குமே."

என்படி என் மனம் உம்மை நினைக்குந்தோறும் என் மெய் சிலிர்க்கின்றது.

"மாலை யுற்றக டற்கி டந்தவன்
வண்டு கிண்டுந றுந்துழாய்
மாலை யுற்றவ ரைப்பெ ருந்திரு
மார்வ னைமலர்க் கண்ணனை
மாலை யுற்றெழுந் தாடிப் பாடித்தி
ரிந்த ரங்கனெம் மானுக்கே
மாலை யுற்றிடுந் தொண்டர் வாழ்வுக்கு
மாலை யுற்றதென் னெஞ்சமே."

என்றபடி உம்முடைய இன்ப வாழ்க்கையில் என் மனம் மாலை யுற்றது," என்று கூறி, அவரை அழைத்துக்கொண்டு அத்தினபுரத்திற்குச் சென்றனர்.

## 5. நாமதேவர் இறந்த பசுவை எழுப்புதல்

நாமதேவர் அப்பட்டணத்திலே உருக்குமணி நாதனுடைய கலியான குணங்களைக் கூற லாயினர். அந்நகர மாந்தர் அனைவரும், ஆண் பெண் என்னும் வேறுபாடின்றி, அவற்றைக் கேட்டுத் தம்மை மறந்தவர்களாய் ஆடிப்பாடிப் பண்டரி நாதனைத் துதிக்க லானார்கள். அப்போது அப்பட்டணத்தை ஆண்டுகொண்டிருந்த மகமதிய அரசன் அச்செய்தியினைக் கேட்டு, நாம தேவருடைய மனநிலையை ஆய்ந்தறிய வெண்ணி, இறந்த பசு வொன்றை ஒரு வண்டியிலேற்றுவித்துக்கொண்டு நாம தேவர்பாற் சென்று, அவரை நோக்கி, "நீர் இப்பசுவைப் பிழைப்பிக்கின் உம்மை உண்மையன்பர் என நம்புவேன்; இன்றேல், உம்மைத் தண்டிப்பேன். நீர் எத்தனை நாட்களில் இதனை உயிர்பெற் றெழச் செய்வீர்?" என்று கேட்டான்.

நாம தேவர் பண்டரி நாதனைத் தமது திருவுள்ளத்திற் கொண்டு, அம்மன்னனை நோக்கி, "மன்னரே, பண்டரி நாதர் நான்கு நாட்களில் இப்பசுவைப் பிழைப்பிப்பார்" என்று கூறினர். அதுகேட்ட அம்மன்னன் சில சேவகர்களை நாம தேவரிடங் காவலாக அமைத்துவிட்டுத் தன் அரண்மனைக்குச் சென்றனன்.

பின்னர் நாமதேவர் பண்டரிநாதனைப் பலவாறு பாடித் துதித்துக்கொண் டிருந்தனர். மூன்று நாள் வரையினுந் துதித்தும் பண்டரிநாதன் நாமதேவருக்குச் சேவை தராமலிருந்தனன். ஆதலின், நான்காம் நாள் நாம தேவர் மன மிக வருந்தியவராய், "எம்மிறைவரே, நீர் உம்முடைய அடியவனாகிய என்னுடைய சொல் பொய்க்குமாறு செய்தல் தகுமோ? நீர் அன்பர்கட் கெளிய ரல்லீரோ? என்னிடத்தில் உமக்கு அருள் இல்லையோ? நான் உமக்கு ஏதே

னுங் குற்றஞ் செய்தேனோ? என் சொற்கள் உம்முடைய செவிகளிற் கேட்கவில்லையே?'' என்று மனமிகக் கரைந்து கூறினர்.

உடனே பண்டரி நாதன் நாம தேவர்முன் தோன்றினன். இறைவனைக் கண்ட நாம தேவர் களிகூர்ந்து எழுந்து வணங்கி, “எம்மிறைவரே, நீர் இத்தனை நாட்கள் தாழ்த்து வந்ததற்குக் காரணம் யாது?'' என்றனர்.

பண்டரி நாதன், “அன்பனே, என்மீது குற்ற மில்லை. நீ 'நான்கு நாட்களில் இப்பசு பிழைக்கும்' என்று கூறினை யன்றோ? ஆதலின், நான் உனது சொற்படி நான்காம் நாளாகிய இன்று வந்தேன். நீ 'இப்பசு உடனே பிழைக்கும்' என்று கூறியிருப்பின், நான் அன்றே வந்து இதனைப் பிழைப்பித்திருப்பேன்'' என்று திருவாய் மலர்ந்தருளி, அப்பசுவைப் பிழைப்பித்து மறைந்தருளினன்.

மன்னனுடைய சேவகர்கள் அதனைக்கண்டு, பெருவியப் பெய்திச் சென்று, தங்கள் அரசனுக்கு உரைத்தார்கள். அம் மகமதிய மன்னன் உடனே விரைந்து நாம தேவரை யணுகி வணங்கி, “சிரிய ஞானச் செல்வப் பெருந்தகையீர், தாங்கள் கடவுளிடத்தில் மெய்யன்புடையாரென்பதை இப் பொழுது அடியேன் நன்குணர்ந்தேன். நான் தங்களுடைய அன்பின் பெருக்கைப் பரிசோதிக்க வெண்ணியே இக் குற்றத்தைச் செய்தேன். இதன் பொருட்டுத் தாங்கள் எம்மீது சீற்றங் கொள்ளாது, என்னை மன்னித்தருள வேண்டுகிறேன். தாங்கள் தூயருள் தூயவர். தங்களுடைய சேவையினுல் யான் நல்லறிவையும், சிறந்த புண்ணியத்தையும் பெற்றேன்'' என்று மிக்க வணக்கத்துடன் நாத் தழுதழுப்பக் கூறினுன்.

நாம தேவர் அம்மன்னனை நோக்கி, “வேந்தரே, உம்முடைய செயலால் இப்பசு பகவானுடைய திருவருளைப்

பெறுதற்குரிய தாயிற்று. உம்முடைய செயல் பண்டரி நாதருடைய பேரருளை அனைவரும் உணர்ந்து உய்தற்கும் ஏதுவாயிற்று'' என்று கூறி, அம்மன்னனை உபசரித்தனர். அக்கொற்றவன் பெருமகிழ் வெய்தி, நாமதேவரை வணங்கி, அவர்பால் விடை பெற்றுச் சென்றனன்.

## 6. நாமதேவருக்காகக் கிணற்று நீர் பெருகுதல்

பிறகு நாம தேவரும் ஞான தேவரும் கபீர்தாசர்பாற் சென்று, அவரால் நன்கு உபசரிக்கப் பெற்றுச் சில நாள் அவருடன் தங்கி யிருந்து, பின்னர் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு, பிரயாகைக்குச் சென்று, திருவேணி சங்கமத்திலே நீராடினார்கள். பின்பு அங்கு நின்றும் புறப்பட்டு, அயோத்தி, மதுரை, கோகுலம், துவாரகை முதலிய தலங்களுக்குச் சென்று, சுவாமியைச் சேவித்து, ஆங்காங்குள்ள நதிகளில் நீராடி, மார்வாடி தேசத்தின் அருகில் ஓரிடத்திலே வந்து தங்கினார்கள். அப்போது அவ்விருவருக்கும் நீர் வேட்கை மிக்கது. அவர்கள் பலவிடங்களிலுஞ் சென்று, நீர் தேடினார்கள். நீர் எங்குங் கிடைக்க வில்லை. அவர்கள் மேலுந் தேடுகையில் ஓரிடத்தில், வழியின் ஓரத்திலே, ஒரு கிணறு இருந்தது. அவர்கள் அதனைக் கண்டு, அதனருகிற் சென்று பார்த்தார்கள். அதில் நீர் மிக்க ஆழத்தில் இருந்தது. ஞான தேவருக்குக் கிணற்றிலிறங்கும் வழக்க முண்டு; ஆதலின், அவர் அதிலிறங்கி நீர் வேட்கை தணியும்படி நீர் பருகி வந்தனர். நாம தேவருக்குக் கிணற்றி லிறங்கும் பழக்கம் இன்மையால், தமது நீர் வேட்கையைத் தணித்துக் கொள்ளக்கூடாமல் வருந்திப் பண்டரி நாதனைத் தியானித்தனர். உடனே பண்டரி நாதனுடைய திருவருளால் அக்கிணற்று நீர் பொங்கி மேலே வந்தது. நாம தேவர் அந்நீரைப் பருகித் தாகந் தணியப் பெற்றனர்.

ஞான தேவர் அவ்விந்தையைக் கண்டு, பெரு வியப் பெய்தி, நாம தேவரைத் தமது இரு கரங்களாலும் மார்புறத் தழுவிக் கொண்டு, அவரை நோக்கி, "நாம தேவரே, நீர் செய்த புண்ணியமே புண்ணியம்! அதனை அளவிட்டுரைக்க எவரா லியலும்? ஆ! ஆ!! பண்டரி நாதர் உமது கைப் பொருளாகவே இருக்கின்றனரே!" என்று கூறி மகிழ்ந் தனர்.

அன்று நாம தேவரின் பொருட்டுப் பண்டரி நாதன் திருவருளால் பெருகி மேல் வந்த அக்கிணற்று நீர், அன்பின் பெருக்கே போல, இன்றளவும் பெருகிக்கொண்டே யிருக் கின்றது. அதில் பல பெரியோர்கள் மார்கழி மாதத்தில் வந்து நீராடிச் செல்கின்றார்கள்.

## 7. நாமதேவரும் ஞானதேவரும் உள்ள திசையில் நாகநாதர் சந்நிதி திரும்புதல்

அப்பெரியார் இருவரும் பின்பு அரித்துவாரஞ் சென்று, கங்கையிலே நீராடி, பின்னர் இமய மலையில் இவர்ந்து, கங்கோத்திரியில் மூழ்கி, பதரீ நாராயணனையும் கேதாரேசனையுந் தரிசித்து, இமய மலையினின் றிறங்கி, சாலக்கிராமத்தையும் நைமிசாரணியத்தையும் தரிசித்து, கயைக்குச் சென்று, பங்குனி யாற்றிலே நீராடிப் பிதுர்க்களை யெண்ணிப் பிண்டம் வைத்து, பின்னர் வைதேசுவரம், ஸ்ரீ சகந்நாதம், ஸ்ரீ கூர்மம், பீமேசுவரம், ராஜமகேந்திரம், சிங்காசலம், மங்களகிரி, ஸ்ரீ சைலம், திராட்சராமம், விரு பாட்சம், அகோபிலம், காளத்தி, திருவேங்கடம், கடிகாசலம், காஞ்சீபுரம், வேதகிரி, ஸ்ரீ முட்டம், சிதம்பரம், மயூரம், கும்பகோணம், திருவரங்கம், சம்புகேசுவரம், இடபாத்திரி, தென்மதுரை, தோதாத்திரி, கன்னியா குமரி, இராமே சுவரம், தர்ப்ப சயநம், திருவநந்தபுரம், ஜனார்த்தனம், பாட

நாசம், திருக்குற்ருலம், கோகர்ணம், திரியம்பகம், யாத வாத்திரி முதலிய திருப்பதிகளில் பகவானைச் சேவித்து, ஆங்காங்குள்ள புண்ணிய நதிகளிலே நீராடித் திருநாமங்களைப் பல அடியவர்களோடு கூடிப் பாடி ஆடிக் களித்து, மாசி மாதத்தில், அமர பட்சம் சதுர்த்தசியில், மகா சிவராத்திரி நாளில், நாக நாத புரத்தை யடைந்தனர்.

அங்கு அப்பரம ஞானிகள் நீராடி, நித்தியக் கடன்களை முடித்துக்கொண்டு, நாகநாதர் சந்நிதிக்குச் சென்று வணங்கிப் பாண்டுரங்கனைப் புகழ்ந்து பாடிக்கொண் டிருந்தார்கள். பல அடியார்கள் அப்பெரியார்களைச் சுற்றி யிருந்து, அவர்கள் பாண்டு ரங்கனைப் புகழ்ந்து பாடும் பாடல்களைச் செவியாரக் கேட்டுக் களிப்பென்னும் கடலில் மூழ்கித் தங்களை மறந்திருந்தார்கள்.

அப்போது அக்கோயில் அருச்சகர்கள் அங்கு வந்து, அப்பெரியார்களைப் பலர் சூழ்ந்துகொண்டு தம்மைச் சிறிதும் மதித்துப் பாரா திருந்ததைக் கண்டு, பொருமை கொண்டு, நாமதேவரை நோக்கி, "என்ன ஓய்! நாங்கள் கோயிலுக்குள் போக வழி விடாமல் பலரைச் சேர்த்துக் கொண்டு இப்படி ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் இருக்கிறீரே! இந்த ஜன நெருக்கத்தில் நாங்கள் உள்ளே போவது எப்படி? இப்படியே நாங்கள் கோவிலுக்குள் போகவேண்டுமானல் உங்களைத் தீண்டிக்கொண்டுதானே போகவேண்டும்? நாங்கள் இழிந்த ஜாதியினர்களாகிய உங்களைத் தீண்டிக்கொண்டு சென்று, பகவானை அருச்சிப்பது தகுதியாமா? இந்த ஆட்டமும் பாட்டும் இங்கு ஏற்கா. இவற்றைப் பண்டரி புரத்திற்குச் சென்று, அங்கு நடத்தும்," என்று இகழ்ந்து கூறினர்கள்.

நாமதேவர் பண்டரி நாதனிடத்தில் தம்மனத்தைச் செலுத்தி யிருந்தமையால், அந்த அருச்சகர்கள் சொன்ன

வற்றைக் கேட்டிலர். ஆதலின், அவர், அவர்களுக்குப் பதிலொன்றுங் கூறவில்லை. அதனைக் கண்ட அருச்சகர்கள் கடுஞ்சின முற்று, நாமதேவரை நோக்கி, "ஓய், நீரென்ன, செவிடரா? நாங்கள் சொல்வன ஏன் உம்முடைய காதில் விழவில்லை? நீர் கோயிலின் பின்புறத்துச் சென்று, உம் மிஷ்டம்போல் பாடி யாடும்," என்று அதட்டிக் கூறினார்கள். நாமதேவர் அப்பொழுதுதான் அவ்வருச்சகர்கள் சொல்வனவற்றைக் கவனித்தார். உடனே அவர் ஞான தேவரோடும் மற்றை யடியவர்கள் கூட்டத்தோடும் கோயிலின் பின்புறத்துச் சென்று, பாண்டுரங்க நாதனைப் பாடிக் கொண் டிருந்தார்.

அப்போது பல்லாயிரம் விஷ்ணு பக்தர்கள், மின்னற் கொடிகள்போன்ற கொடிகளைப் பிடித்துக்கொண்டு, வானினின் றிறங்கி, நாமதேவ ரிருக்கும் இடத்தை யடைந்தார்கள். ஞான தேவரும் மற்றவர்களும் அவர்களைக் கண்டு, பேரானந்த மடைந்திருந்தார்கள். நாமதேவர் அவர்களைக் கண்டு பரவச முற்று, பாண்டுரங்கனைப் பாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது கிழக்குத் திசையை நோக்கி யிருந்த நாக நாத சுவாமி நாமதேவ ரிருக்கும் மேற்றிசையை நோக்கிக் கோயிலுடன் திரும்பி, நாமதேவர் பாடும் பாட்டுகளை அன்புடன் கேட்டுக் களித்துக்கொண் டிருந்தார். நாமதேவர் இரவு முழுதும் பாடிக்கொண்டே யிருந்தார்.

அருச்சகர்கள் இரவில் நான்கு ஜாமத்திலும் சிவபூசை செய்துகொண் டிருந்து, விடியற் காலையிலே நீராடச் சென்றார்கள். நாக நாத சுவாமியின் கோயில் மேற்கு முகமாகத் திரும்பி யிருப்பதைக் கண்டு, வியப்புற்று, 'இதற்குக் காரணம் யாது?' என அவர்கள் ஆய்ந்தார்கள். அன்பென்னும் வலையிற் கட்டுப் படுகின்றவராகிய நீலகண்டர், அன்பிற் சிறந்தவராகிய நாமதேவர் பாண்டு ரங்கனைக் குறித்

துப் பாடும் அன்பு மயமான பாடல்களைக் கேட்கும் பொருட்டே அவ்வாறு திருப்பி யிருக்கின்றா ரென்பதை யுணர்ந்துகொண்டு, "ஆ! நாம் நாமதேவருடைய பெருமையை யுணராமல் அவரைப் பலவாறு இழித்துப் பேசி விட்டோமே! நாம் உண்மைப் பொரு ளுணர்ச்சி யற்றவர்கள்; ஆகையால், மெய்யடியாராகிய அவரை இழித்துச் சொல்லிப் பாவத்திற் காளானோம்!" என்று பெரிதும் வருந்தி, நாமதேவரிடம் சென்று, அவரை வணங்கி, "ஆராத காத லடியவராகிய பெரியீர், நாங்கள் ஏழை மதியாளர்களாகையால், உம்முடைய பெருமையை யுணராமல், உம்மை இழித்துக் கூறினோம். எங்களுடைய குற்றத்தை நீர் மன்னித் தருளவேண்டும்," என்று வேண்டினார்கள். நாமதேவர் அவர்களுக்கு இன்மொழிகளைக் கூறி, அவர்களைத் தழுவிக்கொண்டார்.

அம் மறையவர்கள் நாமதேவரை நோக்கி, "பெரியீர், உம்முடைய மனம் அன்பும் அருளும் நிரம்பியது. உம்முடைய சரித்திரம் மிகவுந் தூய்மையானது. இந்த விஷ்ணு பக்தர்கள் வைகுந்தத்தினின்று உம்மைச் சேவிக்க வந்திருக்கிறார்களெனின், உம்முடைய மேன்மையை யாரே அளவிட் டுரைக்க வல்லார்?" என்று கூறி, அவர்பால் விடை பெற்றுச் சென்றார்கள். பின்னர், வைகுந்தத்தினின்று வந்த அடியவர்களும் மறைந்துவிட்டார்கள். நாமதேவர் புகழ் விளங்கும்படி நாக நாதர் திருக்கோயில் இன்றும் மேற்கு நோக்கியே இருக்கின்றது.

### 8. பாண்டுரங்கன் நாமதேவருடைய தீர்த்த யாத்திரையை முடித்தருளல்

பிறகு நாமதேவரும் ஞானதேவரும் நாக நாதரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, பண்டரி புரத்திற்கு

வந்து, பண்டரி நாதனைப் பணிந்தார்கள். நாமதேவர் பண்டரிநாதனை நோக்கி, "எம்மிறைவரே, தங்களைப் பிரிந்திருந்த ஒவ்வொரு விநாடியும் எனக்கு ஒவ்வோ ரூழிபோன்றிருந்தது. இனி நான் தங்களைப் பிரியாதிருக்கும்படி யருள் புரிதல் வேண்டும்," என்று வேண்டினர். பண்டரி நாதன் நாமதேவரை நோக்கி, "என் அன்பினுக் குறைவிடமான செல்வனே, உன்னைப் பிரிந்திருந்ததனால் இதுவரையில் என் மனம் மிகவும் வாடியிருந்தது, உன்னைக் கண்ட பிறகு தான் என் மனம் மேகத்தைக் கண்ட பைங்கூழெனக் களிப்புற்றது இனி என்னைப் பிரிந்திருக்கும்படி யான் உன்னை விடேன். அருமை மைந்தனே, நீ செய்த தீர்த்த யாத்திரையை முடித்தற்குரிய சடங்குகளை முடித்தல் வேண்டும்," என்று திருவாய் மலர்ந்து, பல அந்தணர்களுக்கு அன்னமளித்தற்குரிய ஏற்பாடுகளைச் செய்தனன்.

பின்பு எம்பெருமான் ஒரு மறையவனைப்போல வேடங் கொண்டு சென்று, பல மறையவர்களை யழைத்துவந்தனன். அவ்வந்தணர்கள், தீர்த்த யாத்திரையை முடித்தற்குச் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்து முடித்து, அன்ன முண்டு களித்தார்கள். பண்டரி நாதன் அவர்களை யுபசரித்து, அவர்களுக்குச் சந்தனம் புட்பம் முதலிய அளித்துப் பின்னர் நாமதேவரோடும், ஞானதேவரோடும், அப்பொழுது அங்கு வந்திருந்த சிறந்த அடியவர்களாகிய நிவர்த்திதேவர், சோபான தேவர், விசோபாகேசர் முதலானவர்களோடும் அமுதருந்த உட்கார்ந்தனன். உருக்குமிணிப் பிராட்டியும் சத்தியபாமையும் அவர்களுக்கு அன்னமிட்டனர். பண்டரி நாதன் நாமதேவர் உண்ணும் இலையிலிருந்து ஒரு பிடிச்சோற்றை யெடுத்து உண்டு, "நாமதேவனுடைய எச்சிலமுது எனக்குத் தேவர்கள் உண்ணும் அமுதினும் இனிதா யிருக்கின்றது. இன்றே நான் இன்ப

மெய்தினேன்,'' என்று மகிழ்ச்சி கூர்ந்து திருவாய் மலர்ந் தருளினன். உருக்குமிணிப் பிராட்டியும் சத்தியபாமை யும் புன்முறுவல் பூத்தனர். ஞானதேவர், நிவர்த்தி தேவர், சோபான தேவர் முதலிய மெய்ஞ்ஞானச் செல்வர்கள், 'எம்பெருமானுடைய திருவருள் இருந்தவாறு என்னே!' என்று தமக்குள் எண்ணி, ஆனந்தக் கண்ணீர் பெருக்கி ஞர்கள். பண்டரி நாதன் தன்னுடைய இலையினின்று ஒரு பிடி யன்னத்தை யெடுத்து, நாமதேவருக்கு ஊட்டினன். நாமதேவர் எம்பெருமானுடைய அருட்டிறத்தினை யெண் ணிப் பரவச முற்றனர். இவற்றை யெல்லாம் மறையவர் கள் சேய்மையிலிருந்து பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

பின்னர்ப் பண்டரி நாதனும் நாமதேவர் முதலியவர் களும் அமுதுண்டு முடிந்த பிறகு பண்டரிநாதன் அம்மறை யவர்களை யுபசரித்து விடைகொடுத் தனுப்பினன். மறை யவர்கள் விடைபெற்றுப் போகையில், அவர்களுள் ஒருவன் மற்ற மறையவர்களை நோக்கி, "விப்பிரர்களே, நம்மை யிங்கு அமுதுண்ண அழைத்து வந்த மறையவன் செயல் களைக் கண்டீர்களா? அவன் இழிகுலத்தோனுட னிருந்து உணவருந்தியதோடு அமையாமல், அவனுடைய எச்சில் அன்னத்தையும் எடுத்து உண்டனனே! அவனால் நம் முடைய ஆசாரங்களெல்லாங் கெட்டுவிட்டன. நாம் அவ சியம் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டும்,'' என்று கூறினன். மற்ற மறையோர்களும் அதனை யொப்புக் கொண்டார்கள்.

பண்டரி நாதன் அவ் வேதியர்களுடைய கருத்தை யுணர்ந்து, அவர்கள் பாற் சென்று, அவர்களை மீண்டும் அழைத்து வந்து, அவர்களுக்குப் பொன்னையும் நவமணி களையும் துளசியையுங் கலந்துகொடுத்து அவர்களை யுபசரித்

தனன். பிறகு அப்பெருமான் அம் மறையவர்களைப் பார்த்து, "விப்பிரர்களே, உங்கள் முகங்களை நோக்கினல் உங்கள் மனத்தில் ஏதோ வருத்தம் இருப்பதாகத் தோன்றுகின்றது. அதற்குக் காரணம் யாது? கூறுங்கள்," என்று கேட்டனன். வேதியர்கள் பண்டரி நாதனை நோக்கி, "அறிஞனே, பார்வைக்கு நீ வேதம் முதலிய எல்லா நூல்களையும் நன்ருய்க் கற்றறிந்தவனுகக் காணப்படுகின்ருய். நாமதேவன் இழி குலத்தா னென்பது யாவருக்குந் தெரியும். அங்ஙன மிருக்க, நீ அவனைச் சம பந்தியிலே வைத்து, அன்ன மருந்தினை; அதனேடு அமையாமல் அவன் எச்சிலையும் உட்கொண்டனையே! இவை மறையவர்கள் செய்யத் தக்க காரியங்க ளாமா? நீ மறையவனைப்போல் வேடந் தாங்கி வந்து எங்களை யழைத்தமையால், நாங்கள் வந்து நீ யிட்ட அன்னத்தை யுண்டோம். உன் செய்கையை நோக்கிய பின் நீ எக்குலத்தானே என நாங்கள் ஐயுறுகின்றேம்," என்று கூறினர்கள்.

பண்டரிநாதன் அதனைக் கேட்டு, அம் மறையவர்களைப் பார்த்து, "விப்பிரர்களே, நான் நாமதேவனைச் சம பந்தியில் வைத்து அவனேடு புசித்ததும், அவனுடைய மிச்சிலை யுண்டதும் குற்றமென்று கூறினீர்கள். நாமதேவனுடைய தன்மையை நீங்கள் உணர்ந்திலீர்கள் போலும்! அவன் அறவாழி யந்தணனுகிய பகவானிடத்திலே நீங்காத அன்புடையவன்; பிறர் பகவானை யாராதித்தலைக் காணின் களிகூர்பவன்; தானும் பகவானை யிடைவிடாமல் ஆராதிப்பவன்; பகவானை யாராதித்தல் முதலிய விடயங்களிலே பெருமிதங் காட்டாதவன்; பகவானுடைய சரிதைகளைக் கேட்பதில் அன்பு மிக்கவன்; பகவானுடைய குணனுபவத்திலே விழிநீர் பெருகுதல், மெய் புளகித்தல் முதலிய மெய்ப்பாடுகள் தோன்றப் பெறுபவன்; எப்பொழுதும்

வேறு எண்ணமின்றிப் பகவானையே தன் மனத் தாமரையிலே அமைத்திருப்பவன்; வேறு பொருளை யடைய விழைத லின்றிப் பகவானைத் தரிசித்த லொன்றையே பயனாகக் கொண்டவன்; இவ்விதக் குணங்கள் யாவும் பொருந்தப் பெற்ற நாமதேவனை இழிந்தவ னென்று கூறுதல் அறிவுடைமை யாகுமோ? வேத முதலிய நூற்களைக் கற்றும் உங்கட்கு உண்மைப் பொரு ளுணர்ச்சி யுண்டாக வில்லை.

"சோர்வி லாத காத லால்தொ டக்க றும னத்தராய்
நீர ராவ ணைக்கி டந்த நின்ம லன்ந லங்கழல்
ஆர்வ மோடி றைஞ்சி நின்ற வன்பெ யரெட் டெழுத்தும்
வார மாக ஓது வார்கள் வல்லர் வான மாளவே."

எனவும்,

"பழுதிலா வொழுக லாற்றுப் பலசதுப் பேதி மார்கள்
இழிகுலத் தவர்க ளேலும் எம்மடி யார்க ளாகில் [க்க
தொழுமினீர் கொடுமின் கொண்மி னென்றுநின் னோடு மொா
வழிபட வருளி னய்போன் மதிட்டிரு வரங்கத் தானே!"

எனவும்,

"அமரவோ ரங்க மாறும் வேதமோர் நான்கு மோதித்
தமர்களிற் றலைவ ராய சாதியந் தணர்க ளேனும்
நுமர்களைப் பழிப்ப ராகி னொடிப்பதோ ரளவி லாங்கே
அவர்கள்தாம் புலையர் போலு மரங்கமா நகரு ளானே!"

எனவும் பெரியார்கள் பணித்தருளிய வற்றையும் உணர்ந்திலீர்கள் போலும்! எவன் முன் கூறிய எட்டுக் குணங்கள் அமையப் பெற்றவனோ, அவனே முனிவன்; அவனே புலவன்; அவன் பிறரிடம் உபதேசம் பெறுதற்கும், தான் பிறர்க்கு உபதேசித்தற்கும் தக்கவன்; யாவராலும் பகவானோ டொக்கக் கொண்டு வணங்கற் குரியவன் என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். நீங்கள் கற்பன கற்றும், அறிவற்றவர்களா யிருக்கின்றீர்கள். நாமதேவனோ, முற்

கூறிய எட்டுக் குணங்களும் நன்கமையப் பெற்றவனு யிருப்பதோடு, உண்மைப் பொரு ளுணர்ச்சியும் உடையவனு யிருக்கின்றுன். ஆதலின், உங்க ளெல்லோரினும் அவன் மிகப் பெரியவனுவான். ஆகையாலேதான் யான் அவன் மிச்சிலே யுண்டேன். அவன் மிச்சில், புனிதமான வைக ளெல்லாவற்றினும் புனிதமானது என் றுணர்மின்கள்,'' என்று கூறி யருளினன்.

அந்த மறையவர்கள் அம்முந்நூல் மார்பன் மொழிகளைக் கேட்டு, வியப்புற்றுப் பிறகு நன்காய்ந்து, “இவன் மறையவனல்லன் ; பகவானே இவ்வேடம் பூண்டு வந்திருக்கின்றனன்,'' என்றுணர்ந்து, “அச்சுதா, நீ இருவினைகளுக்கு உட்படாதவன். எங்கட்குரிய விதி விலக்குகள் உன்னைக் கட்டுப்படுத்துவன வல்ல. இருவினைக் குட்பட்டவர்களாய் இருப்பவர்கள் நாங்கள் ; நீ இருவினைத் தொடர்பாலாகும் பிறப் பிறப்புகளற்றவன். நாங்களோ, இருவினைத் தொடர்பா லாகும் பிறப்பிறப்புகளை யுடையோம். ஆதலின், யாங்கள் விதி விலக்குகளுக்குக் கட்டுப்பட்டவர்களா யிருக்கின்றோம். “தூய பொருள் இது; தூய தல்லாப் பொருள் இது,'' என்னும் வேறுபா டின்றி, எல்லாப் பொருளினு மொக்க இருப்பினும் உன்னைக் குற்றங்கள் அடைத லில்லை. நாங்கள் தூயதை விட்டுத் தூய தல்லாததைச் சாருவே மாயின், உடனே யெங்களைக் குற்றங்கள் வந்தடையும். ஆதலின், நாங்கள் எங்கள் குலத்துக்குரிய தருமங்களினின்றும் வழுவுத லாகாது. எம்மிறைவனே, நீ, இராமாவதாரத்தில் மனித வேடத்திற் கேற்றபடி நடித்தனை ; கிருஷ்ணுவதாரத்தில் அதற்கு மாறுன செயல்களைப் புரிந்தாய். உலகம் யாவையும் உளவாக்கலும் ; நிலை பெறுவித்தலும், நீக்கலும் முதலிய அலகிலா விளையாட்டுகளை யியற்றும் அளவில் ஆற்றலையுடைய இறைவனுகிய உனக்கு

அவை யேற்கும். நாங்கள் எங்கள் குலத்திற்குரிய தரு மத்தினின்று வழுவினோமாயின், குற்றத்திற்குள்ளாவோம். எங்களைப்போல் ஒரு மறையவனாக வேடம் பூண்டு வந்தனை யாதலின் நாமதேவனது மிச்சிலை யுண்ட குற்றத்தின் கழுவாயாக, எங்கள் பொருட்டுச் சந்திரபாகையிலே நீராடிப் பஞ்ச கவ்வியத்தை யுட்கொண் டருளவேண்டும்,'' என்று கூறினார்கள்.

மறையவன் வேடம் பூண்ட பண்டரிநாதன் அம்மறையவர்களை நோக்கி, "விப்பிரர்களே, உண்மைப் பொருளுணர்ச்சியாகிய ஆற்றி னிறங்கி, என்னுடைய பெயரைச் சொல்லுதலாகிய நீரிைடும் அடியவர்களுடைய பாத தூளி படுதலால், இவ்வுலகம் பாக்கியஞ் செய்ததா யிருக்கின்றது என்பதை நீங்கள் சிறிதும் உணர்தலின்றி, எனக்கு இந்தப் பிராயச் சித்தத்தை விதித்தீர்கள். மன்னர் குலத்தினனாகிய கௌசிகன் பிரம்ம இருடியாதற் பொருட்டு மிக வருந்தி, அளவிலாத தவங்கள் ஆற்றினன். வேசையின் மைந்தனாகிய நாரதன் ஒரு பாகவதருடைய மிச்சிலை யுண்டதன் காரணத்தினால் எல்லா முனிவரினுஞ் சிறந்தவனாய், மூவுலகத்தினராலும் வணங்கப்படுகின்றனன். இதை நீங்கள் அறியீர்களோ? குங்குமஞ் சுமந்த கர்த்தபம் அதன் நறு மணத்தை யுணராதவாறுபோல, நீங்கள் வேத முதலிய நூற்களைக் கற்றவர்களா யிருந்தும், அவற்றின் உண்மைப் பொருளை யறியாதவர்களாக இருக்கின்றீர்கள். ஆதலின், பயனற்றனவாகிய தர்மங்களைப் பயனுள்ளனவாகக் கருதிப் புரிந்து வருகின்றீர்கள். பாகவதர்களிற் சிறந்தவனாகிய நாமதேவனுடைய மிச்சிலை யுண்ட எனக்கு நீங்கள் இந்தப் பிராயச் சித்தத்தை விதித்தீர்கள். ஆயினும், நீங்கள் அனைவருங் கூடி விதித்த இதனை யான் ஏற்றுக் கொள்ளாவிடின்,

'உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.'

என்றபடி என்னை யாவரும் பேயன் என்று கூறுவர். ஆத லின், நீங்கள் கூறிய இக்கழுவாயை யான் ஏற்றுக்கொள்ளு கின்றேன்,'' என்று கூறி, நாமதேவருடைய கையைப்பற்றிக் கொண்டு, அம்மறையவர்கள் பின்பற்றி வரச் சந்திர பாகைக் குச் சென்று, அதிலே நீராடி, அந்த விப்பிரர்கள் கொடுத்த பஞ்ச கவ்வியத்தை யுட்கொண்டு, அவர்களுக்குக் காணிக்கை யளித்து, அவர்களை யனுப்பினன்.

பிறகு பண்டரிநாதன் நாமதேவரோடும் மற்றும் பல அடியவர்களோடும் திருத்தளிக்கு வந்தனன். உருக்கு மிணிப் பிராட்டியும் சத்தியபாமையும் அவர்களை எதிர் கொண் டழைத்து, உபசரித்து, உட்காருவித்து, அறு சுவை யுண்டியை யன்புடன் படைத்தனர். அனைவரும் உண்கையில் பண்டரி நாதன் தன்னுடைய மிச்சிலை நாம தேவர் முதலிய அடியவர்களுக்கு அளித்தருளி, அவர்கள் மிச்சிலைத் தான் வாங்கி யுண்டனன். பகவான், தானும் அடியவர்களும் உண்டபின், அடியவர்களுக்குச் சாந்து, பூ, பாகடை முதலியன நல்கினன். அடியவர்கள் அனைவரும் அளவில் இன்ப மெய்திப் பண்டரிநாதனை வணங்கி, விடை பெற்றுக்கொண்டு, தத்தம் உறையுளை யடைந்தனர்.

அப்போது நாரத முனிவர் விண்ணுலகத்தினின்று வந்து, பண்டரிநாதனைப் பாடிப் பரவி வணங்கினர். பண் டரி நாதன் மகிழ்ந்து, தன் கழுத்திலிருந்த துளவத் தொங் கலை நாரதருக்கு அளித்தருளினன். அப்போது இராதா தேவியும் உருக்குமிணிப் பிராட்டியாரும், நாமதேவர்பால் பண்டரி நாதன் அளவில்லாத அன்புடையவனா யிருத்தலை யும், அப்பெருமான் நாமதேவரது மிச்சிலை யுண்டதற்காக

மறையவர்கள் விதித்த பிராயச்சித்தத்தை யேற்றுக் கொண் டதையும், திருக்கோயிலுக்கு வந்து மீண்டும் நாமதேவரது மிச்சிலை யுண்டதையும் கூறிப் புகழ்வா ராயினர். நாரதர் அவ்வேலைச் சத்தியபாமையிடஞ் சென்று, அத்தேவியை வணங்கினர். அவ்வன்னை அன்றங்கு நிகழ்ந்தவற்றைக் கூறக் கேட்ட நாரதர், அத்தேவியை நோக்கி, "உலகங்களுக் கெல்லாம் இறைவியாம் அன்னையே, முன்பொருபோது நான் எம்பெருமானை நோக்கி, 'முழு துலகங்களுக்கும் முதற்றனி வித்தே, நீ விரும்பி யுறையும் இடம் யாது?' என வினவினேன். அதற்கு எம்பெருமான், 'முனிவர் தலைவனே, என் விழைவினுக்குரிய விடம் வைகுந்தமு மன்று; போகியர்தம் உள்ளமு மன்று; என் அன்பர்தம் திருமனத் தாமரையே என் விருப்புக்குரிய இடமாகும்,' என்றருளினன். எம்பெருமான் அன்பருக்கு அன்பன். அவன் அன்பர்பால் எளியவனாய்த் தன் முழுமுதற் றன்மை யையு மறந்து நிற்கும் பெருமையை யாவரே அளவிட் டுரைக்க வல்லார்?" என்று கூறி, அத்தேவியை மீண்டும் வணங்கி விடை பெற்றுச் சென்றனர்.

அன்றைக் கங்குல் உருக்குமிணிப் பிராட்டியார் பண் டரி நாதனை நோக்கி, "என் அன்புக்குரியீர், மூவுலகினுந் தங்கட்கு மிக இனியரானவர் யாவர்?" என்று வினவினர். பண்டரிநாதன், "அருளின் செல்வியே, நான் எல்லா வுயிர் களுக்கும் பொதுவானவன். ஆயினும், பத்துடை அடிய வர்களே எனக்கு மிக இனிய ராவர். அத்தகைய அன்பர் களிலே நாமதேவன் மிகவுஞ் சிறந்தவன். அவனே என் னன்பினுக் குறைவிடம்," என்றருளினன். உருக்குமிணிப் பிராட்டியார் புன்னகை புரிந்து, "என்னன்புக் குரியீர், கன்றின்பால் மனமுருகி நிற்கும் ஆவினும் மிகத் தாங்கள் தங்கள் அன்பர்களிடத்து மனமுருகி நிற்குந் தன்மையுடை

யிர்கள்,'' என்று அணிமல ரன்ன கண்களில் மகிழ்வாற் புனல்பெருக, அப்பேரருளாளனைப் போற்றினர்.

## 9. பண்டரிநாதன் அன்பர்களுக்கும் மறையவர்களுக்கும் தரிசனங் கொடுத்தல்

மறுநாள் பண்டரிநாதன் உருக்குமிணிப் பிராட்டியாரைப் பார்த்து, "அருட் செல்வியே, இன்றும் நாம் மறையவர்களுக்கு அன்ன மளித்தல் வேண்டும். அதற்குரியன யாவும் சித்த மாக்குக,'' என்று கூறிச் சென்று, குண்டலத் தீர்த்தக் கரையில் வசித்துக்கொண் டிருந்த அந்த மறையவர்களை யழைத்தனன். அம்மறையவர்கள், "நாங்கள் எங்கள் நித்தியக் கடன்களை முடித்துக்கொண்டு வருகின்றோம்,'' என்று கூறினார்கள். பண்டரிநாதன் மீண்டு வந்து, மறையவர்களின் வருகையை எதிர் நோக்கி யிருந்தனன்.

விப்பிரர்கள் தங்கள் நித்தியக் கடன்களை முடித்துக் கொண்டு பண்டரி நாதனிடம் வந்தார்கள். அவர்கள் வருதற்குள் அடிசில் முதலிய யாவுஞ் சித்தமா யிருந்தன. உடனே பண்டரி நாதன் அந்த வேதியர்கள் அனைவரையும் நன் குபசரித்து, அன்ன மளித்தான்; வேதியர்கள் உண்ட பின் அவர்களுக்கு அடைகாய், கலவைச் சாந்து முதலியன வழங்கினன். விப்பிரர்கள் அவற்றைப் பெற்றுக் கொண்டு, ஒரு புற மிருந்து, தாம்பூலந் தரித்துக்கொண் டிருந்தார்கள்.

பிறகு பண்டரி நாதன், அம்மறையவர்கள் முன்னிலையில், நாமதேவர், நிவர்த்திதேவர், ஞானதேவர், சோபான தேவர், சாமந்தர், விசோபாகேசர், நரகரிதாசர், சோகா மேளர், கோராகும்பர் முதலிய அடியவர்களுடன் சமபந்தியில் வீற்றிருந்து, அன்ன மருந்தினன். தேவர்கள் பண்டரி

நாதன் புரிந்த இவ்வற்புதச் செயலைக் கண்டு, களிகூர்ந்து, மலர் மாரி பெய்தார்கள். அனைவரும் உண்டு முடிந்த பின் பண்டரி நாதன் தன்னுடைய பொன்னுடையிலே, அன்பர்கள் உண்ட இலைகளி லிருந்த மிச்சிலை யொன்று சேர்த்து, "இது சிறந்த பிரசாதம்!" என்று கூறி, உருக்குமிணிப் பிராட்டியார் முதலியவர்களுக்கு அளித்துத் தானும் உண்டனன். அப்போது அச்செயலைப் பார்த்துக்கொண்டிருந்த மறையவர்கள், "இது வென்ன விபரீதமா யிருக்கின்றது! முன்னே இவன் நாமதேவ னெச்சிலை யுண்டதற்கு நாம் இவனுக்குப் பிராயச்சித்தம் செய்வித்தோம். இப்பொழுது ஒருவனுடைய எச்சில் போதாதென்று, இவர்கள் எல்லோருடைய எச்சிலையும் ஒன்றாய்க் கூட்டித் தன் மனைவியர் முதலியவர்களுக்குங் கொடுத்துத் தானும் உண்டனனே! குல தர்மங்கள் இவனிடத்திற் காணப்பட்டில. இவனுடைய செயலை நோக்கினால், இவனை மனித னென்று எண்ணக் கூடவில்லை. இவன் மூவுலகுண் டுமிழ்ந்த முதல்வனே யாவனென நாமுன்னே கருதியது உண்மையேயாம் எனத் தோன்றுகின்றது: சூரியன், உயர்ந்த பொரு ளென்றும், தாழ்ந்த பொரு ளென்றுங் கருதாமல், எல்லாப் பொருள்களி லிடத்தும் ஒப்புத் தன் ஒளியைப் பரப்புகின்றான். ஈடும் எடுப்புமில் நாராயணனும் எல்லா வுயிர்களி லிடத்தும் ஒரே வகையாகத் தன் இன்னருளைச் செலுத்துகின்றனன். இஃது உயர்ந்தது; இது தாழ்ந்தது என்பன அவனுக்கில்லை. அவன் வேண்டுதல் வேண்டாமை யில்லாதவன்; ஊரும் பெயரும் அற்றவன். அவன் ஆணல்லன்; பெண்ணுமல்லன்; அலியும் அல்லன்; உளனல்லன்; இலனல்லன்; காணனு மாகான்; காணப்படாதவனு மல்லன். அவனுடைய குணமும் செயலும், பிரமன் முதலிய தேவர்களின் சிந்தைக்கும் எட்டாதன; மறைகளாலும் அறைதற்

கரியன. அவனுடைய செயல்களைத் தடுத்தற்குரிய திறம் நமக்குண்டோ? அவனே இவன் என்பதை நாமுதலிலேயே ஆய்ந் துணராமற் போனோம். குற்றமற்ற இவனைக் குற்ற முற்றவன் எனக் கருதி, இவனுக்கு நாம் பிராயச்சித்தம்செய் வித்தோமே! இஃதெவ்வளவு மதிக்குறைவான செய்கை!'' என்று தமக்குள் பேசிக்கொண் டிருந்தார்கள். பண்டரி நாதன் அம்மறையவர்களின் கருத்தை யறிந்து மகிழ்ந்து,

'பாசமா மடியர்பால் நேசமா மடிகளும்
பைம்பொனு ராடையும் செம்பொன்மா மேனியும்
ஆசையா மலருளாள் வாசமார் பகலமும்
அஞ்சலென் றருள்செயுங் கஞ்சமுங் கருணையின்
தேசுலாம் வதனமும் மாசிலா முறுவலும்
சிரிதா யெழுதுகத் தாரிகா மமும்'

விளங்கவும், ஐம்படைகளும் புடை தயங்கவும், பொன்மலை மேல் தன்பால் பல சுடர்களைக் கொண்ட நீலமலை யொன்று வீற்றிருந்தாற் போலக் கருடன்மீ திவர்ந்து, தன் அன்பர் களுக்கும், அம்மறையவர்களுக்கும் காட்சி கொடுத் தருளி னன். அன்பரனைவரும் களிப்பென்னுங் கடலிலே மூழ் கினர். மறையவர்களும், மனத்தெளிவடைந்து, ஒப்பாரும் மிக்காரு மில்லாத இறைவனை மறை மொழிகளாற் பல வாறு துதித்தார்கள். பகவான் தன்னுடைய அன்பர்களை மறையவர்களுக்குக் காட்டி, ''விப்பிரர்களே, இவர்கள் என் அன்பினுக் குறைவிட மானவர்கள். இவர்களுடைய இன் முகக் காட்சியே எனக்கு இன்பத்தை யளிப்ப தாகும். இவர்களுடைய இன்மொழிகளே எனக்குப் பன்மறைப் பொருளாகும். இவர்களுக்கு நீங்கள் அருள் புரியுங்கள்,'' என்றருளினன்.

அது கேட்ட மறையவர்கள், பகவானை நோக்கி, ''எம் பெருமானே, பிரமன் முதலிய தேவர்களும் பெற விரும்

பிப் பெற முடியாமையின் ஏங்கி நிற்கும் உன்னுடைய திரு வருளை முழுதுங் கொள்ளை கொண்டுள்ள இவர்களுக்கு நாங்களோ அருள்புரியத் தக்கவர்கள்? இவர்களுக்கு முன் வசிஷ்டர் முதலிய முனிவர்களும் மலைக்குமுன் அணுவைப் போன்றவர்கள் ஆவார்களே! இவர்களுக்கு நாங்கள் அருள் புரிவது, இந்திரனுக்கு ஓர் ஏழைக் குடியானவன் அருள் புரிவதை யொக்கும். எம்மிறைவனே, இவர்களுடைய தரிசனத்தா லன்றோ எங்களுக்கு உன்னுடைய தரிசனங் கிடைத்தது? இன்றேல், பொய்யாய நலங்களை யெண்ணிச் செருக்குற் றிருப்பவர்களும், தெளிவில்லாத கலங்கல் நீர் போன்ற அறிவுள்ளவர்களு மாகிய எங்களுக்குப் பிரமன் முதலிய தேவர்களுக்குங் கிடைத்தற்கரிய உன்னுடைய தரிசனம் எவ்வாறு கிடைக்கும்? பிரமன் முதலிய தேவர் கள் உன்னுடைய மிச்சிலைப் பெற விழைந்து நிற்கின்றனர். அத்தகையனாகிய நீ இவர்களுடைய மிச்சிலை விரும்பி யுண்டனையெனின், யாரே யிவ்வன்பர்களின் பெருமையை அளவிட் டுரைக்க வல்லார்! இவர்களுடைய திருவடித் தாமரை மலர்கள் எங்கள் உச்சிமல ராதற்குரியன. ஞான முதற் றனி வித்தே, உன் னடியவர்க ளிடத்தும், உன் னிடத்தும் என்றும் நீங்காத அன்பை எங்கட்கு அளித் தருள்க,'' என்று வேண்டிப் பணிந்தார்கள். அருளே வடிவாகக் கொண்ட திருமாமகள் 'அகலகில்லேன் இறை யும்' என்று இனிதுறையுந் திருமார்பினனாகிய இறைவன், அவர்களை யன்புடன் நோக்கி, ''மறையவர்களே, உங்க ளுக்கு அன்னதே யாகுக,'' என்றருளி, நாமதேவர் முத லிய அன்பர்களையும் நோக்கி, இன்மொழிகள் கூறி மறைந் தருளினன்.

## 10. நாமதேவர் நல்லாசிரியரை நாடுதல்

உலகம் யாவையும் தாமுளவாக்கலும், நிலை பெறுத்தலும், நீக்கலும், நீங்கலா அலகிலா விளையாட் டுடையவனாகிய இறைவன் இங்ஙனம் அருள் புரிந்து மறைந்த பிறகு, கோராகும்பர் மற்றை அடியவர்களை வணங்கி, "மெய்ஞ்ஞானச் செல்வர்களே, நீங்கள் அனைவரும் அடியனேன் சிறு குடிலுக்கு எழுந்தருளல் வேண்டும்," என்று வேண்டினர். அவர்களும் அவர் வேண்டுகோளுக் கிணங்கி, அவருடைய இல்லத்திற்குச் சென்றார்கள். கோராகும்பர் அறு சுவை யடிசிலை யவர்களுக்கு இட்டு, அவர்க ளனைவரும் உண்டபின், அவர்களை உயரிய இருக்கையின்கண் வீற்றிருக்கச் செய்து, பாகடை, கலவைச் சாந்து முதலியன நல்கி நன்குபசரித்தனர்.

அப்போது ஞானதேவர் கோராகும்பரை நோக்கி, "அறிஞர்களுக்குள் அறிஞராய் விளங்குகின்றவரே, நீர் பாண்டங்களைச் செய்பவர். பாண்டங்களின் உயர்வு தாழ்வுகள் உமக்கு நன்றாய்த் தெரியும். நீர் இப்பொழுது வரிசையாக இருத்திய பாண்டங்களில் பரிபக்குவ முற்ற பாண்டங்களையும், பரிபக்குவ முறாத பாண்டங்களையும் தெரிவித்தல் வேண்டும்," என்று கூறினர்.

கோராகும்பர் அதனைக் கேட்டு, ஞான தேவரைப் பார்த்து, "மெய்ஞ்ஞானச் செல்வரே, நீங்கள் அனைவரும் எம்பிரான் விழைதற்குரிய அறிஞர்கள். உங்களுடைய தாரதம்மியங்களை அறிந்து கூறுதல் என்னால் செய்யக் கூடிய செயலாமோ? ஆயினும் தாம் கட்டளையிட் டருளினமையின், என்னு ளயன்றாங்குத் தாங்கள் டுரைக்கின்றேன்," என்று சொல்லிப் பாண்டங்களைத் தட்டும் பலகையைக் கையிலே எடுத்தார். பின்பு அவ்வடியவர்கள் எல்லா

யையும் நிமிர்ந்து உட்காரும்படி கூறி, அவ்வன்பர்கள் ஒவ்வொருவருடைய தலையின்மேலும் அப் பலகையினுல் உறைக்க ஒவ்வோ ரடி கொடுத்துக்கொண்டே போனர். நாமதேவரைத் தவிர மற்றை அடியவர்கள் எல்லாரும் எம்பெருமானை மன மலரின்கண் இருத்திச் சிறிதும் வருத்தமின்றி யிருந்தார்கள். கோராகும்பர் நாமதேவரிடஞ் சென்றபோது, நாமதேவர் சற்று ஒதுங்கிக்கொண்டு, "என்னை யேன் அடிக்கின்றீர்?" என்று கேட்டனர். கோராகும்பர் மற்றை யடியவர்களுக்கு நாமதேவரைச் சுட்டிக் காட்டி, "இது வொன்றே நன்ருய் வேகாத பாண்டம். மற்றப் பாண்டங்கள் யாவும் நன்ருய் வெந்து கண் விட்டிருக்கின்றன," என்று கூறினர். அது கேட்ட அன்பர்கள் நாமதேவருடைய நலத்தை விரும்பிக் கல்லென நகைத்தார்கள்.

அதுகண்ட நாமதேவர் மிகவும் மனம் மறுகினவராய்ப் பாண்டுரங்கன் திருத்தளிக்கு விரைந்து சென்று, பாண்டுரங்கனை வணக்கிக் கூப்பிய கையராய் நின்று, "எம்பெருமானே, இன்று நான் பெரியதோர் அவமதிப்பை யடைந்தேன்!" என்ருன்.

பண்டரிநாதன் நாமதேவரை அன்புடன் தழுவிக்கொண்டு, "என் அன்பிற் குறைவிடமான செல்வனே, உன்னை யார் என்ன சொன்னர்கள்? சொல்லுக," என்று கேட்டருளினன். நாமதேவர் கோராகும்பர் மனையிலே நிகழ்ந்தனவற்றைக் கூறினர்.

பண்டரிநாதன், "அன்பனே, கோராகும்பன் கூறியது உண்மையே. மற்றவர்களும் உன்னுடைய நன்மையைக் கோரியே நகைத்தார்கள். அவர்கள் உன்னை அவமதிக்க வேண்டுமென நகைத்தவர்கள் அல்லர். நீயும் நானும், மணியும் ஒளியும்போல், பிரிவற்றவர்களாக இருக்கின்

ரேும். ஆயினும், தக்க குரவன் அருளைப் பெருமையால், நீ பரிபக்குவ நிலையை அடையாம லிருக்கின்ருய். பொன் ளுைது வெங்காரத்தினது சம்பந்த மின்றி யுருகாதது போல, நல்லியல் குரவன்றன் னருளைப் பெருதார் எவரும் மேன்மை யடைதல் இலர். நான் இராமனுய் அவதரித்த போது வசிஷ்ட முனிவனையும், கிருஷ்ணனுய் அவதரித்த போது சாந்தீபினிமுனிவனையும் குரவராக ஏற்றுக்கொண் டது இவ்வறத்தினை உலகத்தினர்க் குணர்த்துதற் பொருட் டன்றே? குரவ னருளைப் பெருதவர்கள், சுடாத மட் பாண்டங்களை யொப்பவர்களே யாவார்கள். ஆதலின், நீ யொரு நல்லாசிரியனை யடைந்து, பரிபக்குவ நிலையைப் பெறுக. இன்றேல், நீ வீடு பேற்றை யடைதல் இயலாது. நீ விரைந்து சென்று, ஓர் அருண் மனக் குரவனைத் தேடி யடைக," என்றருளினன்.

நாமதேவர், பண்டரிநாதனுடைய இன்னருண் மொழி களைக் கேட்டு, மனத் தெளிவடைந்து, பண்டரிநாதனை நோக்கி, "எம்பெருமானே, நான் என் அறியாமையினுல் கோராகும்பர் முதலியவர்கள் செயலைத் தவருனது எனக் கருதிவிட்டேன். நற்குணக் கடல்களாகிய பெரியோர்கள் பிறர்க்குத் தீமை புரியக் கருதுவரோ? ஒருபோதுங் கரு தார். நான் என் பேதைமையினுல் அவர்கள்பால் குற் றத்தை யேற்றிவிட்டேன். எம்மிறைவனே, நீ என் பேதை மையை ஒழித்தருளினை. எந்தையே, நீ கூறியபடி நான் சென்று, ஒரு நற்குரவனை யடைய வேண்டுவது இன்றி யமையாததே. ஆனுல், உன்னைப் பிரிந்திருக்க என்னுல் இயலாதே! இதற்கு யான் என் செய்வேன்?" என்றனர்.

பண்டரிநாதன், "என்னுயிர் போன்றவனே, நீ எங் குச் சென்ருலும், நான் உன்னைப் பிரியாமலே இருப்பேன். நீ யொரு செந்நெறிக் குரவனைத் தேடி யடைக," என்

றருளினன். நாமதேவர், "எம்மிறையவனே, நல்லாசிரியர் ஆவார் யார்? கூறி யருளுக," என்று கேட்டனர்.

பண்டரிநாதன், "அன்பனே, கற்கவேண்டுவனவாகிய நூற்களை யெல்லாம் நன்றாய்க் கற்றுணர்ந்து, ஞானவொழுக்கங்களிற் சிறந்து, மனத்தை யடக்கித் தம்மை யடுத்தவர்களுக்கும் அன்பும் அருளும் நிறைந்த மனமுடையவர்களாய் ஞான வொழுக்கங்களை யுண்டாக்குகின்றவர்களே நல்லாசிரியர்க ளாவார்கள்," என்றருளினன்.

நாமதேவர், "எம்பெருமானே, அத்தகைய ஆசிரியரை நீயே எனக்குக் காட்டி யருளவேண்டும்," என்றனர்.

பண்டரிநாதன், "அன்பனே, விசோபாகேசன் சிறந்த ஞானி. நீ அவனைச்சென் றடைவா யாயின், மனத்தெளிவெய்துவாய்," என்றருளினன்.

நாமதேவர், உடனே விசோபாகேசர் நாகநாத சுவாமியின் கோயிலில் இருக்கின்றனர் என்பதைச் சிலரை வினவியறிந்துகொண்டு, அவரிடஞ் சென்றார். அப்போது விசோபாகேசர், தம்முடைய கால்கள் இரண்டையும் லிங்கத்தின்மீது நீட்டி வைத்துத் தூங்கிக்கொண் டிருந்தார். நாமதேவர், அதனைக் கண்டு வியப்படைந்து, "இதுவென்ன விபரீதச் செயல்? இவ்வறிவிலி சிவ லிங்கத்தின்மீது காலை வைத்துக் கொண்டு உறங்குகின்றானே! பண்டரிநாதன், இத்தகைய தீயனைச் சிறந்த ஞானியென்று சொல்லி, இவனிடம் நம்மை யனுப்பினனே! எல்லா முணர்ந்த இறைவன் குறிப்பிட்ட இடம் மாறாக இருக்க நியாயமில்லை. நாம் இவன் தன்மையை நன்றாய் ஆய்ந்தறிதல் வேண்டும்," என்றெண்ணித் தம் கைகளைத் தட்டினர். விசோபாகேசர், தம் கண்களைத் திறந்து, நாமதேவரை நோக்கினர்.

நாமதேவர், விசோபாகேசரை நோக்கி, "பெரியீர், ஞானிகளாற் சிறந்த ஞானியெனக் கொண்டாடப்படும்

நீவிர் இப்படி லிங்கத்தின்மீது காலை வைத்துக்கொண்டு படுத்திருத்தலாமோ?'' என்று கேட்டனர்.

விசோபாகேசர், நாமதேவரை நோக்கி, "அன்பனே, தூக்க மயக்கத்தினால் நான் இப்படித் தப்புச் செய்துவிட்டேன். நான் பருத்த உடலை யுடையவன். என் உடல் என் வசப்பட் டிருக்கவில்லை. ஆதலின், நீ என்பால் அருள்கூர்ந்து, என் கால்களை யெடுத்துக் கடவுள் இல்லாத இடத்தில் வை,'' என்றார்.

நாமதேவர் அதற்குச் சம்மதித்துத் தம்முடைய கைகளால் அவருடைய கால்களை யெடுத்து மற்றொரு புறம் வைக்கப் போனார். அங்கும் ஓரிலிங்கம் இருக்கக் கண்டார்; பிறகு வேறொரு பக்கம் வைக்கப் போனார். அங்கும் ஓர் இலிங்கம் தோன்றியது. இவ்வாறே எல்லா இடங்களிலும் இலிங்கங்கள் காணப்பட்டன. நாமதேவர் பிறகு தம்மையே நோக்கினார். தாமும் ஓர் இலிங்க வடிவமா யிருக்கக் கண்டார். உடனே நாமதேவர் விசோபா கேசரை வணங்கி, "அடிகாள், அடியேன் தேவரீருடைய திருவடிகளைப்பற்றிய மேன்மையினால், அடியேனுக்கு எல்லாப் பொருள்களும் கடவுளின் வடிவமாகவே காணப்படுகின்றன. எம்மருமைக் குரவரே, அடியேனுக்கு உண்மைப் பொருள்களை அடியேன் உளங்கொள உரைத்தருளல் வேண்டும்,'' என்று வேண்டினார். அவ்வாறே விசோபாகேசர் சித்து, அசித்து, ஈசுவரன் என்னும் பொருள்களின் உண்மை இயல்புகளை நாமதேவருக்கு நன்குபதேசித்தருளினர்.

நாமதேவர் அவ்வுபதேசத்தைப் பெற்றுக்கொண்டு, களிப்பென்னுங் கடலுள் ஆழ்ந்தார். விசோபாகேசருடைய உபதேசத்தைப் பெற்றபின் நாம தேவருக்கு உலகத்திலுள்ள பொருள்கள் யாவும் பண்டரி நாதன் திருவுருவங்க

ளாகவே காணப்பட்டன. ஆதலின், நாமதேவர் பண்டரி நாதனை,

‘பரந்ததண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன்
பரந்தவண் டமிதென நிலவிசும் பொழிவறக்
கரந்தசில் லிடந்தொறு மிடந்திகழ் பொருடொறும்
கரந்தெங்கும் பரந்துளன் இவையுண்ட கரனே.’

என்றபடி, எங்கு முளனாகக்கொண்டு, அப்பெருமானுடைய கலியாண குணங்களை யெண்ணி யெண்ணிக் களிப்பென்னுங் கடலுள் ஆழ்ந்திருந்தார். இங்ஙனம் நாமதேவர் ஞானதேவர் முதலிய மெய்ஞ்ஞானச் செல்வருடன் கூடி, ஈடு மெடுப்புமில் பண்டரி நாதனுடைய குணக் கடலி லாடிக் கொண் டிருக்கையில் அவ்வெம்பெருமான் நாமதேவர் முதலிய அச்சிரிய அன்பர்களுக் கிடையில் தோன்றி, நாமதேவரைத் தழுவிக்கொண்டு, “என் அன்பின் செல்வமானவனே, என்னை விட்டுப் பிரியாமல் இருந்த நீ, குருவின் உபதேசம் பெற்ற பின் என்னிடம் ஏன் வந்திலை?” என்று கேட்டனன்.

நாமதேவர் பண்டரி நாதனை வணங்கி, “எப்பெருமானே, நான் குருவின் உபதேசம் பெறுதற்கு முன் உன்னைப் பண்டரியிலே மாத்திரங் கண்டு களித்து வந்தேன்; குருவின் உபதேசம் பெற்ற பின்,

‘திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசைப்
படர்பொருள் முழுவது மாயவை யவைதொறும்
உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே,’

என்றபடி, உன்னை யெங்குங் கண்டு களிகூர்கின்றேன். ஆதலால், நான் எதைப் பார்த்தாலும், உன் உருவத்தையே பார்க்கின்றேன். நான் எங்கிருந்தாலும் உன் அருகிலேயே இருக்கின்றேன். நான் எதை எண்ணினாலும் உன்னையே யெண்ணுகின்றேன். நான் எதைப் பேசினாலும், உன்

புகழையே பேசுகின்றேன். நான் எதனைச் செய்தாலும், உன் திருப்பணியே செய்கின்றேன்.

‘ துளசிதளத் துளசிதளத் துநீரதே குடிநீரதாம் [தாம்’
* உளதாயிரம் பெயரெண்ணுநாற் றொருகோடிமந் திரமேல

ஆதலின், யான் பண்டரிக்கு வந்திலேன்,” என்றனர்.

பண்டரி நாதன் நாமதேவரை நோக்கி, “மைந்தனே, இப்பொழுது நீ பரிபக்குவ நிலையை எய்தி விட்டனை. அதனைக் கண்டு நான் மிகவு மகிழ்கின்றேன். உனக்கு வேண்டிய வரத்தினைக் கேள்; தருகின்றேன்,” என்றருளினன்.

நாமதேவர், “எம்பெருமானே, பிறவிக் கடலைக் கடத்தற்குப் பெரும்புணையாகிய உன்திருவடியை யடைந்தமையின் நான் ஒன்றினாலுங் குறை வற்றவனானேன். ஆயினும், எம்மிறையவனே, நான் உன்பால் ஒரு வரத்தினைப் பெற விரும்புகின்றேன். அஃதியாதெனின், குருவின் உபதேசத்தால் யான் பெற்ற ஞான வொளி என்றும் மழுங்காமல் விளங்கவேண்டும் என்பதே,” என்று கூறினர்.

பண்டரி நாதன் நாமதேவருக்கு அவ்வரத்தினை யளித்து, மறைந்தருளினன்.

## 11. பண்டரி நாதன் நாம தேவரைப் பரிசோதித்தல்

சில நாட்கள் சென்றபின், கார்த்திகை மாதத்திலே, சுக்கிலபட்சத்தில், ஏகாதசி வந்தது. நாமதேவர் ஒவ்வொரு ஏகாதசியினும் உண்ணா நோன்பினைக் கொண்டிருத்தல் வழக்கம். நாமதேவர் அன்றும் அவ்வாறே உண்ணா நோன்

* இவ்வடியி லுள்ள உளது, மேலது என்பன பன்மையில் ஒருமை வந்த பால் வழு வமைதி.

பிணைக் கொண்டிருந்தார். பண்டரி நாதன் அன்று நாம தேவரை நோக்கி, "அன்ப, இன்று நீ இங்கு உண்ணுதல் வேண்டும்," என்றனன்.

நாமதேவர், "எம்பெருமானே, இன்று ஏகாதசி யாகையால், நான் உணவு கொள்ளேன். தெய்வங்களுக் குள்ளே நீயும், மரங்களுக்குள்ளே அரசமரமும், இலைகளுக் குள்ளே துளசியும், விரதங்களுக்குள்ளே ஏகாதசி விரதமும் சிறந்தன வல்லவா?" என்று கேட்டார்.

பண்டரி நாதன், "அன்புடைய மைந்தனே, முன்னே அம்பரீஷன், உருக்குமாங்கதன் முதலியவர்கள் வைராக் கியத்திற் சிறந்தவர்களா யிருந்து இந்த நோன்பினை யாற்றி வந்தமையால், அந்தமில் இன்பத்தை யெய்தினார்கள். ஈர மில்லாத விதை முளையாதது போல, வைராக்கிய மில்லாத நோன்பு பயன் பெறாது," என்றருளினன்.

நாமதேவர், "எம்பெருமானே, உன்னுடைய அன்பும் அருளும் என்பால் அமைந் திருக்கையில், என்னுடைய நோன்புக்குப் பழுதுண் டாகுமோ? ஒரு போதும் உண் டாகாது," என்று கூறினர். பண்டரிநாதன் நாமதேவரைத் தழுவிக்கொண்டு, வாழ்த்தி யருளினன்.

மற்றொரு முறை வந்த ஏகாதசி நாளில் பண்டரிநாதன் நாமதேவருடைய வைராக்கியத்தைப் பலரும் அறியும்படி செய்ய வெண்ணி, ஒரு முது மறையோன் வேடங்கொண்டு, நாமதேவருடைய இல்லத்திற்குச் சென்று, அவரை நோக்கி, "ஐய, நான் பசிப்பிணியாலே மிகவும் வருந்துகின்றேன். எனக்குச் சோறிடுக," என்று கேட்டருளினன்.

நாமதேவர் அம்மறையவனைப் பார்த்து, "வேதியரே, 'ஏகாதசி நாளில் உண்ணுகின்றவனை நமன் தமர் வலியப் பற் றிச் சென்று, பொறுத்தற்கரிய துன்பத்தினை விளைக்குங் கொடு நரகத்திடை உய்ப்பார்கள்,' என்று விஷ்ணு ஸ்மிருதி

கூறுகின்றது. அன்று புசிக்கும் ஒவ்வொரு கவளமும் ஒவ்வொரு வகையாகிய பாவத்தை வருவிக்கும். அவ்வுணவு நாய் முதலியவற்றின் இறைச்சிக்கு ஒப்பாகும். அற நூற்களுள் கள்ளுண்பவர்களுக்கும் கழுவாய் கூறி யிருக்கின்றது ; ஏகாதசியில் உண்பவர்களுக்கு யாதொரு கழுவாயுங் கூறப்படவில்லை. நன்றி மறந்தவன் அதனு லுளதாகும் பாவத்தினின்று தப்ப முடியாததுபோல, ஏகாதசியி லுண்டவன் அதனு லுண்டாகும் பாவத்தி னின்று தப்ப முடியாது. அடைக்கலப் பொருளைக் கவர்ந்தவன், உயிர்க் கொலை புரிந்தவன் ஆகிய இவ்விருவரையும்போல, ஏகாதசியில் புசிப்பவன் பெரிதும் இடர்ப்படுவன். மாந்தர்கள் எட்டு வயதிலிருந்து எண்பது வயது வரையினும் இந்நோன்பினை யாற்றி வருதல் வேண்டும். ஆதலின், இன்று நான் உமக்குச் சோறிடுதல் ஆகாது. இடுவனேல், நான் உம்மைத் தீய வழியிற் செலுத்தியவனுவேன். எனினும், நான் இன்று உமக்குத் திராக்ஷை முதலிய கனிகளைத் தருகின்றேன். நீர் அவற்றைப் பெற்று உட்கொண்டு, பசியாறும்,'' என்று கூறினுர்.

வந்த மறையவன் அம் மொழிகளைக் கேட்டு, "ஐயன்மீர், எனக்குப் பசி யதிகமா யிருக்கின்றது. சோற்றுலன்றிப் பிறவற்றுல் என் பசி தணியாது. 'ஆபத்திற்குப் பாவம் இல்லை,' என்னும் பழமொழியை நீர் கேட்டதில்லையா ? எனக்குச் சோற்றிலே மிகவும் ஆவலுண்டாயிருக்கின்றது. எனக்கு வேறென்றும் வேண்டா. எனக்குச் சோறிட்டால் இடும் ; இன்றேல், இப்பொழுதே என் உயிரை இங்கு விட்டுவிடுவேன்,'' என்று கூறினன்.

நாமதேவர், "மறையவரே, நான் திருமாலின் அடியவன். ஆதலின், யான் அப்படிச் செய்தலாகாது,'' என்ருர். அது கேட்ட அம் மறையவன், "ஐயா, 'வாய்

வாழைப்பழம் ; கை கருணைக்கிழங்கு,' என்னும் பழமொழி உம்மைப் பற்றி யுண்டானதே. உம்முடைய பேச்சு இனிமையாய் இருக்கின்றதே யன்றி, அதற்கேற்றவாறு ஈகைக் குணம் உம்மிடத்திற் சிறிது மில்லை. ஐயோ! சோறில்லாமையால், எனக்குக் களை மிகுதி யாயிற்று ; கண் சுழலுகின்றது ; தலை சுற்றுகின்றது ; காதடைக்கின்றது ; என்னுயிர் போய்விடும்போ லிருக்கின்றது,'' என்றனன்.

நாம தேவர், “ மறையவரே, உம்முயிர் நீங்கினால் என்னுடைய உயிரும் உடனே நீங்கிவிடும்,'' என்றார். நாம தேவர் அச்சொற்களைச் சொல்லி முடித்தற்கு முன்னே, அம்மறையவன் தரையில் விழுந்து விட்டனன். அவனுடைய மூச்சும் அடங்கிவிட்டது; கை கால்கள் குளிர்ந்து விட்டன. அப்போது அங்கிருந்தோர் எல்லோரும் நாமதேவரிடஞ் சென்று, “ அடா பாவி! நீயேன் இக் கொடும் பாவத்திற் காளாயினை? பசித்து உன்னிடம் வந்த முது மறையோனைச் சோறு போடாமல் கொன்று விட்டனையே! நீ சிறந்த ஞானி யென்று பெயர் வைத்துக்கொண்டிருக்கின்றனையே! ஈரமில்லாத விடத்திலே மரஞ்செடி முதலியன முளைக்குமா? அருளில்லாதவனிடத்தில் ஞான முண்டாகுமா? உன்னுடைய அருளற்ற தன்மையை யுணராமல், உன்னுடைய வேடத்தைக் கண்டு மயங்குகிறவர்களே உன்னை ஞானி யென்பார்கள்.

‘வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்து மகத்தே நகும்.'

என்றபடி, உன்னுடைய வஞ்சனை பொருந்திய பொய்யொழுக்கத்தைக் கண்டு, உன் யாக்கையின் கண்ணுள்ள பூதங்கள் ஐந்தும் சிரிக்குமே!

‘வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின்?'

என்றபடி, ஒருவன் தான் குற்றமென்றறிந்தவற்றில் தன் மனம் பொருந்தப் பெறுவானுயின், அவனுக்கு வான்போ லுயர்ந்த தவ வேடம் யாது பயனைச் செய்யும்? வேட்டுவன் புதலின்கண் மறைந்து நின்று புட்களைப் பிடிப்பதுபோல, நீ தவ வேடத்தின் கண் மறைந்து நின்று பலரை உன் வசப் படுத்துகின்றாய். அப்பா! நீ மிகக் கொடியவன்!'' என்று வைத்தார்கள்.

நாமதேவர் பண்டரி நாதனைத் தமது மன மலரில் அமைத்து, அம்முது மறையோன் உடலைத் தமது தோளில் வைத்துக்கொண்டு, சுடலையை யடைந்து, கட்டைகளை யடுக்கி, அவற்றின்மீது அவ்வுடலைக் கிடத்தித் தாமும் அதன் பக்கத்திற் படுத்து, வறட்டிகளை மேலே போட்டுக் கொண்டு, நெருப்பை மூட்டினார். நாமதேவருடைய மனைவி, அதை யறிந்து, விரைந்து வந்து, நாம தேவர் பக்கத்தில் படுத்துக்கொண்டனள். நெருப்பு நன்றாய்ப் பற்றி எரிய லாயிற்று. அவ்வூர் வேதியர்களும், மற்றவர்களும் அதனைக் கண்டு, ஒப்பரிய வியப்பினை யடைந்து, நாமதேவருடைய மன வுறுதியை யெண்ணி, அவரை மிகவுங் கொண்டாடி னார்கள்.

கிழ மறையோன் வடிவங்கொண்டு வந்த பண்டரி நாதன், அவ்விடத்தினின்று தன் உண்மை வடிவுடன் எழுந்தருளி, எரியும் நெருப்பைக் குளிர்வித்து, நாமதேவரை யும் அவர் மனைவியையும் எழுப்பி, நாமதேவரைத் தழுவிக் கொண்டு, அவரை நோக்கி, 'என் அன்பிற் குறைவிடமான மைந்தனே, உன்னுடைய வைராக்கியம், உன்னுடைய அன் பினைப்போலவே, உறுதியை யுடையது. உன்னுடைய அன் பும் மன வுறுதியும் என்றும் தவிராதன வாகுக,' என்று வாழ்த்தி, மறைந்தருளினன்.

அவ்வூரார் எல்லாரும் பண்டரிநாதனுடைய அவ்வற்புத உண்மை யுருவினைக் கண்டு, உள்ளங் குளிர்ந்து, நாமதேவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, அவரைப் பலவாறு போற்றினார்கள். நாமதேவர், அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு, தம்முடைய மனைவியுடன் தம்முடைய மனையை யடைந்தனர்.

பண்டரி நாதன், மற்றொரு நாள் நாயின் உருக்கொண்டு, பண்டரி புரத்துத் தெருக்களில் திரிந்து, சிலர் அன்ன முண்டுகொண் டிருந்த இடத்திற்குச் சென்றனன். அவர்கள், பகவானாகிய அந்த நாயைத் துரத்தினார்கள். அச் சுணங்கன் அவர்கள் அயர்ந்திருக்கும் அற்றம் நோக்கி, அட்டில்லினுட் புகுந்து, அங்கிருந்த உணவுப் பொருள்கள் யாவற்றையும் எச்சி லாக்கிற்று. ஆதலின், அவர்கள் அதைப் பிடித்து அடிக்க முயன்றார்கள். அஃது அவர்கள் கையில் அகப்படாமல் ஓடியது. அதனைக் கண்டவர்கள் எல்லாரும் துரத்தினார்கள். அதனைக் கண்ட நாமதேவர், ஓர் அப்பத்தைக் காட்டி யழைத்தார். அந்த நாய் உடனே நாம தேவர் அருகில் ஓடிவந்து, அவர் கையி லிருந்த அப்பத்தைப் பிடுங்கிக்கொண்டு ஓடியது. நாம தேவர், தம் கையில் நெய்யை வைத்துக் கொண்டு, அந்நாயை நோக்கி, 'ஓ பகவானே, இதோ என் கையிலே நெய் இருக்கின்றது. இதில் அந்த அப்பத்தைத் தோய்த்துத் தின்றால், அப்பம் மிகவும் சுவையாய் இருக்கும்,' என்று சொல்லிக் கொண்டே அதனருகிற் சென்று, அதன் முதுகைத் தடவி, அதனை யெடுத்து மடியின்மிது வைத்துக் கொண்டு, அதன் வாயி லிருந்த அப்பத்தை மெல்ல வாங்கி, அதனைப் பல துண்டுக ளாக்கி, ஒவ்வொரு துண்டையும் நெய்யிலே நன்றாய்த் தோய்த்து, அதற்கு அன்புடன் ஊட்டினார். அதனைக் கண்ட சிலர், 'நாம தேவனுக்குப்

பைத்தியம் பிடித்துவிட்டது. இன்றேல், நாயை எடுத்து மடியின்மீது இருத்திக் கொண்டு, அப்பத்தை அதற்கு ஊட்டுவானு? நாயைத் தொடுவதே பாவம் என்பார்கள். இவன் அதனை யெடுத்துத் தன் மடியின்மீது வைத்துக் கொண்டு, அதற்கு அப்பத்தையும் ஊட்டினனே! இவனுடைய அறியாமையை என்னென்று கூறுவது!' என்று ஒருவரோ டொருவர் பேசிக் கொண்டனர்.

சில அறிஞர்கள், "இவர் மெய்ஞ்ஞானச் செல்வர். ஆகையினுல், யாவும் இவருக்குப் பண்டரி நாதன் வடிவமாகவே தோன்றுகின்றன. எங்குமாயுள்ள பகவான், இச்சுணங்க னிடத்திலே இல்லாமற் போவனே? இரணியன், தன் மைந்தனுகிய பிரகலாதாழ்வானை நோக்கி, 'நீ சொல்லும் இறைவன் எங்குளன்?' என, பிரகலாதாழ்வான், 'எங்கு முளன்,' என்ன, இரணியன், 'இத் தூணில் உளனே?' என, பிரகலாதாழ்வான், 'இத் தூணினும் உளன். எந்தாய், நீ அறிய வேண்டுதியேல், இத் தன்மையை ஆய்ந்து காணுதி,' என்றுனுக, இரணியன் தான் குறித்த தூணைப் புடைப்ப, எம்பிரான் அத் தூணினின்று மானிட மடங்கலாய்த் தோன்றி, அச்சிறிள மைந்தனுக்கு அருள் புரிந்திலனே? அங்ஙனந் தூணினு மிருந்த இறைவன், இச்சுணங்க னிடத்திலே இல்லாமற் போவனே? நாமதேவருடைய ஞானத்தின் பெருமையை ஆய்ந்தறியும் அறிவின்றி, அவரை நீங்கள் பழிக்கின்றீர்கள். இது மிகவுங் கொடுஞ் செயலாகும்!" என்று நாமதேவரை இழித்துரைத்தவர்களை நோக்கிக் கூறினர்கள்.

பண்டரி நாதன், அந்நா யுருவோடு நாம தேவரை நோக்கி, 'அன்பின் செல்வ மானவனே, நீ என்னை எவ்வாறு அறிந்து கொண்டனை?' என வினவினன். நாம

தேவர், 'எம்பெருமானே, விசோபாகேசர் திருவருளால் யான் உன்னையறிந்துகொண்டேன்,' என்றனர்.

பண்டரி நாதன், அம் மொழியைக் கேட்டு மகிழ்ந்து, யாவருங் காணத் தன் உண்மை யுருவுடன் நாம தேவருக்குக் காட்சி தந்தருளி மறைந்தனன்.

முன்னே அந்நாயைத் துரத்தினவர்கள், "அந்தோ! நாம் சிறிதும் இரக்கமின்றி அந்நாயைத் துரத்தினோம். பண்டரி நாதனே அந்நாயின் உருவங் கொண்டு வந்தனன் என்பதை நாம் அறியாமற் போனோம். நாம தேவர், அம் மறையை நன்குணர்ந்து கொண்டு, அதனை நன்று யுபசரித்தனர். பண்டரி நாதன் நாம தேவர் கொடுத்த அப்பத்தை அன்புடன் அவர் மடியி லிருந்து உண்டு, அவருக்குத் தன் உண்மை வடிவுடன் காட்சி தந்தருளினன். எல்லா உயிர்களையும் ஒப்பக் கருதுகின்றவர்களும் எம்பிரானிடத்தில் நீங்காத அன்புடையவர்களுமாகிய சீரிய ஞானச் செல்வர்கள், எம்பிரான் எவ் வடிவங் கொள்ளினும், எங்குக் கரந்துறையினும், அவனைக் கண்டறிந்து, தங்கள் அன்பென்னுந் தளையினுற் கட்டி, அவனைத் தம்முடைய கைப்பொருளாக்கிக் கொள்ளுகின்றார்கள். தானாக அருள் புரிய வந்த இறைவனை வணங்கி இன்புறும் புண்ணியம் நமக் கில்லாமற் போயிற்று. வெறும் பானை மேல் பொங்குமோ?" என்று ஒருவரோ டொருவர் சொல்லி வருந்தி, பிறகு நாமதேவரை யடைந்து வணங்கி, அவரைப் பலவாறு புகழ்ந்தார்கள்.

### 12. நாமதேவர் குருபரம்பரையைக் கருதிச் சீபாத தீர்த்தத்தை ஏற்றல்

ஒரு நாள், ஞானதேவர், சச்சிதானந்த பிராமணர், நிவர்த்தி தேவர், முக்தா பாய், சோகா பரமானந்தர்,

விசோபாகேசர், சாமந்தர், சிவோபா அருச்சகர், கூர்ம தாசர், சயதேவர், அநந்த பட்டர், சோகாமேளர், சனுபாய் முதலிய ஆராத காத லடியவர்களோடு நாம தேவர் கூடி யிருந்து, குளிர்ந்த பாடல்களினாலே பண்டரி நாதனைப் பாடிக்கொண் டிருந்தார். பண்டரி நாதன் மிகவு மகிழ்ந்து, அவர்கள் முன் உருக்குமிணிப் பிராட்டியாரோடு தோன்றி யருளினன். நாம தேவர் முதலிய அனைவரும் பண்டரி நாதனைப் பணிந்து, இணையிலா இன்பப் பாடல்களாற் போற் றினார்கள். பிறகு நாம தேவர் தூய நன்னீரினாலே பண்டரி நாதனுடைய திருவடிகளையும், உருக்குமிணிப் பிராட்டியா ருடைய திருவடிகளையும், ஞானதேவர் முதலாகிய அன்பர் களுடைய திருவடிகளையும் அலம்பிக் குருபரம்பரையை மன மலரிலிருத்தி, அந்நீரை யுட்கொண்டு, களி கூர்ந்தனர். பண் டரி நாதன் மகிழ் கூர்ந்து, நாம தேவரையும் ஞான தேவர் முதலிய மற்ற அன்பர்களையும் அன்புடன் தழுவி யருள் புரிந்து, உருக்குமிணிப் பிராட்டியாரோடு மறைந் தருளி னன்.

பிறகு நாம தேவர் இங்ஙனமே மெய்ஞ்ஞானச் செல் வர்களாகிய ஞானதேவர் முதலியவர்களோடு கூடி யிருந்து, பண்டரி நாதனைப் பாடிக்கொண்டு, இனிது வாழ்ந்து வந் தனர்.



# III. ஞானதேவர்



## 1. ஞானதேவர் அவதாரம்

கங்கை கங்கை என்று உலகத்தினர் ஏத்தும் கடவுண்மா நதியின் கரையில் அப்புப் புரம் என்னும் ஓர் ஊர் உண்டு. அஃதாற்றின் கரையின் அமைந்த ஊர் ஆதலின், செந்நெல் முப்போகம் விளை கழனிகளும், வானைத் தொடச் செல்வனபோல் உயர்ந்து வளர்ந்த மரங்களை யுடைய சோலைகளும், அவ்வூரின் எம்மருங்குங் காணப் படும். அவ்வூரிற் பல இடங்களிற் பசிய புற்கள் வெற் றிடம் சிறிதும் இல்லாதபடி தோன்றி யிருக்கும். அவ் விடங்களைக் காண்பவர்கள் இவை மரகதம் விளையும் நிலங் கள் போலும் என மயங்குவார்கள். அவ்வூரின் வணிகர் கள் குபேரனும் விழையும் பெருஞ் செல்வத்தினர்கள். அவர்கள் கற்பகத்தருவும் நாணுங் கொடைக் கரத்தினர்கள். அவ்வூரி னுறையும் தொழிலாளர்கள் புதியன புதியனவா கிய பல தொழில் வகைகளை நன்காய்ந் துணர்ந்து அவற் றைப் பலர்க்கும் நன்கு விளங்கும்படி நூலாக எழுதித் தொழிற்றிறங்களை வளர்க்கும் ஆற்றலுடையவர்கள். அவ் வூராரிடம்பிறர்சென்று, 'இங்குக்கல்லாதவர்கள் உண்டோ?' என்று வினவின், அவர்கள் அதனைத் தொடர் மொழியாகக் கொண்டு, 'கல்லாற் செய்யப்பட்ட ஆ இவ்வூரின்கண் உறையும் சிற்பிகள் பலரிடமும் உண்டு. தவர்கள் (விற் கள்) எம்மூரின்கண் உள்ள வீரர்கள் யாவரிடமும் உண்டு. இவ்வூரிற் றவசிகளும் பலர் உண்டு,' என்பார்களே யன்றி, அதனை ஒரு மொழியாகக் கொண்டு, படிப்பில்லாதவர்கள்

என்று பொருள் கொள்ளவும் நானுவார்கள். அப்பதி மக்கள் தம் தாய் மொழியோடு வேறு மொழிகளையுங் கற்ப தில் மிக்க வூக்க முடையவர்கள். அப்பதியின் மாந்தர்கள் இசை யறியாதவர்கள் என்பதனை வசை மொழியாகக் கருதுபவர்கள்.

இன்ன மேன்மை வாய்ந்த அவ்வூரிலே மறையவர் குலத்திலே தோன்றிய கோவிந்த பண்டிதர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர், 'இவருக்கு முன் மற்றவர் யாவரும் உவா மதிக்கு முன்னும் உடுக் குலங்களே யாவர்,' எனக் கற்றோர் யாவரும் வியந்து கூறற்குரிய அறிவின் மாட்சியை யுடைய வர். அவர் மனைவியார் பெயர் நிராபாய் என்பது. அவ் வம்மையாரின் ஒழுக்கத்தினை நோக்கியவர்கள் அனைவரும், 'இவ்வம்மையாருக்கும் இவர்தங் கொழுநருக்கும் மனம் ஒன்றே யன்றி இரண் டன்று,' என்றே கூறுவார். அவர் கள் திருமகள் நாதன்பால் நீங்காத அன்புடையவர்கள்.

அவர்கள் பன்னாள் மகப் பேறின்றி வருந்தினர்கள். திருமகள் நாதன் திருவருளால் அவர்களுக்கு ஓர் அருமந்த மைந்தர் தோன்றினர். அவர்கள் அம் மைந்தர்க்கு விட்டோபா என்று பெயரிட்டார்கள். ஐந்தாம் வயதிலே அம்மைந்தர்க்குக் கல்வி கற்பிக்கத் தொடங்கினர்கள். எட்டாம் வயதில் அச் செல்வர்க்கு உபநயனஞ் செய்வித்து வேதமும் ஓதுவித்தார்கள். அம் மைந்தர் யௌவன பருவ மடைதற்குள் கற்பன கற்றுக் கலை யறிவிற் சிறந்தவ ராயி னர். பிறகு அச்செல்வர் பெற்றோர்களின் உத்தரவு பெற்றுத் தீர்த்த யாத்திரை செய்யத் தொடங்கினர்.

அவர் பல புண்ணிய நதிகளிலே நீராடிப் பல தளிக ளுக்குச் சென்று பகவானைச் சேவித்துப் பின்பு அளகாபுரி என்னும் பதிக்குச் சென்று அங்குள்ள சக்கர தீர்த்தத்தில்

நீராடித் திருமகள் நாதனை மன மலரில் அமைத்துத் தியானித்துக்கொண் டிருந்தார்.

அப்போது அப்புனலில் நீராட அங்கு வந்த சித்த பண்டிதர் என்னும் மறையவர், விட்டோபாவின் பிரமசரிய நிலையைக் கண்டு மகிழ்வுற்று, அவரை வாழ்த்தி, 'அறிஞரே, உம்முடைய ஊர் யாது? உம்முடைய பெற்றோர்களின் பெயர் என்ன? நீர் இங்கு எய்தியதற்குக் காரணம் என்?' என்று வினவினர். விட்டோபா அவருடைய மொழிகளைக் கேட்டு, 'பெரியீர், என்னுடைய ஊர் கங்கையின் கரைக் கண்ணதாகிய அப்புப் புரம் என்பது; எந்தையார் பெயர் கோவிந்த பண்டிதர் என்பது; என் அன்னையார் பெயர் நிராபாய் என்பது; நான் கற்பன கற்றபின் தீர்த்த யாத்திரை செய்தலிலே விழைவு கொண்டேன். ஆதலின், யான் என் பெற்றோர்பால் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டுத் துவாரகை முதலிய பல அரும்பதிகளைச் சேவித்துப் புண்ணிய தீர்த்தங்களிலே நீராடி, இந்தச் சக்கர தீர்த்தத்திற்கு வந்தேன்,' என்று கூறினர்.

சித்த பண்டிதர் விட்டோபாவின் மொழிகளைக் கேட்டுக் களிகூர்ந்து, 'நல்விய லாளரே, நீர் அன்பு கூர்ந்து என்மனைக்கு வருதல் வேண்டும்,' என்று வேண்டி, அவரைத் தம் இல்லத்திற் கழைத்துச் சென்று, நன்குபசரித்து, அறுசுவை யடிசிலிட்டு, அவரைநோக்கி, 'நன்னெறிச் செல்வரே, இன்று முழுதும் என் வீட்டிற்றானே உறைய வேண்டுகிறேன்,' என்றனர். விட்டோபா அதற் கியைந்து, அன்று சித்த பண்டிதரின் மனையிற் றங்கினர்.

அன்றிரவு பாண்டுரங்கன் சித்த பண்டிதர் கனவிற் றோன்றி, 'அன்பனே, உன் மனையில் வந்துள்ள விட்டோபாவுக்கு உன் அருமைச் செல்வியை மணம் புரிவி,' என்று

திருவாய் மலர்ந்தருளி மறைந்தனன். சித்த பண்டிதர் உடனே கண்விழித்தெழுந்து, பண்டரிநாதன் கட்டளையை விட்டோபாவுக்குக் கூறினர். விட்டோபா சித்த பண்டிதரை நோக்கி, 'பெரியீர், பண்டரிநாதன் கட்டளை அது வானல், யான் தங்கள் செல்வியை மணம் புரிந்துகொள்வதில் யாதொரு தடையு மில்லை,' என்றனர்.

மறுநாள் பண்டரிநாதன் விட்டோபாவின் கனவிலுந் தோன்றி, 'அன்பனே, நீ சித்தபண்டிதருடைய அருமருந்தன்ன செல்வியை மணம் புரிந்துகொள்க. ஞானத்திற் சிறந்தவர்களும், என்பால் நீங்காத அன்புடையவர்களுமாகிய நால்வர் மக்கள் அச்செல்வியின் அகட்டிலேதோன்றுவார்கள்,' என்றருளி மறைந்தனன். விட்டோபா உடனே விழித்தெழுந்து, மகிழ்கூர்ந்த மனத்தினராய்ப் பண்டரிநாதன் தமது கனவிற் றோன்றி யருளியவற்றைச் சித்த பண்டிதருக்குக் கூறினர்.

சித்தபண்டிதர் களி கூர்ந்து, உடனே கணிதர்களை வருவித்து, திருமணத்துக் குரிய நாளைக் குறிப்பித்து, அந்நாளில் தமது அருமைச் செல்வியை விட்டோபாவுக்குத் திருமணம் புரிவித்தனர். திருமணம் முடிந்த பிறகு விட்டோபா தமது செல்வ மகளையும் மருமகனையும் அழைத்துக் கொண்டு பண்டரிபுரத்திற்குச் சென்று, பண்டரிநாதனைச் சேவித்துத் தழுவிக்கொண்டு ஆராதித்தனர். பிறகு விட்டோபா மாமனை நோக்கி, 'யான் சேது யாத்திரை செய்து வருகின்றேன்,' என்று சொல்லி, அவரிடம் விடை பெற்றுக்கொண்டு சென்றனர். சித்த பண்டிதர் தம்முடைய குடும்பத்தினருடன் அளகாபுரிக்குச் சென்றனர்.

விட்டோபா பண்டரிநாதனுடைய சம்மதியையும் பெற்றுக் கொண்டு சென்று, பல புண்ணிய நதிகளிலே

நீராடிப் பல திருப்பதிகளை யடைந்து, அப் பதிகளில் எழுந்தருளி யிருக்கும் திருமகள் நாதனைச் சேவித்தனர். முடிவில் சேதுவுக்குச் சென்று, அதில் நீராடி, மீண்டு தம்முடைய மாதுலருடைய இல்லத்திற்குச் சென்றனர். அங்கு அவர் நான்கு நாட்கள் உறைந்து, பிறகு தம்முடைய மாதுலரை நோக்கி, 'அன்புடைய பெரியீர், அப்புப் புரிக்குச் சென்று என்னுடைய பெற்றோரைச் சேவிக்க விரும்புகின்றேன். ஆதலின், விடை தருதல் வேண்டும்,' என்றனர். அதனைக் கேட்ட சித்த பண்டிதர், 'இவருக்கு நம்முடைய செல்வியைப் பண்டரி நாதன் கட்டளையைக் கொண்டு மணம் புரிவித்த செய்தி இவருடைய பெற்றோருக்குத் தெரியாது. ஆதலின், நாம் குடும்பத்துடன் இவரைப் பின்பற்றி அப்புப் புரிக்குச் சென்று, இவருடைய பெற்றோர்களைச் சேவித்து, இவருடைய திருமணத்தின் வரலாற்றை அவர்களுக்குத் தெரிவித்துவிட்டு வருதல் வேண்டும்,' எனத் தமக்குள் எண்ணித் தம்முடைய மனைக் கிழத்தியையும் அருமருந்தன்ன மகளையும் அழைத்துக்கொண்டு விட்டோபாவுடன் அப்புப் புரிக்குச் சென்றனர்.

விட்டோபாவினுடைய தந்தையராகிய கோவிந்த பண்டிதரும், அவர் மனைவியராகிய நிராபாயும், சித்த பண்டிதரையும் அவருடைய இல்லக் கிழத்தியையும் அவர்களுடைய அருமைச் செல்வியாகிய உருக்குமா பாயையும், தம் மருமை மைந்தர் விட்டோபாவையும் எதிர்கொண்டழைத்து நன்குபசரித்தார்கள். விட்டோபாவும் உருக்குமா பாயும், கோவிந்த பண்டிதரையும் அவருடைய மனைவியாரையும் வணங்கி நின்றார்கள். கோவிந்த பண்டிதர் வியப்பெய்திச் சித்த பண்டிதரை நோக்கினர். சித்த பண்டிதர் புன்முறுவல் புரிந்து, விட்டோபாவுக்கும் உருக்குமாபாய்க்கும் மணம் நிகழ்ந்த வரலாற்றினைக் கோவிந்த பண்டிதருக்குக் கூறினர்.

கோவிந்த பண்டிதர் களிப்பென்னும் கடலின் மூழ்கிச் சித்த பண்டிதருக்கு இன்மொழிகள் பல கூறி அவரைத் தழுவிக்கொண்டனர். சித்த பண்டிதர் அங்குச் சில நாட்கள் தங்கி யிருந்து, பிறகு கோவிந்த பண்டிதரிடம் விடை பெற்றுக்கொண்டு தம்முடைய மனைவியுடன் அளகா புரிக்குச் சென்றனர்.

விட்டோபாவும் மனைவியோடு தம் பெற்றோரை நன்குபசரித்து, இனிது வாழ்ந்து வந்தனர். சிறிது காலத்திற்குப் பின் விட்டோபாவின் பெற்றோர்கள் பண்டரி நாதனுடைய திருவடி நீழலைச் சேர்ந்தார்கள். விட்டோபா தம் பெற்றோர்களின் பிரிவினுக் கிரங்கி மனத்தளர் வெய்தி, இல்லறத்தில் வெறுப்புற்றுப் பண்டரி நாதனை மனத்தின்கண் அமைத்து, அப்பெருமானைப் போற்றிக்கொண் டிருந்தனர்.

சித்த பண்டிதர் அச் செய்திகளைக் கேள்வியுற்றுத் தம் மருகரிடம் வந்து, அவரை நோக்கி, 'அறிஞரே, நீர் இவ்வித மன நிலையோடு இங்கிருந்து இல்லறத்தை இனிது நடத்துதல் அருமை யாகும். ஆதலின், நீர் உம்முடைய மனைவியுடன் என் மனைக்கு வரக் கோருகின்றேன்,' என்று வற்புறுத்திக் கூறினர். விட்டோபா அதற்கிசைந்து, தம் மனைக் கிழத்தியை யழைத்துக்கொண்டு தம் மாதுலருடன் சென்று, அளகாபுரியில் அவருடைய மனைக்கண் உறைந்து, பண்டரிநாதனைப் போற்றி வரலாயினர். பண்டரிபுரத்திற்கு அவர்கள் அனைவரும் ஒவ்வோர் ஆடி மதியினும், கார்த்திகை மதியினும் தவறுமற் சென்று, அங்குப் பண்டரி நாதனுக்கு நடை பெறுந் திருவிழாவைச் சேவித்து வந்தார்கள்.

இங்ஙனம் பல ஆண்டுகள் சென்றன. அவர்களுக்கு மக்கட்பேறு உண்டாகவில்லை. விட்டோபா தமக்குள், 'நாம் பல ஆண்டுகளாக இல்லறம் நடத்தி வருகின்றோம். நமக்கு

இதுகாறும் மக்கட்பேறு உண்டாகவில்லை. மக்கட் பேறில்லாத இல்வாழ்க்கையாற் பயனென்ன ? மக்கட்பேறில்லாதார்க்கு இல் வாழ்க்கை உண்டுண்டு உறங்கிக் காலத்தைக் கழிப்பதேயாகும். தாமரைப் போதன்ன சிறடியாற் குறுக நடந்து வந்து, காந்தண் மலரன்ன மெல்லிய கைகளால் கழுவியும், அன்பார்ந்த நோக்கினுல் பெற்ருேர் மனத்தை யுருக்கும் பனிமலர்க் கண்களினின்று ஒளி மிக்க முத்துதிர அழுதும், களங்கமின்றி விளங்கும் முக மலர் பொலிவெய்தவும் பவழவாயிதழ்கள் விளங்கவும் முத்தன்ன முறுவலைக் காட்டி நகைத்தும், பெற்ருேர்கள் உண்ணும் உணவினை மலர்ச்சிறு கைகளால் தொட்டித் துழவியும், குழலினும் யாழினும் இனிய மழலைச் சொற்களைப் பேசியும் பெற்ருேரை இன்பக்கடலுள் மூழ்த்தும் மக்களை யன்றி, இல்லறத்தார்க்கு இல் வாழ்க்கையால் உண்டாகும் துன்பமாகிய பிணியை ஒழித்தற்கு வேறு மருந்தும் உளதோ ? அரிதிற் பெற்ற நீரை விழலுக்கிறைப்பாரைப் போலவும், நல்லாவின் பாலைக் கமரில் உகுப்பாரைப் போலவும் நம்முடைய வாழ்நாளை இப் பயனற்ற வாழ்க்கையிற் கழிப்பதனுல் யாதுபயன்? இனித் துறவறத்தினை மேற்கொண்டு, பண்டரிநாதன் திருவடித் தாமரை மலர்கள் அன்பென்னு நன்னீர் நிறைந்தமனத் தடத்துப் பூத்துப் பொலிவெய்தும்படி அப்பெருமானைப் போற்றி, மானிடப் பிறவியினுல் நாமடைதற் குரிய பயனை யடைதல் வேண்டும்,' எனத் துணிந்து, பின்பு 'நம்முடைய இல்லாட்கு நம் கருத்தினைக் கூருமல் துறவு கொள்ளுதல் அறமன்று; தக்க சமயமறிந்து அவளுக்குக் கூறிப் பின் நாம் நம்முடைய கருத்தினை முடித்தல் நல மாகும்,' என்றெண்ணித் தக்க சமயத்தை எதிர் நோக்கி யிருந்தனர்.

ஒரு நாள் அவர் உருக்குமாபாயை அருகிலழைத்து, இன்மொழிகள் பல கூறிப் பின்பு, 'அன்புடைய நங்காய், நமக்கு

மணமாகிப் பல நாட்களாய் விட்டன; எனினும், மக்கட் பேறு உண்டாக வில்லை. ஆதலின், எனக்கு இனி இல் லறத்தி லிருப்பதாற் பயனொன்று மின்றெனத் தோன்றுகின் றது. ஆதலின், யான் துறவறத்தினை மேற் கொள்ளக் கருதி யுள்ளேன். "மின்னின் நிலையில மன்னுயி ராக்கைகள்." அதனை யுன்னி யுலகப் பற்றினை யொழித்துத் துறவறத்தை மேற்கொண்டு பற்றற்றான் தாளிணையாகிய பெரும்புணையைப் பற்றினாரே பிறவிப் பெருங்கடலைக் கடந்துய்வர். அவர்களே அறிவுடையவர்கள். அறிவுடையாய், நான் உய்யு நெறியை அடைதற்கு நீ உத்தரவு கொடுத்தல் வேண்டும்,' என்றனர்.

உருக்குமா பாய் அதனைக் கேட்டு, மனம் பதைத்துக் கண்களினின்று அருவிபோல் நீர் பெருக விட்டோபாவைப் பார்த்து, 'என் ஆருயிர்க் காதலரே, பண்டரி நாதர் ஞானத் திலும் பக்தியிலுஞ் சிறந்தவர்களாகிய நான்கு மக்கள் நமக்கு உண்டாவார்கள் என்றருளியதனை மறந்து என்னைத் தனியே விட்டுப் போக நினைத்திரோ? தாங்கள் என்னை விட்டு நீங்கிய பின் யான் உயிர் வாழ்வதாற் பயனென்?' என்று கூறினள். விட்டோபா அவளுக்கு வேறு சொற் களைச் சொல்லி அவளைத் தேற்றினர்.

பின்னர் உருக்குமா பாய் தன்னுடைய தந்தையாகிய சித்த பண்டிதரை யணுகி, 'எந்தையிர், தங்கள் மருகர் துற வறத்தினை மேற்கொள்ள உறுதிகொண் டிருக்கின்றனர்,' என்று கூறினள். சித்த பண்டிதர் அந் நங்கையை நோக்கி, 'என்னருமைச் செல்வி, வருந்தாதை. மக்கட்பேற்றை யடைந்து பெற்றோர்களின் கடனைத் தீர்த்த பிறகே துறவறங் கொள்ளுதல் வேண்டும். இவ்வாறே நூற்கள் கூறுகின்றன. இங்ஙன மிருக்கக் கற்பன கற்றுணர்ந்த உன் கணவர் மக்கட் பேற்றினை யெய்துதற்கு முன் எப்படித் துறவறத்தினை மேற்

கொள்ளுவர்? நீ இதற்கு அஞ்சுதல் வேண்டா; பேசாமல் இரு,' என்றார்.

உருக்குமா பாய் அவர் மொழிகளைக் கேட்டு ஒருவாறு மனந்தேறி யிருந்தனள். பின் சில நாட்கள் கழித்து ஒரு நாள் உருக்குமா பாய் தூக்கத்தி லிருக்கையில் விட்டோபா அவ்வம்மையை நோக்கி, 'நங்காய், நான் கங்கைக்குச் சென்று வருகின்றேன்,' என்றனர். உருக்குமா பாய் தூக்க மயக்கத்தில், 'அப்படியே செய்யுங்கள்,' என்றனள். விட்டோபா, 'இதுவே சமயம்! இச் சமயம் தப்பினால், நாம் இவளை விட்டுத் தப்பிச் செல்லுதல் இயலாது. காற்றுள்ள போதே யன்றோ தூற்றிக்கொள்ள வேண்டும்? இனி நாம் காலந் தாழ்த்த லாகாது,' என்று துணிந்து, பூட்டப்பட்ட நுகத்தடியினின்று விடுபட்ட காளையைப்போல மகிழ்வெய்திப் புறப்பட்டுச் சென்று திரிவேணி சங்கமத்திலே நீராடிப் புட்கரத்துக்குப் போய், அங்கு அரச தீர்த்தத்திலே மூழ்கினர். அங்குச் சில வைணவர்கள் பகவத் கீதையைப் பாராயணம் பண்ணிக்கொண் டிருந்தார்கள். விட்டோபா அதனைக் கேட்டு அங்கு மகிழ்ந்திருந்தனர்.

ஒரு நாள் கீதையிலே மோக்ஷ சந்நியாச யோகத்தின் சம்பந்தமாகிய பதினெட்டா மத்தியாயத்திலே உள்ள, 'எக் காலத்துந் தியான யோகஞ் செய்ய வல்லனாய், வைராக்கிய மடைந்து, நான் என்னும் அகப்பற்றாகிய விதையினின்று முளைத்த காமக் குரோதங்களை யொழித்து, எனது என்னும் புறப் பற்றைக் கெடுத்து, அமைந்த ஒழுக்க முடையவனா யிருப்பவன் அறவாழி யந்தணன் திருவடித் தாமரைகளை அடைதற்குரியவ னாவன்,' என்னும் இவை முதலிய கருத்துகளமைந்த சுலோகங்களைக் கேட்டு, 'எல்லா வுலகங்களுக்கும் தனிமுதல் விறைவராகிய கண்ண பிரானார் திருவாய் மலர்ந்தருளியபடி நாம் துறவறத்தினை மேற்கொண்டு

பேரின்ப வாழ்க்கையை எய்துதல் வேண்டும்,' என்று உறுதி கொண்டு அவ்வித நன்னிலையை யருளிச் செய்ய வல்ல குரவரை நாடிச் சென்று காசியை அடைந்து அங்கு அருண் மனக் குரவராய் எழுந்தருளியுள்ள இராமாநந்தரை யடைந்தனர். மெய்ஞ்ஞானச் செல்வராகிய இராமாநந்தர் விட்டோபாவை யன்போடு நோக்கினர். விட்டோபா இராமாநந்தருடைய திருவடிகளை வணங்கி, 'அடிகாள், அடியேனுக்குச் சந்நியாசம் அளித்தருளல் வேண்டும்,' என்று வேண்டினர். அருண் மனப் பெரியாராகிய இராமாநந்தர் விட்டோபாவை நோக்கி, 'அன்பரே, நீர் மக்கட் பேற்றினையெய்தித் தென்புலத்தார் கடனைக் கழித்து விட்டீரோ? தாய் தந்தையர்களுக்கும் மனைவி மக்களுக்கும் குறைவொரு சிறிதும் இல்லாத நிலையை ஏற்படுத்தி அவர்களுடைய சம்மதத்தைப் பெற்று வந்தீரோ?' என்று கேட்டனர். விட்டோபா தாம் துறவறத்திற் கொண்ட பேரவாவினுல், 'அடிகாள், தாங்கள் வினவியவற்றை யெல்லாஞ் செய்து முடித்து விட்டேன். என் பெற்றோர்களும் விண்ணகம் எய்தினர்கள்,' என்று கூறினர். அருள்மிக்கவராகிய இராமாநந்தர் விட்டோபாவின் சொல்லை நம்பி அவருக்குச் சந்நியாசம் கொடுத்தருளினர்.

விட்டோபாவின் மனைவியாகிய உருக்குமா பாய் அச் செய்திகளை யெல்லாம் சிலரால் உணர்ந்து, பெரிதும் வருந்தி மெய் சோர்ந்து, தரையிலே வீழ்ந்தனள். பிறகு ஒருவாறு தெளிந்தெழுந்து, கரை காணுத துன்பக் கடலில் மூழ்கித் தவித்துக்கொண் டிருந்தாள். உருக்குமா பாயின் துன்ப மிகுதியைக் கண்டு, அவள் பெற்றோர்கள் அவ்வம்மைக்குப் பல தேறுதல் மொழிகளைக் கூறினர்கள். எனினும், அவ்வம்மை அவற்றுற் சிறிதும் தேறுதலடையவில்லை. உருக்குமா பாயின் தந்தையார் அதனைக் கண்டு, 'என் அருமைச்

செல்வி, மாவிற் சிறந்தது அரிமா; மரத்திற் சிறந்தது அரசு; பூவிற் சிறந்தது தாமரை; புள்ளிற் சிறந்தது கருடன்' என்று பெரியோர்கள் கூறுவார்கள். ஆதலின், நீ நாள்தோறும் அரசமரத்தை அன்புடன் வலம் வந்து பணிந்து பூசித்து வருக. நின் குறை தீரும்,' என்று கூறினர். உருக்குமா பாயும் அவ்வாறே அரச மரத்தினைப் பூசித்து வந்தனள். அதனால், திருமகள் நாதனுக்கு அவ்வம்மைபால் இரக்க முண்டாயிற்று. எம்பெருமான் விட்டோபாவின் குரவராகிய இராமாநந்தருக்குச் சேது யாத்திரை செய்தல் வேண்டும் என்னும் அவா உண்டாகும்படி செய்தருளினன். உடனே இராமாநந்தர் தம்முடைய மாணவர்களிற் சிலரோடு சேது யாத்திரை செய்தற்பொருட்டுப் புறப்பட்டுச் செல்லுகையில் அளகாபுரியை யடைந்து, உருக்குமா பாய் பூசிக்கும் அரசின் கீழ்த் தங்கினர்.

அப்போது அவ்வரசினை முறைப்படி பூசிக்க அங்கு வந்த உருக்குமா பாய் அருண்மனப் பெரியாராகிய இராமாநந்தரைக் கண்டு, அவரைப் பணிந்தனள். இராமாநந்தர் உருக்குமா பாயை நோக்கி, 'நங்காய், நீ வாயும் நன்மக்களைப் பெற்று நின் கொழுநனோடு நீடு வாழ்க,' என வாழ்த்தினர். அதனைக் கேட்ட உருக்குமா பாய் முறுவல் பூத்தனள். இராமாநந்தர், 'நீ நகைத்ததற்குக் காரணம் யாது?' என்று கேட்டனர். உருக்குமா பாய், 'அருண் மிக்க மனமுடைய எம்மடிகாள், கணவராலே கைவிடப்பட்ட எனக்கு மக்கள் உளராவரோ? என் கொழுநர் பற்றுக்கோடற்ற கொடி போல யான் தளர்வெய்தும்படி என்னைத் துறந்துசென்று, துறவறத்தினை மேற்கொண்டனர். தாங்கள் அதனை யுணராமையின் என்னை யிங்ஙனம் வாழ்த்தி யருளினீர்கள். அந்தோ! என்னுடைய ஒப்பரிய தீவினையானது என்பால் அருள்கூர்ந்த மனமுடைய பெரியீராகிய தங்கள் சொல்லும்

பொய்யாகும்படி செய்துவிட்டதே! அதனைக் கருதித்தான் நான் நகைத்தேன்,' என்று கூறி வருந்தினள்.

இராமாநந்தர் உருக்குமா பாயை நோக்கி, 'மக்கட்பேறில்லாதவன் துறவு பூணலாகாதென நூற்கள் கூறுகின்றன. அவ் விதிக்கு மாறாய்த் துறவினை மேற்கொள்ளுபவனும், அவனுக்கு அதனைத் தருபவனும் கடவுளாலே தண்டிக்கப் படுவார்கள். நங்காய், உன் கொழுநன் யாவன்? அவனுக்குச் சந்நியாச மளித்தவர் யாவர்? கூறுக,' என்றனர். உருக்குமா பாய், 'எம்மடிகாள், என்னுடைய கொழுநர் பெயர் விட்டோபா என்பது. அவர் எவ்வாறோ தங்களிடந்தான் சந்நியாசம் பெற்றுக்கொண்டனர்,' என்றனள். இராமாநந்தர், 'அந்தோ! இத் துன்பத்திற்கு நானே காரணமானவனானேனே! விட்டோபா என்னை வஞ்சித்துவிட்டானே! நான் அவனைப் பலகால் நன்காராயாமல் மோசம் போனேனே! குரவர்கள் சீடர்களை நன்கு சோதித்த பிறகு அவர்களை நம்புதல் வேண்டுமெனவும், அங்ஙனஞ் சோதிக்குங்கால் ஓராண்டு வரையில் சோதித்தல் உத்தமம் எனவும், ஆறு திங்கள் வரையில் சோதித்தல் மத்திமம் எனவும், மும்மதி சோதித்தல் அதம மெனவும், நூற்கள் கூறுகின்றனவே! அவற்றை நான் அறிந்திருந்தும், அறியாதவனானேனே! என்னே என் அறிவின் திறம் பிறழ்ந்த விதம்!' என்று கூறி மிகவும் வருந்தி, உருக்குமா பாயை நோக்கி, 'நங்காய், நின் பெற்றோர்கள் எங்கிருக்கின்றார்கள்?' என்று கேட்டனர். உருக்குமா பாய், 'எம்மடிகாள், அவர்கள் இவ் வூரிலேதான் இருக்கின்றார்கள்,' என்றனள். இராமாநந்தர் உருக்குமா பாயின் மூலமாக அவர்கள் மனையை யறிந்து, தம் மாணவர்களுள் ஒருவனால் சித்த பண்டிதரைத் தம்மிடம் வருவித்தனர். சித்த பண்டிதர் இராமாநந்தரை வணங்கி, அவரை நோக்கி, 'மெய்ஞ்ஞானச்

செல்வரே, அடியேன் தேடி வந்து வணங்குதற்குரிய தாங்க்ள் என்னைத் தங்கள் திருமுன் வரும்படி யழைத்தது என் முன்னோர்கள் செய்த தவத்தின் பயனே யாகும். என் குடியுடன் யான் உய்ந்தனென். அடிகாள், தாங்கள் அடியேனை அழைத்ததன் காரணம் யாது? திருவாய் மலர்ந்தருள்க,' என்றனர்.

இராமாநந்தர் சித்த பண்டிதருடைய பெயர் முதலிய வைகளைக் கேட்டறிந்துகொண்டு, அவரை நோக்கி, 'அறிஞரே, யான் என் மாணவர்களோடு உறையுமிடம் காசி யாகும். யான் சேது யாத்திரை செய்ய வெண்ணிப் புறப்பட்டு வருகையில் இவ்வூரை யடைந்து, இங்குத் தங்கினேன். அரச மரத்தினைப் பூசித்தற்கு வந்த தங்கள் அருமைச் செல்வி என்னை வணங்கித் தன் வரலாற்றினைக் கூறினள். அச்செல்வியின் துன்பப் பெருக்கினுக்குக் காரண மானவன் யானே. விட்டோபா என்னை வஞ்சித்து என் பால் சந்நியாசம் பெற்றுக் கொண்டனன். யான் செய்த பிழையைப் போக்கிக் கொள்ள யான் காசிக்கு மீண்டுஞ் செல்கின்றேன். நீர் உம்முடைய செல்வ நங்கையை யழைத்துக்கொண்டு என்னுடன் வருவீராக,' என்றருளி, உருக்குமா பாயோடு சித்த பண்டிதரையும் அழைத்துக்கொண்டு சென்று காசியை யடைந்து, தம்மடத்தைச் சார்ந்தனர்.

இராமாநந்தர் தம்முடைய மடத்தை யடைந்தவுடன் விட்டோபாவை யழைத்து, அவரை நோக்கி, 'நீ பொய்கூறி என்னை வஞ்சித்தனை. கற்பன கற்றறிந்த அறிஞனாகிய உனக்கு இச் செயல் தகுதியான தாகுமோ? இப்பொழுதும் நீ உண்மையை மறைக்கக் கருதுவையோ?' என வினவினர். விட்டோபா உண்மையைக் கூறி, 'அடிகாள், அடியேன் துறவறத்திற் கொண்ட அவாவின் மிகுதியால் பொய் கூறி

விட்டேன்,' என்று கூறி, இராமாநந்தருடைய திருவடிகளில் வீழ்ந்து, 'எம்மடிகாள், அடியேனை மன்னித் தருளவேண்டும்,' என வேண்டினர்.

இராமாநந்தர், 'அன்புடையவனே, நான் சேது யாத்திரையின் பொருட்டுச் செல்லுகையில் அளகா புரியில் சென்று, அவ்வூரின்கண் ஓர் அரச மரத்தடியில் தங்கினேன். அங்குக் கற்பரசியாகிய நின் மனைவி, அவ்வரச மரத்தினைப் பூசிக்கும்பொருட்டு வந்து என்னைக் கண்டு பணிந்தனள். நான் அச்செல்வ நங்கையை நோக்கி, "அம்மையே, நீ நன் மக்களைப் பெற்று நீடு வாழ்க," என்று வாழ்த்தினேன். அச் செல்வி அதனைக் கேட்டு வருந்தித் தன் வரலாற்றினைக் கூறினள். அதன் பின்னரே நீ செய்த தவற்றினை யறிந்தேன். இதுகாறும் என் சொல் பொய்த்ததில்லை; இனியும் பொய்த்தல் கூடாது. ஆதலின், என் சொல்லைக் காத்தற்பொருட்டும், நீ செய்த தவற்றினின்று நீங்குதற்பொருட்டும் நான் உனக்கிடுங் கட்டளையை நீ ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும். அதனால் உனக்கு நன்மை யன்றித் தீமை யுண்டாகாது. பாண்டுரங்கன் திருவருளும் உனக்கு வாய்க்கும். நீ உன் மனைவியுடன் சென்று இல்லற மேற்கொண்டு வாழவேண்டும். "துறவறங் கொண்டவன் அதனைத் துறந்து மீண்டும் இல்லறத்தினை யேற்றல் அறநெறி யாமோ?" என நீ அஞ்சற்க. நின் னிலையி லுள்ளார்க்கு அஃது அறநெறியே யாம். மக்க ளுண்டாகாத குறையினா லன்றோ நீ இல்லறத்தினைத் துறந்தனை? ஈடு மெடுப்புமில் இறைவனாகிய பாண்டுரங்கன் உன் கனவிலே தோன்றி, "உனக்கு நன் மக்கள் உளராவர்," என்றருளின னன்றோ? நானும் அங்ஙனமே உன் மனைவியை வாழ்த்தினேன். ஆதலின், நீ மீண்டு சென்று இல்லறத்தினைக் கைக் கொள்ளல் தீமை யன்று.

தம் அன்னையாகிய குந்திதேவியின் சொல்லைக் காத்தற் பொருட்டுப் பாண்டவர் ஐவரும் திரௌபதியை மணந்து கொண்ட சரிதையை நீ பாரதத்தில் கண்டிருக்கின்றா யன்றோ? அவர்கள் தங்களுடைய தாயின் சொல்லைக் காத்தலே தங்களுக் கறமாம் எனக் கொண்டு அங்ஙனம் புரிந்ததனால், புகழும் இன்பமும் புண்ணியமும் பெற்றார் கள் என்பது நீயறிந்ததே யன்றோ? ஆதலின், என் சொல்லை மறுக்காமல் நீ யுன் மனைவியுடன் சென்று இல்லற மேற்று வாழ்க,' என்று கூறினர்.

விட்டோபா தம் மருமைக் குரவர் இட்ட கட்டளைக் கிணங்கி, அவரை வணங்கி, அவர்பால் விடை பெற்றுக் கொண்டு, தம் மாமனாராகிய சித்த பண்டிதரோடும், தம் மனைவியாகிய உருக்குமா பாயோடும் அளகா புரியை யடைந்து, இல்லறத்தை வழுவற நடத்தி வந்தனர்.

விட்டோபா இங்ஙன மிருக்க, சில மறையவர்கள் அவர் துறவறத்தினைத் துறந்து இல்லறத்தினை மேற் கொண்டதனைக் கண்டு மனம் பொறாதவர்களாய், 'இவன் சிறிதும் முன்பின் ஆய்ந்து பாராமல் பற்றற்ற மனத்தினனைப் போல் துறவறத்தினை மேற்கொண் டிருந்து, பற்றினைத் துறக்கும் மன வலி யின்மையின் மீண்டும் இல்லறத்தினை மேற்கொண்டனன். இவன் செயல் சாஸ்திரங்களுக்கு முற்றும் மாறானது. இது குலத்தின் சீலத்திற்கும் மாறானதே யாகும். ஆதலின், இவனைக் குலத்தினின்றும் விலக்குதல் வேண்டும்,' என்று தமக்குள் பேசிக்கொண்டு, அங்ஙனமே அவரைக் குலத்தினின்று நீக்கினார்கள். விட் டோபா, சிறிதும் மனந் தளராமல் இராம நாமத்தைத் தியானித்துக்கொண்டு, காட்டிலே குடிசை யமைத்து, அதில் தம் மனைவியுடன் இருந்து தங் குரவர்தங் கட்டளை

யைச் சிரமேற்கொண்டு, பிச்சை யேற்றுண்டு, இல்லறத்தை நடத்தி வந்தனர்.

இங்ஙனம் நடத்தி வருகையில் பன்னீராண்டு கழித்து அவர்களுக்கு மூன்று ஆண் மக்களும் ஒரு பெண்ணும் பிறந்தார்கள். அவர்களுள் முதற் பிள்ளையின் பெயர் நிவர்த்தி தேவர் என்பது : இரண்டாம் பிள்ளையின் பெயர் ஞானதேவர் என்பது ; மூன்றும் மைந்தர் பெயர் சோபான தேவர் என்பது ; பெண் மகவின் பெயர் முக்தாபாய் என்பது. அவர்களுள் நிவர்த்திதேவர் சிவாமிசமாகவும், ஞான தேவர் திருமகள் நாயக னமிசமாகவும், சோபானதேவர் பிரம னமிசமாகவும், முக்தாபாய் யோக மாயையின் அமிச மாகவும் அவதரித்தவர்கள் என அறிஞர் கூறுவர்.

## 2. ஞானதேவர் மகிடத்தால் வேதாத்தியயனஞ் செய்வித்தல்

விட்டோபாவும், உருக்குமா பாயும் தங்கள் மைந்தர்களையும், பெண்ணையும் இவர்கள் பண்டரி நாதன் அருளால் நமக்குத் தோன்றிய செல்வங்கள் என்றெண்ணி மிகவும் அருமையாகப் பேணி வந்தார்கள். அம் மக்கள் பண்டரி நாதன் திருவருளால் ஞானம் உடன் வளர வளர்ந்து வந்தார்கள். மீன் குஞ்சுக்கு நீந்தும் வன்மையும், சிங்கக் குட்டிக்குப் பாயும் ஆற்றலும் கருவிற்றானே அமைந்திருத்தல் போல அந் நான்கு மக்களுக்கும் ஞானம் கருவிற்றானே அமைந்து விளங்கியது. ஒரு நாள் உருக்குமா பாய் தன்னுடைய கொழுநர் விட்டோபாவை நோக்கி, 'அன்புடையீர், நம்முடைய இனத்தினர் நம்மைச் சாதியினின்று விலக்கினர். நாம் கானில் உறைகின்றோம். அதனால் நம் மருமை மக்கள் பிராமண கருமங்கள் இன்றி இருக்கின்றார்கள். அஃது எனக்கு மிக்க கவலையைத் தருகின்றது,' என்றனள்.

விட்டோபா அதனைக் கேட்டு, உடனே தம் மைந்தர்களை அழைத்துக்கொண்டு மறையவர்களிடஞ் சென்று அவர்களைப் பணிந்து, 'மாமறைச் செல்வர்காள், சிறியேனாகிய அடியேன் ஏழை மதியினாற் செய்த பிழையினை மன்னித்து, தரும நூலின் விதிப்படி அடியேற்கும், அடியனேன் மைந்தர்களுக்கும் பிராயச்சித்தம் விதித்து அடியேங்களைத் தூயவர்களாக்கி யருளுதல் வேண்டும்' என்று வேண்டினர். கன்னீர மனத்தினராகிய அம்மறையவர்கள் நன்னீரராகிய விட்டோபாவின் வேண்டுகோளைச் சிறிதும் பொருள் படுத்தாமல் அவரை நோக்கி, 'நிலை கெட்டவனே, உயிர்க் கிறுதி யுறுமளவும் நீங்கள் இந் நிலையிலிருத்தலே உங்கட் குரிய பிராயச்சித்த மாகும். வேறு பிராயச்சித்தங் கிடையாது. நீங்கள் விரைவில் தூய்மையடைய விரும்புவீர்களாயின், திரிவேணி சங்கமத்தில் விழுந்து உயிரைவிட் டொழிந்திடுங்கள்,' என்று கூறினார்கள். விட்டோபா அம் மொழிகளைக் கேட்டு மனமிக வருந்தினர் ; ஆயினும், மறுமொழி ஒன்றுங் கூறாமல், தம் மருமை மைந்தர்களை அழைத்துக்கொண்டு சென்று தம் மனையில் விட்டுப் பரதேயஞ் சென்று விட்டனர். அதனையுணர்ந்த மறையவர்கள் பெரு வியப்பெய்தி, விட்டோபா தமது குற்றத்தினை யுணர்ந்து தமது குடும்பத்தினை விட்டுத் தேசாந்திரி யாயினர். 'ஒருவன் தன் பிழையை யுணர்ந்து அதற்காகத் தனக்குள் வருந்துவதினுஞ் சிறந்த பிராய்ச்சித்தம் யாதுளது? இனி அவர் நன்னெறி யெய்தியவராயினர்,' என்று கூறினார்கள்.

மறு நாள் நிவர்த்தி தேவர் முதலிய மூவர் மைந்தர்களும், மறையவர்கள்பாற் சென்று, 'அருமறைப் பெரியீர்காள், எந்தையார் பரதேயஞ் சென்று விட்டனர். இப்பொழுதேனும் எங்கட்குப் பிராயச்சித்தம் விதித்து எங்

களை ஏற்றுக் கொள்ளுதிரோ?' என்று கேட்டார்கள். அம் மறையவர்கள் அவ் வருமைச் செல்வர்களை நோக்கி, 'அறிவிற் சிறந்த இளைஞர்களே, நீங்கள் பைட்டினிப் புரத்திற்குச் செல்லுங்கள். அங்குப் பன்னூற்களையு நன் குணர்ந்த பல மறையவர்கள் இருக்கின்றார்கள். அவர்களே குற்றத்திற் கேற்புடைய பிராயச்சித்தத்தினை நன் காய்ந்து விதிக்க வல்லவர்கள். அவர்களை அடைந்து அவர்கள் விதிக்கும் பிராயச்சித்தத்தினை ஏற்றுக்கொண்டு அவர்களிட மிருந்து அவர்களின் கையொப்ப மமைந்த கடிதத்தினைக் கொண்டு வாருங்கள். அவர்கள் அக் கடிதத்தில் விதிக்கும் வண்ணம் நாங்கள் நடந்துகொள்வோம்,' என்றார்கள்.

நிவர்த்தி தேவர் முதலிய மூவர்களும் அவ்வாறே பைட்டினிப் புரத்தை அடைந்து கோதாவரியிலே நீராடிச் சென்று, அப் பதியிலுறையும் விப்பிரர்களை அணுகி, அவர்களை வணங்கித் தங்கள் வரலாற்றினைக் கூறித் தங்களுக்குப் பிராயச்சித்தம் யாது எனக் கேட்டார்கள். அவ் வேதியர்கள் அவ்வருமைச் செல்வர்களை நோக்கி, 'பேதையர்களே, நீங்கள் துறவிக்குப் பிறந்தவர்கள். ஆதலின் உங்களுக்குப் பிராயச்சித்தங் கிடையாது ஆயினும், உங்களை யொப்பவர்களுக்கு மறை நெறியின் முறைப்படி பிழைத்தற்குரிய வழி யொன்றுள்ளது. அஃது "அகலகில்லே னிறையும் என்று அலர்மேல் மங்கையுறை மார்பன்" திருவடித் தாமரைகளை முடியிற்சூடி அப் பெருமானையே புகல் எனக் கொண்டு என்றும் அப் பெருமானுடைய திருநாமங்களை நெஞ்சினும் நாவிலும் அமைத்து அத் தனிமுதல் விறைவனை எப்பொழுதும் போற்றுதலே யாம்,' என்றார்கள். அதனைக் கேட்ட அவ் வருமைச் செல்வர்களில் ஞான தேவர் அவ் விப்பிரர்களை நோக்கி, 'அருமறைச் செல்வர்களே, நீங்கள் எங்கள் மனத்திற் கேற்ற பிராயச் சித்தத்தினையே விதித்தீர்கள். இதனை

யோசிக்கின் உங்களைக் கடையறியா ஞானத்தவர்கள் என்பதில் யாதும் ஐயுறவில்லை,' என்று கூறினர்; அம்மறையவர்கள், ஞானதேவரை நோக்கி, 'உனக்கு இத்தகைய பெயர் இட்டதற்குக் காரணம் யாது? நீ வேத முதலிய கலைகளை நன்கு பயின்றனையா? உனக்கிப்பெயரிட்டது, வறுமையில் மிக்கான் ஒருவனைச் செல்வன் எனவும், ஒருபோதும் படையினைப் பயின்றறியான் ஒருவனை வென்றி வேற் கையன் எனவும் கூறுதல்போன் றிருக்கின்றது,' என்று கூறி நகைத்தார்கள். அவ்வேளை ஒரு மகம்பதியன் ஓர் எருமையின் மீது தோற் பையை ஏற்றி, அதனோடு வந்துகொண் டிருந்தனன். அம்மறையவர்கள் அதனைக் கண்டு, ஞானதேவரை நோக்கி, 'இளைஞனே, நாங்கள் இவ்வெருமைக்கு "ஞானநாதர்" எனப் பெயரிடுகின்றோம்,' என்று கூறினார்கள். அதனைக் கேட்டு, ஞானதேவர் அம்மறையவர்களை நோக்கி, 'பகவான் எங்கும் நிறைந்துள னன்றோ? அப்பெருமான் இவ்வெருமையினிடத்தும் உளன்; என்னிடத்து முளன். ஆதலின், இவ்வெருமைக்கும் எனக்கும் வேறுபாடில்லை. இதுவு நானு மொன்றெனத் தக்கவர்களே,' என்றார்.

அம்மறையவர்கள், 'அங்ஙனமாயின், இவ்வெருமையின்மீது படும் அடி நின்மீதும் படவேண்டு மன்றோ?' என்று கூறி, அதனை நன்றாய் அடிக்கும்படி அம்மகமதியனுக்குக் கூறினார்கள். அவன் அவ்விதமே அதன் முதுகில் ஓங்கி ஓரடி யடித்தான். உடனே அவ்வடியின் தழும்பு ஞானதேவர் முதுகினும் காணப்பட்டது. மூர்க்கர்களாகிய அவ்வந்தணர்கள் அதனைக் கண்டுந் தெளிவடையாது, மீண்டும் ஞானதேவரை நோக்கி, 'இளைஞனே, உனக்கும் இவ்வெருமைக்கும் வேறுபாடின்மை யுண்மையாயின், இதன் வாயினால் வேதம் ஓதுவி,' என்றார்கள்.

ஞானதேவர் உடனே அவ்வெருமைக்கடாவின் அருகிற் சென்று, அதன் தலையிலே தம் கையை வைத்து, 'எருமையே, நீ வேதங்களை யுச்சரித்து இம்மறையவர்களை மகிழ்வி,' என்றனர். உடனே அவ்வெருமைக்கடா வேதங்களை யோதத் தொடங்கியது. அங்கிருந்தவர்கள் அனைவரும் அதனைக் கண்டு வியப்புங் களிப்பும் ஒருங்கெய்தி, 'இத்தகைய அருஞ்செயல் செய்தாரை நாங்கள் எங்குங் கண்டது மில்லை; கேட்டது மில்லை,' என்று கூறி, ஞானதேவரைப் புகழ்ந்தார்கள். பரிதி தோன்றியவுடன் இருள் நீங்கிவிடுதல் போல, அவ்வியப்பான செயலைக் கண்டவுடன் அம்மறையவர்களின் குலச் செருக்கு ஒழிந்தது. ஆதலின், அம்மறையவர்கள், 'நாம் வேத முதலிய கலைகளைக் கற்றுணர்ந் தென்னபயன்? ஞானதேவரைப்போல ஏதேனும் செயற்கரிய செயலைச் செய்தோமோ? இச்செயல் இந்திரன் முதலிய தேவர்களாலுஞ் செய்தற்கரியது. இம்மூவரும் முதற் றேவர்களாகிய மூவர்களின் அவதாரங்களே யானவர்கள். இவர்களின் தங்கையாகிய முக்தாபாய் யோக மாயையின் அவதார மானவளே. இல்லாவிடின், இவர்களுக்கு இந்த அற்புத ஆற்றல் எங்ஙன முண்டாகும்? இவர்களுடைய திருவடி தீண்டின், கங்கை முதலிய நதிகளும் தூய்மையெய்தும். இவர்களைப் பெற்றவர்கள் முற்பிறப்பி லெத்தகைய தவஞ் செய்தார்களோ அறியோம்! மூவுலகத்தாருந் தொழுதற்குரிய ஞான சூரியர்களாகிய இவர்களுக்குப் பிராயச்சித்தமும் வேண்டுமோ? இவர்களுக்கு நாம் பிராயச்சித்தம் விதிப்போமாயின், உலகம் நம்மைப் பழியாதோ? இவர்களுடன் கூடிக் குலவலே நாம் தூய்மை எய்தற்குரிய நெறியாகும்,' என்று பேசிக்கொண்டார்கள்.

ஞானதேவர் அம்மறையவர்களை நோக்கி, 'பெரியோர்களே, நீங்கள் தவ ஒழுக்கத்திற் சிறந்தவர்கள். உங்கள்

திருமுன்பை யடைந்ததனாலேதான் நாங்கள் மேன்மை யடைந்தோம்,' என்றனர்.

அம்மறையவர்கள் அவருடைய இன்மொழிகளைக் கேட்டு, மகிழ்கூர்ந்து, அந்நாள்வரையுந் தங்கள் குழுவிற் சேர்த்துக்கொண்டு நன்கு உபசரித்து மகிழ்ந்தார்கள்.

3 ஞானதேவர் சுசீலன் என்னு மறையவனுடைய பிதிர்த்தேவர்கள் நேரில் வந்து சிரார்த்தத்தை ஏற்கச் செய்தல்

ஞானதேவர் முதலிய நால்வரும் பைட்டினபுரம் என்னும் அப்பதியில் திருமகள் நாதன்பால் நீங்காத அன்புடையவனும் நற்குணங்களுக் குறையுளானவனுமாகிய சுசீலன் என்னும் மறையவனில்லத்தில் இனிதுறைபலாயினர். அம்மறையவன் அவர்களை உள்ளன்புடன உபசரித்து வந்தான். ஒரு நாள் அவனுடைய தந்தைக்குச் சிரார்த்தம் வந்தது. அவன் அவ்வூரிலுள்ள சில வேதியர்பாற் சென்று, 'ஐயன்மீர், இன்றென் தந்தையார்க்குச் சிரார்த்தம். ஆதலின், நீங்கள் இன்று என் மனைக்கு எழுந்தருளி என் மூதாதைகளை மகிழ்வித்தல் வேண்டும்,' என்றனன். அம்மறைபவர்கள், 'ஐய, நின் இல்லத்திலே துறவியின் மக்கள் உறைகின்றார்கள். ஆதலின், நாங்கள் உன் மனைக்கு வருகிலோம்,' என்றார்கள்.

சுசிலன் அதனைக் கேட்டு வருந்தி, வீட்டுக்கு வந்து அவர்கள் கூறியதை ஞான தேவருக்குத் தெரிவித்தான். ஞான தேவர் சுசீலனை நோக்கி, 'அப்ப, நீ வருந்தற்க. அடிசில் வேலை நடக்கட்டும். உண்மையாக உன் மூதாதையர் நேரில் வந்து நீ அளிப்பனவற்றை யேற்றுக்கொள்வர்,' என்று கூறினர். சுசீலன் ஞான தேவருடைய அருள் மொழியைக்கேட்டு மகிழ்ந்து, அடிசில் வேலையை முடித்து ஞானதேவருக்குத் தெரிவித்தான்.

ஞானதேவர் உடனே ஒரு மந்திரத்தைக் கூறி, அட்ச தையைப் போட்டனர். அக்கணமே பிதுர்த் தேவர்கள் தங்களுடைய உண்மை வடிவுடன் நேரில் வந்து தோன்றினார்கள். சுசீலன் கழி மகிழ்வெய்தி அவர்களை வணங்கி, நானங்கலந்த நறுநீரினால் அவர்களுடைய திருவடிகளை யலம்பிப் பல்வகையி லுபசரித்து, அவர்களுக்கு அறுசுவை யுண்டியை யன்புட னிட்டனன். அவர்களு மகிழ் கூர்ந்து அதனை யுண்பா ராயினர். முன்பு சிரார்த்தத்திற்கு வர மறுத்த அந்தணர்கள், அப்பொழுது மறைவி லிருந்து அங்கு நிகழ்வனவற்றைப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். அவர்கள் வியப்புக் கிடமான அச் செயலினைக் கண்டு மிக வியந்து மற்றை மறையவர்களுக்குத் தெரிவித்தார்கள். பின்பு மறையவர்க ளெல்லோரும் சுசீலன் வீட்டின் பின்புற மிருந்து அங்கு நிகழ்வனவற்றைப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். பிதுர்க்கள் சுசீலன் தங்களுக் கிட்ட வுணவை இனிதுண்டு மகிழ்ந்து, சாந்து, மலர், அடைகாய் முதலியன ஏற்றுச் சுசீலனை வாழ்த்திச் சென்றார்கள்.

அவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த மறையவர்கள், 'ஆ! நமக்குப் பெரியோர்கள் தன்மையை அறிந்து கொள்ளு மறிவு சிறிது மில்லை. நாம் மூடர்களாகையால், ஞான தேவருடைய ஒப்பற்ற மாண்பினை யுணராமற் போனோம். ஞான தேவர் பெரியரிற் பெரியர். நிவர்த்தி தேவர், ஞானதேவர், சோபான தேவர் என்னு மூவரையும் மும்மூர்த்திக ளென்றே கூறுதல் வேண்டும். அந்தோ! நாம் இவர்களின் மேன்மையையறியாது இவர்களை இகழ்ந்து தீவினைக்குள்ளானோம். இவர்கள் மூவுலகினையுந் தூய்மை யாக்க வல்ல தூயர்கள். சுசீலன் இவர்கள் அருளைப் பெற்றுப் பெரும்பேறு பெற்றான். இவன் முற்பிறப்பிற் செய்த நல்வினையின் மிகுதியினால் இப்பிறப்பில் இப்பெரியோர்

களின் தண்ணிய அருளைப் பெற்று உயர்ந்தனன்,' என்று பல்வாறு புகழ்ந்து, அங்கு நிகழ்ந்தனவற்றை யெல்லாம் ஒரு கடிதத்திலெழுதி, அக்கடிதத்தை நிவர்த்தி தேவரிடங் கொடுத்தார்கள். உடனே நிவர்த்தி தேவர் முதலிய நால்வரும் முன் ஞான தேவர் திருவருளால் வேத மோதிய எருமையோடு தம் பதிக்குச் செல்லப் புறப்பட்டார்கள். சுசீலனும் மற்றை மறையவர்களும் ஒரு நாழிகைத் தூரம் அவர்களுடன் சென்று, அவர்களை வணங்கி, அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு, பைட்டினி புரத்திற்குத் திரும்பினார்கள்.

## 4. வேதமோதிய எருமை இறக்க அதற்குச் சமாதி கட்டுதல்

பிறகு ஞான தேவர் முதலிய நால்வரும் திருமகள் நாதன் திருநாமங்களைப் பாடிக்கொண்டு எருமையுடன்காலவ க்ஷேத்திரத்தை யடைந்து, பிரவா தீர்த்தத்திலே நீராடி, அப்பதியிற் சில நாட்கள் தங்கி இருந்தார்கள். அங்குத் தங்கியிருக்கையில் ஞானதேவர் யாவருமுணரும்படி பகவத் கீதைக்குப் புதிய வுரையொன்றெழுதினர்; பின்பு நிவர்த்தி தேவர் விருப்பத்தின்படி நாத்திகருடைய மனவிருளிரியத் தத்துவ ஞானக் களஞ்சியமான ஒரு நூலை யியற்றினர். பிறகு அந்நால்வரும் எருமையுடன் புறப்பட்டுச் செல்கையில், அயோமுக என்னுங் கிராமத்தில் அவ்வெருமை மரணமடைந்தது. ஞான தேவர், 'இதன் உயிர் நற்கதி பெறுக,' எனச் செய்வன செய்து, அதனைத் தக்கதோரிடத்திற் புதைத்து, அதற்கொரு சமாதி கட்டுவித்தனர். அச்சமாதி இப்பொழுதும் யாவருங் காண விளங்குகின்றது.

## 5. ஞான தேவர் முதலிய நால்வரையும் அளகாபுரியிலுள்ள மறையவர்கள் ஏற்றுபசரித்தல்

பிறகு ஞான தேவர் முதலிய நால்வரும் புறப்பட்டுச் சென்று அளகாபுரியை யடைந்தார்கள். அப்பதியிலுள்ள மறையவர்கள் அவர்கள் அங்கடைவதற்கு முன்னரே பைட்டின புரத்தில் ஞானதேவர் செய்தருளிய அரிய செயல்களை யெல்லாம் அறிந்திருந்தார்கள். ஆதலின், அவர்கள் தாமே எதிர்கொண்டு வந்து அந்நால்வரையு மழைத்துச் சென்று நன்குபசரித்தார்கள். நிவர்த்தி தேவர் பைட்டினி புரத்து மறையவர்கள் கொடுத்த கடிதத்தை அம்மறையவர்களில் முதியவராகிய ஒருவரிடங் கொடுத்தனர். அம்முதுமறையோர் அக்கடிதத்தை மற்றை மறையவர்களுக்குப் படித்துக் காட்டினர். எல்லா மறையவர்களும் அதனைக் கேட்டுக் களிகூர்ந்து, நிவர்த்தி தேவர் முதலிய நால்வரையும் புகழ்ந்து தம்முடன் இருத்தி, அவர்களுக்கு அறுசுவை யுண்டி யன்புட னளித்தார்கள். அந்நால்வரும் உணவருந்தியபின் திருமகள் நாதனுடைய கலியாண குணங்களாகிய பொருள்கள் நிறைந்த சீரிய கூரிய தீஞ்சொற் கீர்த்தனங்களைப் பாடினார்கள். அம்மறையவர்கள் அவற்றைக் கேட்டு உள்ளங் குளிர்ந்து, உவகை பூத்து, அந்நால்வரையும் நன்கு வாழ்த்தினார்கள். பிறகு அந்நால்வரும் அம்மறையவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு தம்மில்லஞ் சேர்ந்தனர்.

## 6. வீசோபா கேசன் ஞான தேவரின் சீடனாதல்

அப்பதியி லுள்ள அந்தணர்கள் அந்நால்வரையும் அங்ஙனம் போற்றிவந்தார்க ளெனினும், வீசோபாகேசன் என்னும் மறையவன் மாத்திரம் அவர்களை மதியாமல், அவர்களைப்பற்றிக் குறை கூறிக்கொண் டிருந்தான். அங்ஙனமிருக்கையில் ஒரு நாள் தீபாவளித் திருநாள் வந்தது.

அன்று நிவர்த்திதேவர் முக்தாபாயை நோக்கி, 'அன்புள்ள தங்கையே, இன்று பண்டிகை நாளாதலின், சிலவகையான பணியாரங்களைச் செய்க,' என்று கூறினர். அவ்வம்மையார் அதனைக்கேட்டு, 'நல்லது,' என்று கூறிப் பண்ணிகாரங்கள் செய்தற்குரிய பொருள்களை யெல்லாம் சேமித்துப் புதுப் பாண்டங்களை வாங்குதற் பொருட்டுக் குயவன் வீடு நோக்கிச் சென்றனர். வழியில் வீசோபாகேசன் அவ்வம்மையாரைக்கண்டு சினந்து, 'அடீ! குலங்கெட்டவன் மகளே! நீ எதற்காக எங்குச் செல்கின்றாய்?' என்று அதட்டிக் கேட்டான். அவ்வம்மையார் அவன் மொழிகளைக் கேட்டு நடுநடுங்கி அவனைப் பார்த்து, 'அருமறை யுணர்ந்த பெரியீர், புதுப்பாண்டங்கள் வாங்குவதற்காக் குயவன் வீட்டிற்குச் செல்கின்றேன்,' என்றனர். வீசோபா கேசன் அதனைக்கேட்டு, அவ்வம்மையாரை நோக்கி, 'குலங்கெட்டவுங்களுக்குப் புதுப்பாண்டமும் வேண்டுமோ? யாரேனும் ஆண்டு கழித்துத் தெருவி லெறிந்த பழம் பாண்டங்களை நீங்கள் எடுத்துக்கொண்டால் உங்கள் தகுதி கெட்டுப் போகுமோ?' என்றான். அவ்வம்மையார் அவனை நோக்கி, 'பெரியீர், உடல், உடை, உணவு ஆகிய இவற்றைத் தூய்மையாக்கிக்கொள்ள வேண்டுமென்பது மக்கள் யாவருக்கும் பொதுவாகிய முறை யல்லவோ? அவ்வகையில் குலமுடையாருக் கொருமுறையும், குலங் கெட்டவர்களுக்கு ஒரு முறையும் கூறுதல் ஏற்புடையதாகுமோ? சில பறவைகளும் விலங்குகளும்கூடத் தங்கள் உடலையும் உணவையும் தூயன வாக்கிக்கொள்கின்றன வெனில், மனிதர்கள் யாவரும் அவற்றைத் தூய்மை யாக்கிக்கொள்ளுவதில் தடையென்ன இருக்கின்றது?' என்றார். வீசோபா கேசன் அவ்வம்மையாரின் மொழிகளைக் கேட்டு வெகுண்டு, 'அடீ பேதாய்! புலிக்குப் புல்வாய் புத்தி புகட்டுவதுபோல

எனக்கு நீ புத்தி புகட்டுகின்றனையோ? உனக்கென்னடா இவ்வளவு செருக்கு?' என்று அதட்டிக் கூறி, அவ்வம்மையாரைத் தாடையிற் புடைத்துவிட்டு, விரைந்து குயவன் வீட்டுக்குச் சென்று, அவனை நோக்கி, 'அடே பயலே! நீ எனக்குக் கடன் கொடுக்கவேண்டுமென்பது ஞாபகத்திலிருக்கின்றதல்லவா?' என்றான்.

அது கேட்ட குயவன் அஞ்சி, வீசோபா கேசனை நோக்கி, 'மறையவரே, நேற்றுத்தானே வருகின்ற மாதத்திலிருந்து தங்கள் கடனைச் சிறிது சிறிதாகக் கொடுத்துவிடுகின்றேனென தங்களை வணங்கிக் கேட்டுக்கொண்டேன்! அப்படியிருக்கத் தாங்கள் இன்று வந்து இவ்வாறு கோபத்துடன் கூறுதற்குக் காரணம் யாதோ தெரியவில்லையே! தாங்கள் அருள்கூர்ந்து அதனைத் தெரிவித்தருள வேண்டும்,' என்றான். வீசோபாகேசன் குயவனை நோக்கி, 'அடே! இன்று நான் உனக்கொரு கட்டளை யிடப்போகின்றேன். நீ அதன்படி நடத்தல்வேண்டும். இல்லாவிடின், என் கடனுக்காக உன்மேல் வழக்குத் தொடுத்து, உன் குடும்பத்தை யடியோடு நாசஞ் செய்துவிடுவேன். என்னுடைய ஆற்றல் எத்தகையது என்பது உனக்கு நன்றாய்த் தெரியுமல்லவா?' என்றான்.

குயவன், 'மறையவரே, தங்கள் கட்டளையாது?' என, வீசோபாகேசன், 'அது, நான் சொல்லும் ஒரு மாதுக்கு நீ பாண்டங்களைக் கொடுக்கக்கூடாது என்பதே,' என்றான். குயவன், 'மறையவரே, நான் ஒருவருக்குக் கொடுத்து, ஒருவருக்குக் கொடாமலிருந்தால், என் வியாபாரத்திற்குத் தடைநேரிடுமே! தடை நேர்ந்தால் நான் எப்படித் தங்கள் கடனைக் கொடுக்க முடியும்?' என்றான். வீசோபா கேசன், 'அதனால் உன் வியாபாரத்திற்குத் தடை நேராது. ஆதலின், நான் சொன்னபடி செய்,' என்றான். குயவன், 'அப்

படியானல் நீர் கூறும் அம்மாது யார்?' என்றான். வீசோபா கேசன், 'அம்மது நிவர்த்தி தேவன், ஞான தேவன், சோபான தேவன் என்னு மூவரின் தங்கையாகிய முக்தா பாய் என்பவளே,' என்றான். குயவன், 'மறைய வரே, நிவர்த்தி தேவர் முதலிய மூவரும் சிறந்த ஞானிய ரல்லரோ? அவருள்ளும் ஞானதேவர் பிறரால் செய்தற் கரிய பல அற்புதச் செயல்களைச் செய்த பெரியாரென்பது யாவரும் நன்கறிந்த செய்தியன்றோ? அத்தகையவர்களின் தங்கையாகிய முக்தாபாய்க்கு நான் பாண்டங்களைத் தரா விடின் அப்பெரியார்களுக்கு என்பால் சினமுண்டாகுமே! உண்டானல், எனக்கு இம்மையினும் மறுமையினுந் தீமை யுண்டாகுமே! பெரியோர்களுக்கு வெகுளி யுண் டானல், அதனைத் தணிக்க யாரால் இயலும்? கடல் கொதிப்புற்றால் அதனை எந்த நீரைக்கொண் டாற்றுவது? கொடிது! கொடிது!! நீர் சொல்லுவது மிகவுங் கொடிது!!! அதற்கு யான் ஒரு போதும் சம்மதியேன்,' என்றான்.

அது கேட்ட வீசோபா கேசன், 'அடா பேதாய்! அவர்கள் பகல் வேடக்காரர்கள் என்பதை யறியாமல் நீ இப்படிப் பிதற்றுகின்றாய். என்னைப்போலவே வேறு சில ரும் அவர்களை உயர்ந்த ஞானிகளென மதித்திருக்கின்றனர். இவற்றிற்கெல்லாங் காரணம், ஞான தேவன் செயற்கரிய அற்புதச் செயல்களைச் செய்தனன் என யாரோ கட்டி விட்ட கற்பனைச் செய்திகளே யாகும். நீ சொல்லுவது போல அவர்கள் சிறந்த பெரியோர்களா யிருப்பின், அவர் களை எப்பொழுதும் நிந்தித்துவரும் எனக்கேன் ஒரு தீமையு முண்டாக வில்லை? நீ சொல்லுஞ் சொற்கள் எல்லாம் என் னிடம் பயன்படா. நீயும் உன்னைப்போன்றார் சிலரும் மூடராகையினல், மறை முதலிய நூற்களை நன்றாய்க் கற் றுக் குலத்துக்குரிய ஒழுக்கத்திற் சிறிதுந் தவறாதிருக்கின்ற

என்னை மதியாமல், குலங் கெட்டவர்களாகிய அவர்களை மதிக்கின்றீர்கள். நீ என் சொல்லை மீறி நடப்பாயானால், அப்பொழுதே அழிந்தாய்! இதனை நீ உன் மனதில் உறுதியாக வைத்துக்கொள்,' என்றான்.

குயவன், 'இத்தியவனுடைய வெகுளிக்கு இலக்காவதினும் அப்பெரியோர்களின் கோபத்திற்கு இலக்காவதே மேன்மையாகும். நான் இவனிடம் கடன் பட்டமையினாலன்றோ இவன் சொன்னபடி நடக்க வேண்டியவனானேன்? இளமையில் வறுமையும், முதுமையில் மக்களை யிழத்தலும், அயலவர்களிடங் கடன் படுதலும் மிக்க துன்பந் தருவனவாகும்,' என்று தனக்குள் எண்ணிக்கொண்டு, 'மறையவரே, நீர் என்மீது முனிவுகொள்ள வேண்டா. நான் உம் விருப்பப்படியே செய்கின்றேன்,' என்று கூறி, விசோபாகேசனை யனுப்பிவிட்டான்.

பிறகு முக்தாபாய் அம்மையார் குயவனிடம் சென்று தமக்கு வேண்டிய பாண்டங்களைக் கேட்டனர். குயவன், 'அம்மா, உனக்கு நான் பாண்டங்களைத் தரமாட்டேன். அதற்காக நீ என்மீது முனிவுகொள்ளாதே; என் தீவினையின்மீது முனிவுகொள்,' என்று வாடிய முகத்துடன் கூறினான். முக்தாபாய் அம்மையார், குயவன் அங்ஙனங் கூறியதற்கு விசோபாகேசனே காரணமென்பதை நன்குணர்ந்துகொண்டு, குயவனை நோக்கி, 'குலாலரே, உம்முடைய பொருளை நீர் கொடுக்க விரும்பினால் கொடுக்கலாம்; இன்றேல் கொடாம லிருக்கலாம். உம்முடைய பொருளை உம்முடைய விழைவின்படி செய்ய உமக்குரிமையுண்டு. அதன் பொருட்டு யான் உம்மிடம் முனிவு கொள்ளேன்; முனிவு கொள்ளின், அறிவற்றவளே யாவேன். நீர் இதன் பொருட்டு அஞ்சாதீர்,' என்று இனிமையாகக் கூறி, வீட்டிற்குத் திரும்பி வந்து, தமக்கு நேர்ந்த அவமதிப்பினை

யெண்ணி மனம் வருந்தினர். அப்போது அவ்வம்மையாரின் தாமரை யன்ன விழிகளினின்று முத்தின் கோவை யொப்ப நீர் வடிந்தது. அப்போது தம்மில்லத்திற்கு வந்த ஞானதேவர் முக்தாபாய் யம்மையாரது முகவாட்டத்தையும், அவர் கண்களினின்று நீர் வடிதலையுங் கண்டு, மனம் வருந்தி, அருகிற் சென்று, அவ்வம்மையாரின் கண்ணீரைத் துடைத்து, 'அன்புடைய தங்காய், நீ இங்ஙனம் வருந்துதற்குக் காரணம் யாது?' என்று கேட்டனர். அவ்வம்மையார் நிகழ்ந்த செய்தியைக் கூறினர். ஞான தேவர் அவ்வம்மையாரை நோக்கி, 'அறிவுடைய தங்காய், முன்னை நல்வினைப் பயனால் வரும் நன்மையை விரும்பி ஏற்பது போலவே, தீவினைப் பயனால் வருந் தீமையையும் விரும்பி ஏற்றல் வேண்டும். அதுவே அறிவுடையவர்களின் செய்கையாகும். உன்போன்றவர்கள் அதற்காக வருந்துதல் தகுதியன்று. நீ செய்ய எண்ணிய பண்ணிகாரங்களை என் முதுகிற் செய்க.' என்று கூறி, அவ்வம்மையாரைத் தேற்றித் தமது யோகவன்மையினால் வயிற்றுக்கனலைப் பெருக்கி, வாயில் தழல் வீசக் கண் சிவந்து அவற்றினின்று தீப்பொறி பறக்கக் குனிந்துகொண்டு, தம்முடைய முதுகை நன்றாய்க் காய்ந்த இருப்புத் தகட்டினையொப்பச் செய்துகொண்டார். முக்தாபாய் அம்மையார் தாம் செய்யவேண்டிய பண்ணிகாரங்களைத் தம்முடைய தமையனாராகிய ஞானதேவருடைய கட்டளையின்படி அவருடைய முதுகிற் செய்துமுடித்தனர்.

அப்போது வெளியிற் சென்றிருந்த நிவர்த்தி தேவரும் சோபான தேவரும் வீட்டிற்கு வந்தார்கள். உடனே, அனைவருங் கூடி அப்பண்ணிகாரங்களைத் திருமகள் நாதனுக்கு ஆராதித்துப் பிறகு உண்டார்கள். இவற்றையெல்லாம் மறைவிலிருந்து பார்த்துக்கொண் டிருந்த விசோபாகேசன் வியப்பும் அச்சமும் ஒருங்கெய்தி, 'ஆகா! நான்

எவ்வளவு தியவன்! இப்புண்ணிய சிலர்களின் மேன்மையை ஆய்ந்தறியாமல் இவர்களை யவமதித்து வந்ததுமன்றி, இவ் வம்மையைத் தாடையிற் புடைத்துக் குயவன் இவ்வம்மைக் குப் பாண்டங்களைக் கொடாம லிருக்கவுஞ் செய்தேனே! இத்திவினைகள் நான் எங்குச் சென்றால் என்னைவிட் டொழி யும்? முற்காலத்திற் பரம பாகவதராகிய அம்பரிஷருக்குத் தீமைபுரிந்த துருவாச முனிவர் எங்குச் சென்றும் அடைக் கலம் பெறுமல், அம்பரீஷரையே யடைந்து, அக்குற்றத்தி னின்றுந் தப்பினரல்லவா? அவரைப்போலவே நான் இப் புண்ணிய சிலர்களையே யடைக்கலமா யடைந்து, என் தீவினைகளைப் போக்கிக்கொள்ளக் கடவேன்,' என்று தனக் குள் எண்ணிக்கொண்டு, உட்சென்று, அவர்களுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கிப் பின்னர் ஞான தேவ ருடைய மிச்சிலை யெடுத்துண்டு, அவரை நோக்கி, 'பெரி யருட் பெரியிர், அடியேன் அறியாமையின லுண்டான செருக்கினல் உங்களுக்குப் பெரிதும் தீமை புரிந்துவிட் டேன். அடியேன் வேறெங்குச் சென்றாலும் என் தீவினை திராது. அடியேனைத் தேவரீரே ஆட்கொண்டருளுதல் வேண்டும்,' என்று நிலத்தில் வீழ்ந்து, அவர் திருவடிகளைப் பற்றிக்கொண்டான்.

ஞான தேவர் அவன் கருத்தை யுணர்ந்து, அவனை யெழுப்பி, அவன் தலையின்மீது தம் திருக்கரத்தை வைத்து அருள்புரிந்தார். விசோபா கேசன் அதனல் அறியாமை யொழிந்து, உண்மைப் பொருளுணர்ச்சியைப் பெற்றுத் திருமகள் நாதனிடத்தும் அடியவர்களிடத்தும் நீங்காத அன்புடையவனகவும், ஞானதேவருடைய அன்பிற் குரிய சீடனகவும், நற்குண நற்செய்கைகளை யுடையனகவும் விளங்கிச் சிறந்த ஞானியென யாவராலுங் கொண்டாடப் பட்டு வாழ்ந்து வந்தான்.

## 7. ஞான தேவருக்குச் சாரங்க தேவர் சீடராதல்

பீமாநதிக் கரையிலுள்ள ஓர் ஊரில் விட்டோபா என்னும் பெயரையுடைய பார்ப்பனரொருவர் வசித்திருந்தார். அவருடைய மனைவியின் பெயர் உருக்குமிணி என்பது. அவ்விருவரும் நற்குணங்கள்யாவும் ஒருங்கமையப் பெற்றவர். அவர்களுக்கு மைந்தர் ஒருவர் தோன்றினர். அப்புதல்வர் மிக்க அழகுடையவர். அவருடைய பெற்றோர் அவரழகைக்கண்டு மிகவு மகிழ்ந்து, பெரியோர்களின் கட்டளைப்படி அவருக்குச் சாரங்க தேவர் எனப் பெயரிட்டுத் தம் கண்களின் மணியெனக் கொண்டு, போற்றி வளர்த்தனர். அவர்கள், கண்ணனது குழவிப் பருவத்தின் திருவிளையாடல்களைக் கண்டு களித்த நந்தகோபரையும், யசோதைப் பிராட்டியாரையும் போலச் சாரங்க தேவருடைய குழவிப் பருவத்தின் திருவிளையாடல்களைக் கண்டு களித்தார்கள். சாரங்கதேவருடைய கறை யற்ற மதியன்ன எழில் முகத்தைக் கண்டு அவ்வூரார் அனைவரும் அவர்பால் மிக்க அன்பு கொண்டனர்.

சாரங்க தேவர் கல்வி கற்றற்குரிய பருவ மடைந்து, கல்வி பயிலத் தொடங்கி, வேத முதலிய எல்லாக் கலைகளையும், யோக நூற்களையும், அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் எட்டுச் சித்திகளையும் நன்குணர்ந்து, யாவராலும் கல்விக் கடலென மதிக்கப்பெற்று விளங்கினர். அவர் வாயினல் எது கூறினும் அது தப்பாமற் பலித்து வந்தது. அவர் யோக வன்மையால் ஆயிரத்து நானூறு ஆண்டுகள் இவ்வுலகில் இனிது வாழ்ந்திருந்தனர் என்பர்.

அவர் தாபிந்தி யாற்றின் கரையில் மடமொன்று கட்டி, அதிலுறைந்து, நாடோறும் பண்டரி புரத்திற்குச் சென்று,

பண்டரி நாதனைப் பல கீர்த்தனைகள் பாடித் துதித்துக் கொண்டிருந்தார். அவருக்கு ஆயிரத்து நானூறு மாணவர்கள் இருந்தார்கள். அவர் தமது யோக வன்மையால் அம் மாணவர்களுடன் வானத்தில் உலாவிக்கொண் டிருப்பார்.

அவர் அத்தகைய பேராற்றல் வாய்ந்தவரா யிருந்தும் அவர் மனத்தில் ஒரு குறை குடிகொண்டிருந்தது. அக்குறை அதுகாறும் அவருக்கு ஒரு ஞானசாரியர் கிடைத்திலாமையே. அதை எண்ணி அவர் மனம் மிகவும் வருந்திக் கொண் டிருந்தது.

ஒரு நாள் அவர் ஓரிடத்தில் தனியாக இருந்து, 'என் வல்லமைக்குத் தக்க நற்குரவர் கிடைக்கவில்லையே! அத் தகைய மேன்மை வாய்ந்த குரவர் எங்கிருக்கின்றனரோ, தெரியவில்லையே! "பொன்னானது நெருப்பின் சம்பந்தத்தைப் பெற்றிருந்தும், வெண்காரத்தின் சம்பந்தத்தைப் பெறாவிடின், உருகாததுபோல, ஒருவன் எவ்வளவு சிறந்த அறிவுடையவனாயிருப்பினும், ஒரு மேதக்க குரவரின் அருள் பெறாவிடின், மேன்மையடைதலிலன்," என நூற்கள் கூறுகின்றனவே! ஒப்பற்ற தீவினையாளனாகிய சத்திர பந்துவும், மிக்க நல்வினைகளைப் புரிந்தவனாகிய புண்டரிகனும், நல்லியற் குரவர்களின் சார்பினா லன்றோ வீடடைந்தனர்? நான் இவ்வளவுகாலம் பிழைத்திருந்தும், கலையறிவிற் சிறந்தவனாயிருந்தும், நல்லருட் குரவரின் சார்பைப் பெறாமையினால், என் பிறவி வீணாகின்றதே!' என்றெண்ணிப் பிறகு, 'இதைக் குறித்து ஞான தேவர்க்கு ஒரு கடிதம் வரைவோம்,' எனத் தமக்குள் தீர்மானித்துக்கொண்டனர்.

அப்போது ஞான தேவர் பண்டரி நாதன் சந்நிதியையடைந்து, பண்டரி நாதனைப் பணிந்து, 'சுவாமி, அடியேன் அளகா புரிக்குச் சென்று வருகின்றேன்,' என்று

அப்பெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு, அளகாபுரியை யடைந்து, சித்தேசுவரரை யணுகி, அவர்பால் தங்கி யிருந்தனர்.

சாரங்க தேவர் தாம் முன் எண்ணியபடி ஞான தேவருக்குத் திருமுகம் ஒன்று எழுதத் தொடங்கி, ஏடு எழுத்தாணிகளைக் கையி லேந்தி, 'அவருக்குச் சிரஞ்சீவி ஞானதேவ் என்றெழுதலாமா? ஒருகால் நாம் அவரை நமக்குக் குரவராகக்கொள்ள நேரின், அது குற்றமாக முடியு மன்றோ? தீர்த்த சொரூபி என்றெழுதலாமா? அவர் நம் மினும் இளையவராக இருத்தலின், அதுவும் மரியாதையாகத் தோற்றவில்லையே! வேறு எவ்விதம் நாம் அவரை முன்னிலைப்படுத்தி யெழுதுவது?' என்று யோசித்தனர். அவருக்கு ஒன்றுந் தோன்றவில்லை. அதனால், அவர் அவ் வெற்றேட்டைச் சுருட்டித் தம்முடைய மாணவர்களுள் ஒருவர் கையிற் கொடுத்து, 'ஞான தேவர் அளகா புரியில் இருக்கின்றனர். இதனைக் கொண்டுபோய் அவர் கையிற் கொடு,' என்று சொல்லி, அவரை யனுப்பினர்.

அம்மாணவர் அவ்வாறே அளகா புரிக்குச் சென்று, ஞான தேவரை வணங்கி நின்றனர். ஞானதேவர் அம்மாணவரை வாழ்த்தி, 'இளைஞரே, உம்மை யிங்கனுப்பியவர் சாரங்க தேவர் தாமே?' என்றனர். 'ஆம்,' என்றனர் அம்மாணவர். பிறகு ஞானதேவர் அம்மாணவர் கொணர்ந்த ஏட்டை வாங்கிப் பிரித்துப் பார்த்து, 'ஓகோ! இவ்வளவு காலமாகியும் சாரங்க தேவர் பிழைப்பு வெற்றேடாகவே இருக்கிறது. சாரங்க தேவர் இத்துணைக் காலம் பிழைத்திருந்தும், பலகலைகளைக் கற்றுப் பலவகையாகிய வல்லமைகளை உடையவராகியும், ஒரு நல்லருட் குரவரை நண்ணித் தூயராகாமல், வீணராயினர்,' என்று சொல்லிப் பிறகு சாரங்கதேவருக்குத் தாம் ஒரு கடிதம் எழுதத் தொடங்கி,

அதில், 'எல்லா உயிர்கட்கும் அறிவு ஒரு தன்மையின தாகவே இருக்கின்றது. அது பெரிது மன்று; சிறிது மன்று. ஆணு மன்று; பெண்ணுமன்று; அலியுமன்று. ஒருவன் யோகமுயற்சியால் உயிரை அற்புதப் பொரு ளெனக் காண்கின்றான். ஒருவன் ஆன்மா அற்புதப் பொரு ளென்று கூறுகின்றான். அங்ஙனம் ஒருவன் சொல்ல, ஒரு வன் கேட்கின்றான். இங்ஙனம் கண்டும், சொல்லியும், கேட்டும் உயிரின் உண்மை யிருப்பை ஒருவனும் உணர்ந் திலன். இங்ஙனம் கண்ணனே பகவற் கீதையில் கூறி யருளினன். சாரங்க தேவரே, இதனை நீர் உணர்வீராக,' என்று எழுதி, அக்கடிதத்தைச் சாரங்க தேவருடைய மாணவரிடங் கொடுத்து, அவரை யனுப்பினர்.

அம்மாணவர் சாரங்க தேவரிடஞ் சென்று அக்கடி தத்தை அவரிடங் கொடுத்தனர். சாரங்க தேவர் அதனைப் பார்த்து, 'ஞானச் சுடர்விளக்காய் விளங்கும் ஞான தேவர் பாற் செல்லவேண்டும்,' என்று கருதித் தமது யோக வன்மையால் ஒரு பெரிய புலியை வருவித்து, அதன்மேல் இவர்ந்து ஒரு கரிய அரவத்தினைக் கசைபாகப் பற்றிக் கொண்டு, தம்முடைய மாணவர்கள் ஆயிரத்து நானூற்று வரும் தம்மைச் சூழ்ந்து வரப் புறப்பட்டுச் சென்றனர். சாரங்க தேவர் அளகாபுரியை அடைந்தபோது அங்குள்ள மாந்தர்கள் அவரது அருந்திறற் செயலைக் கண்டு, மிகவும் வியப்புற்றார்கள். அவர்களிற் சிலர் சென்று, அப்போது ஒரு குட்டிச்சுவரின்மீது உட்கார்ந்திருந்த ஞானதேவருக்கு அதனை யறிவித்தார்கள். ஞானதேவர் அதனைக் கேட்டு, அங்ஙனம் வருபவர் சாரங்க தேவரே என்பதை யூகித்து உணர்ந்து, தாம் உட்கார்ந்திருந்த சுவரை, 'ஓ குட்டிச் சுவரே, என்னைக் காண்பதற்குச் சாரங்க தேவர் வருகின்ற னர். நான் அவரை எதிர்கொண்டுபோய் அழைக்கவேண்

டும். ஆதலின், நீ என்னைச் சுமந்துகொண்டு போ,' என்றனர். உடனே அந்தக் குட்டிச்சுவர் அசைந்து சென்றது.

அந்நகரிலுள்ள மாந்தர்கள் அதனைக் கண்டு, அளவிற் கடங்காத வியப்பும் களிப்பும் அடைந்து, ஞானதேவரைப் பலவாறு புகழலானார்கள். சாரங்கதேவர் அதனைக் கேள்வியுற்று, 'ஆ! நான் உயிருள்ள பொருளாகிய புலியை வாகனமாகக்கொண்டு, அதனை நடத்தி வந்தேன். இஃது எல்லாராலுஞ் செய்தற்கரிய செயலாயினும், சிலராற் செய்தற்கியன்ற செயலே. ஞானதேவருடைய செயலோ பிறரால் செய்தற்கரிய செயலாகும். அவரே எனக்குத் தக்க குரவராவர். இனி நான் அவரை யடைந்து, தூயனாகக்கடவேன்,' என்று தமக்குள் உறுதி கொண்டு, புலியினின்றிறங்கி, ஞான தேவரிடம் நடந்து சென்று, அவரைக் கண்டவுடன் அடியற்ற பனைபோல் அவரடியில் விழுந்து வணங்கி நின்றனர்.

ஞான தேவர் சாரங்கதேவரை யழைத்துக்கொண்டு, அங்கு அருகிலிருந்ததொரு ஆலமரத்தினடியில் அவருடன் வீற்றிருந்து, அவருக்குத் திருமந்திரத்தை யுபதேசித்தருளினர். பிறகு அவர் சாரங்க தேவருடன் தம்முடைய மனைக்குச் சென்றனர். அங்கு ஞானதேவருடைய தங்கையாராகிய முக்தாபாய் அம்மையார் இருத்தலைச் சாரங்கதேவர் கண்டு, உடனே உட்செல்ல மனமின்றித் தியங்கினார். அதனை யுணர்ந்த அவ்வம்மையார் சாரங்கதேவரை நோக்கி, 'நல்லீர், நீர் ஞான தேவருடைய திருவருளைப் பெற்றவராகியும், உமக்கு இன்னம் உண்மைப் பொருளுணர்ச்சியுண்டாகாமையை எண்ணி நான் மிகவும் வருந்துகின்றேன் "ஆன்மா ஆணுமன்று; பெண்ணுமன்று," என்னுந் தெளிவு உமக்கு இன்னம் உண்டாகவில்லையே! இனியேனும் ஆன்

மாவின் உண்மை இயல்பை யுணர்ந்து, தெளிவான மன நிலையை அடைவீராக,' என்றனர்.

சாரங்க தேவர் அந்த உறுதி மொழிகளைக் கேட்டு, முக்தா பாயை வணங்கி, 'தாயே, ஞான தேவர் எனக்கருளிய ஞானத்தீ, உன் உறுதி மொழிகளாகிய காற்றினால் வளர்ந்தோங்கியது. அதனால், எனது அஞ்ஞானமாகிய காடு பற்றி யெரிந்து, நீறாயிற்று; எனது பிறவிக் கடல் வற்றியது; யான் பெற்ற இப்பிறவி பயனுடையதாயிற்று. இனி இருள்சேர் இருவினைகளும் என்னைச்சேரா. வேண்டுதல் வேண்டாமை யிலாதானாகிய பண்டரி நாதன் திருவடிகள் என்னுயிர்க் குறைவிடமாகும். யான் பேரின்பப் பேற்றைப் பெற்றவனானேன்,' என்று கூறினார்.

ஞான தேவர் சாரங்க தேவருடைய மொழிகளைக் கேட்டு, மகிழ்ச்சி மிகுந்து, தம்முடைய திருக்கரத்தைச் சாரங்க தேவருடைய முடியில் வைத்தருளினர். உடனே, சாரங்க தேவருடைய அறிவு, நிரம்பிய ஞானச் சுடர்விளக்காய் விளங்கிற்று.

சாரங்க தேவர் ஞான தேவரை வணங்கி, 'அடியேன் தங்கள் திருவருளால் உய்ந்தேன். தங்கள் திருவருளால் நான்பெற்ற ஞானம் இனிச் சிறந்தோங்கும்,' என்று கூறினர். பிறகு சாரங்க தேவர் தம்முடைய அருட்குரவராகிய ஞான தேவருடைய மேன்மைகளைப் பலரறியக் கூறிக்கொண்டு, பண்டரி நாதனுடைய திருவடிகளைத் தம்முடைய மனமாகிய வாடாத மலரின்கண் நாளும் மிளிர்ந்து விளங்க அமைத்து வாழ்வாராயினர்.

முற்றிற்று.

---

Printed by P. R. Rama Iyar & Co., Madras.

## ரா. லோகநாதம் பிள்ளை அண்டு கம்பெனி
### பிரசுரித்த தமிழ்ப் பிரசுரங்கள்

---

* துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டவை

### * ஆழ்வார்கள் சரித்திரம்

ஸ்ரீ மகா விஷ்ணுவை வழிபட்டு உலகத்தினை ஆட்கொண்ட பன்னிரண்டு ஆழ்வார்களின் சரித்திரங்கள் அடங்கியது. இது படிக்குந் தோறும் படிப்பவர் மனதைக் கடவுள் பக்தியில் ஆழ்த்தத் தக்கது. நற்குணங்களும், நற்செய்கைகளும், கடவுளை வழிபடும் அன்பும் உண்டாக்கக் கூடியது. ஒப்பிலா அற்புதர்களின் குணங்களைத் தெளிவாய் எடுத்துக் காட்டுவது. இந்நூல் கலாசாலையில் நான்காம் ஐந்தாம் பாரங்களிற் கற்கும் மாணவர்க்கு மிகவும் ஏற்றது. விலை அணு **8.**

### * நால்வர் சரித்திரம்

சைவசமயத்தினை நிலைநாட்டின திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய நான்கு தொண்டர்களின் சரித்திரங்களை நன்ருக விளக்கிக் காட்டுவது. ஒவ்வொருவரும் படித்தறியத் தக்கது. சிறந்த நடையில் எழுதப் பெற்றது. படிக்குந் தோறும் நல்லொழுக்கம் உண்டாக்கத் தக்கது. தெய்வ பக்தியை எளிதிற் புகட்டுவது. இந்நூல் கலாசாலையில் நான்காம் ஐந்தாம் பாரங்களிற் கற்கும் மாணவர்க்கு ஏற்றது. விலை அணு **8.**

### * முகல் மன்னர் வரலாறு (முற்பகுதி)

இந்தியாவில் அரசாண்ட முதல் மூன்று முகலாய அரசர்களின் ஜீவிய சரித்திரங்கள் அடங்கியது. இந்தியா அவர்கள் காலத்தில் என்ன நிலைமையில் இருந்தது என்பதை நன்ருக விளக்கப்பட்டு இருக்கிறது. அவ்வரசர்களின் சரித்திரங்களை இந்நூலின்கண் அழகொழுகுந் தெள்ளிய தமிழ்நடையில் காணலாகும். இந்நூல் கலாசாலையில் நான்காம் ஐந்தாம் பாரங்களிற் கற்கும் மாணவர்க்கு மிகவும் ஏற்றது. விலை அணு **10.**

### * பத்தினிப் பெண்டிர்

இதில், அநசூயை, சுலோசனை இவ்விரு பத்தினிகளின் சரிதை அடங்கி யிருக்கிறது. இஃது மூன்ருவது, நான்காவது பாரம் கற்கும் மாணவர்க்கு மிகவும் பயன்படும். விலை அணு **12.**

## முகல் மன்னர் வரலாறு (பிற்பகுதி)

இந்தியாவில் அரசாண்ட கடைமூன்று முகலாய அரசர்களின் ஜீவிய சரித்திரங்கள் அடங்கியது. இவ்வரிய நூலை மாணவர்கள் விரும்பி படிக்கத் தக்க மிக இனிய நடையிற் எழுதப்பட்டிருக்கின்றது. இந்நூல் கலாசாலையில் நான்காம் ஐந்தாம் பாரங்களில் கற்கும் மாணவர்க்கு மிகவும் ஏற்றது. விலை அணா **10.**

## முப்பெருங் காப்பியக் கதைகள்

சங்க இலக்கியத்தில் மிகப்பேர் பெற்றவையாகிய முப்பெருங் காப்பியங்களின் கதைகளை எளிய இனிய தமிழ் நடையில் தமிழ் மாணவர்களுக்குப் பெரிதும் பயன் படுமாறு எழுத்துப் பிழைகள் இலக்கணப் பிழைகள் இன்றி செவ்விதாய் எழுதப்பட்டு இருக்கின்றது. இந்நூல் கலாசாலையில் நான்காம் ஐந்தாம் பாரங்களிற் கற்கும் மாணவர்க்கு மிகவும் ஏற்றது. விலை அணா **10.**

## பால பக்தர்கள்

இதில், அதி பால்யத்தில் கடவுளை வழிபட்டு முக்தி யடைந்த பிரகலாதன், மார்க்கண்டேயர், துருவன், விசாரசர்மர் என்ற இந்நால்வர் சரித்திரங்கள் பக்தி சுவை ததும்புமாறு அதி விமரிசையாக எழுதப்பட்டு இருக்கின்றன. அழகான படங்கள் பல சேர்க்கப்பட் டிருக்கின்றன. இஃது இரண்டாவது மூன்றாவது பாரத்தில் கற்கும் மாணவர்க்குப் பெரிதும் பயன்படக்கூடியது.

விலை அணா **10.**

## வள்ளல்களின் வரலாறு

வரையாது கொடுத்து வறுமையுற்ற வள்ளல்கள் பல நிறைந்தது நமது இந்தியநாடு. நமது புராண இதிஹாசங்களிலும், கன்ன பரம்பரையிலும் சரித்திரத்திலும், கொடைமட மிகுந்த வள்ளல்களின் வரலாறுகள் மல்கிக் கிடக்கின்றன. அவர்களில் ஆரியருள் இருவரும் (அரிச்சந்திரனும், கர்ணனும்) தமிழருள் இருவரும் (பாரியும், குமணனும்) மிக்க கியாதி பெற்றவர்களாவர். வாய்மை வன்மையும் குன்றிய இந்நாட்களில் இத்தகைய நூல்களே அவசியமாகும். மாணவர்க்கும் மற்றையோர்க்கும் உதவுமாறு எழுதிய இந்நூல் இனிய நடையில் தெள்ளிய சொற்களோடு இலங்குகின்றது. நான்காம் ஐந்தாம் பாரத்தில் கற்கும் மாணவர்க்குப் பெரிதும் பயன்படக் கூடியது. விலை அணா **10.**

## சதி அநசூயை

கற்பரசிகளில் சிரோரத்தினமெனத் தகுந்த கீர்த்திபடைத்த அத்திரி மகரிஷியின் பத்தினியாயிருந்த அநசூயையின் சரித்திரத்தை நயம்பட உரைப்பது. அம்மாது தன் கற்பின் சக்தியால் மும்மூர்த்திகளையும் குழவிகளாக்கி மறுபடியும் அவர்களை அவரவர் பத்தினிகளின் வேண்டுகோளுக்கிரங்கி முன்னுரு வெய்தும்படி செய்த செய்தியைக் கரதலா கமலம்போல் விளக்கிக் காட்டுவது. இஃது மூன்றுவது நான்காவது பாரம் கற்கும் மாணவர்க்குப் பெரிதும் பயன்படும். விலை அணு 8.

## அநுமத் விஜயம்

அன்பிற் பெரியராய்த் திகழ்ந்து புலவர் முதல் பாமரர் ஈருக யாவரும் தெரிந்து போற்றும் தன்மை வாய்ந்துள்ள ஸ்ரீராம தூதராகிய பெரியோரது திவ்ய சரிதத்தை இந்நூலின் கண் பரக்கக் காணலாம். இது இனிய தமிழ் நடையில் இளைஞர் உள்ளம் கவரும் வண்ணம் அழகுபெற எழுதப்பட் டிருக்கிறது. இஃது மூன்றுவது நான்காவது பாரங்களுக் குரியது. விலை அணு 10.

## சதி சுலோசனை

சுலோசனை என்பவள் இராவணனது மூத்த மகனுகிய இந்திரஜித்துவின் நன் மனைவி. ஆதிசேடனது மகள். இவள் இந்திரஜித்துவை மணந்தபிறகு அவனையே தெய்வமாகப் பாவித்திருந்தவள். தன் கணவன் யுத்தகளத்தில் உயிர் நீத்தகாலை தானும் அவனுடனே உடன்கட்டை ஏறினள். கற்பில் விஞ்சிய கனமணி இவளே. இது அவளது கற்பின் திறத்தைக்கூறும் ஒரு சிறந்த நூல். இது மூன்றுவது நான்காவது பாரம் மாணவர்க்கும் மிகவும் உபயோகமானது. விலை அணு 6.

## பிரகலாதன்

ஸ்ரீ மகா விஷ்ணுவை வழிபட்டு பெரும்புகழடைந்த பிரகலாதாழ்வானின் சரித்திரத்தைக் கூறுவது. இது படிக்குந்தோறும் படிப்பவர் மனதைக் கடவுள் பக்தியில் ஆழ்த்தத்தக்கது. நற்குணங்களும், நற்செய்கைகளும் கடவுளை வழிபடும் அன்பும் உண்டாக்கக் கூடியது. சிறுவர்களுக்கு எளிதில் விளங்கக்கூடிய வெகு எளிய நடையில் எழுதப்பட்டு பெரிய எழுத்தில் அச்சிடப்பட் டிருக்கிறது. நான்காம் ஐந்தாம் வகுப்புகளுக்கு உபயோகப்படத் தகுந்தது.

விலை அணு 3.

## * துருவன்

மாற்ருந்தாயினல் அவமதிக்கப்பட்டு ஸ்ரீ மகா விஷ்ணுவை வழிபட்டு பெறுதற்கரிய துருவபதத்தைப் பெற்ற ஒப்பிலா பக்தனின் சரித்திரத்தைத் தெளிவாய் எடுத்துக் காட்டுவது. இதுவும் பெரிய எழுத்தில் அச்சிடப்பட்டு இருக்கிறது. மூன்ரும் நான்காம் வகுப்புக்களுக் குரியது. விலை அணு 3.

## * மார்க்கண்டேயர்

அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவரும் விதியை மதியால் வெல்லலாம் என்பதை உலகத்திற்கு உள்ளங்கை நெல்லிக் கனிபோல் காட்டி என்றும் சிரஞ்சிவி பட்டம் பெற்ற மார்க்கண்டேயரது நல்லதாம் சரிதையை நயம்பட உரைப்பது. இதுவும் பெரிய எழுத்தில் அழகாக அச்சிடப்பட்டு இருக்கிறது. நான்காம் ஐந்தாம் வகுப்புகளுக்கு உபயோகப்படத் தகுந்தது. விலை அணு 3.

## * விசாரசன்மர்

சைவ திருத்தொண்டர்களில் ஒருவரும் சதா சிவபெருமானைத் துதி செய்வதில் கண்ணுங் கருத்துமாய் உள்ளவருமானவரின் சரித்திரத்தைச் சிறுவர்களுக்கு இன்பம் விளைவிக்கத் தகுந்த வெகு எளிய நடையில் எழுதப்பட்டு பெரிய எழுத்தில் அச்சிடப்பட்டு இருக்கிறது. மூன்ருவது நான்காவது வகுப்பு மாணவர்க்குப் பெரிதும் பயன்படுமாறு எழுதப்பட் டிருக்கிறது. விலை அணு 3.

| | | | | |
|---|---|---|---|---|
| பக்தவிஜய கதைக்கொத்து மலர் | 1. | 0 | 6 | 0 |
| ,, ,, ,, | 2. | 0 | 8 | 0 |
| ,, ,, ,, | 3. | 0 | 10 | 0 |

சைவத் திருத் தொண்டர்களின் சரிதத்தைக் கூறும் நூல் பெரிய புராணமாகும். அதுபோலவே வைணவ பக்தர்களின் சரிதத்தைக் கூறும் நூல் பக்த விஜயம் எனப்படும். பக்த விஜயம் பல பதிப்புக்கள் வெளிவந்திருக்கின்றன. இப் பக்த விஜய கதைக் கொத்திற்கும் மற்றவற்றிற்கும் பலவிதத்திலும் வித்தியாசம் உண்டென்பதை இதை வாசிப்போருக்கு நன்கு விளங்கும். இதில் தமிழ் கற்கும் இளமாணவர்க்கும் மாணவிகளுக்கும் இன்பம் விளைக்கத் தகுந்தவையும் நல்லறிவும் சீரிய ஒழுக்கமும் விளைக்கத் தக்கனவும் நீதிகளை அவர்கள் மனத்தில் பசுமரத்தில் அறைந்த ஆணி போல் பதியச்செய்யத் தகுந்தவையாகிய சிறந்த கதைகள் பக்த விஜயத்தினின்றும் தெரிந்து எடுத்து, சிறுவர்களுக் கென்றே மிக இனிய எளிய நடையில் எழுதப்பட்டு இருக்கின்றன.

## ரா. லோகநாதம் பிள்ளை
## பிரசுரித்த தமிழ்ப் புத்தகங்கள்

* சென்னை துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பெற்றவை

ஓரத்தி. ஸம்பத்து ஐயங்கார் இயற்றியவை

| | | | |
|---|---|---|---|
| கமலாஸனி ... ... ... | 1 | 0 | 0 |
| கமலபவன அற்புதம் ... ... ... | 0 | 12 | 0 |
| கமலவதனு ... ... ... | 0 | 6 | 0 |
| * பரிமள ரோஜா ... ... ... | 0 | 6 | 0 |
| * சுகந்தமாலினி ... ... ... | 0 | 6 | 0 |

பூ. அ. பாஷ்யமையங்கார், பி. எ., எல். டி., இயற்றியவை

| | | | |
|---|---|---|---|
| * முகல்மன்னர் வரலாறு (முற்பகுதி) ... | 0 | 10 | 0 |
| * ஆழ்வார்கள் சரித்திரம் ... ... | 0 | 8 | 0 |
| * நால்வர் சரித்திரம் ... ... | 0 | 8 | 0 |

ம. க. ஜயராம் நாயுடு இயற்றியவை

| | | | |
|---|---|---|---|
| * பத்தினிப் பெண்டிர் ... ... | 0 | 12 | 0 |
| * பால பக்தர்கள் ... ... ... | 0 | 10 | 0 |
| * முப்பெருங் காப்பியக் கதைகள் ... ... | 0 | 10 | 0 |
| * சதி அநசூயை ... ... ... | 0 | 8 | 0 |
| * சதி சுலோசனை ... ... ... | 0 | 6 | 0 |
| * பிரகலாதன் ... ... ... | 0 | 3 | 0 |
| * துருவன் ... ... ... | 0 | 3 | 0 |
| * மார்க்கண்டேயர் ... ... ... | 0 | 3 | 0 |
| * விசாரசன்மர் ... ... ... | 0 | 3 | 0 |

எஸ். எஸ். அருணகிரிநாத முதலியார் இயற்றியது

| | | | |
|---|---|---|---|
| * வள்ளல்களின் வரலாறு ... | 0 | 10 | 0 |

ரா. லோகநாதம் பிள்ளை,
305, வால் டாக்ஸ் ரோட்டு, சென்னை.